## குறள் தரும் சிந்தனை

கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற்று ஆங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை.

கெடுப்பதும் கெட்டவரைக் காப்பதும் மழை.







**ஆவணி 1996**

பிரதம ஆசிரியர்:
***வி.எல். ஆனந்த்.***

உதவி ஆசிரியர்கள்:
***அனுசியா ஆனந்த்.***
***எஸ். ராஜ்மோகன்.***

பிரசுரம்/விளம்பரம்:
***'ரோஜா' வெளியீட்டு நிறுவனம்***

வடிவமைப்பு/அச்சமைப்பு:
***எல். கிரிஷோத் ரைப்செட்டிங்***

அட்டை வடிவமைப்பு:
***சசி - கரன் கிராப்***

படப்பிடிப்பு/ஓவியம்:
***கருணா - கிரிஜேட்டிவ் போட்டோ***

அட்டை அச்சடிப்பு:
***விவேகா அச்சகம்***

அச்சடிப்பு:
***பரடைஸ் அச்சகம்***

விநியோகம்:
***எஸ். பிரபாகரன் (ரகு)***

Perfect Binding by:
*Central Perfect Bindery*



## ஆக்கங்கள், விளம்பரங்கள்:

தொலைபேசி: **(416) 425-2884**, தொலைநகல்: **(416) 425-2625**

மொன்றியல் தொடர்புகளுக்கு: **(514) 757-5931** (சண்)

**"ROJAH"** F.P.P.O., P.O.BOX 45593, 747 DON MILLS RD,
DON MILLS, ON. CANADA, M3C 3S4.

***மிஸிஸாகா ஸ்ரீஜெயதுர்க்கா ஆலய பிரதம குருக்களும்***
***ஸ்ரீ விஜயலட்சுமி வாசா நிலைய அதிபரும்***
***திருமணப்பதிவு அதிகாரியுமான***
***சிவஸ்ரீ பஞ்சாட்சர விஜயகுமார குருக்கள் வழங்கிய***

# நல்லாசிகள்

ரோஜா சஞ்சிகையின் மூன்றாவதாண்டு மலருக்கு எனது நல்லாசிகளையும் வாழ்த்துக்களையும் தெரிவிப்பதில் மகிழ்ச்சியடைகின்றேன்.

பிறந்து வாழ்ந்த பூமியைவிட்டு அனைத்தையும் இழந்து அகதிகளாகக் கனடாவில் குடியேற நேர்ந்தபோதிலும், எமது மக்கள் தங்கள் கலை, கலாசாரம் ஆகியவைகளை வளர்ப்பதில் காட்டி வரும் அக்கறையையும் ஆர்வத்தையும் பார்க்கும்போது அவர்களைப் பாராட்டாதிருக்க முடியாது. இவைகளுக்கெல்லாம் பெருந்தூணாக இங்குள்ள பத்திரிகைகளும், சஞ்சிகைகளும் அமைந்துள்ளன. இந்த ஊடகங்கள் இங்குள்ள எமது மக்களின் வளர்ச்சியிலும் உயர்ச்சியிலும் காட்டிவரும் அக்கறை அபரிதமானது.

வெளியீட்டுத்துறையிலுள்ள கஷ்டங்களையும், நெருக்கடிகளையும், சோதனைகளையும் அனைவரும் நன்கறிவர். இத்துணை பிரச்சனைகளையும் மாதாமாதம் சந்தித்துக்கொண்டு 'ரோஜா' இதழ் மலர்ந்து மணம் பரப்பி வருவதை ஒரு சாதனை என்றே கூறவேண்டும். தொடர்ந்து பல்லாண்டுகள் 'ரோஜா' இதழ் வெளிவரவேண்டுமென எல்லாம்வல்ல இறைவனை இறைஞ்சுகின்றேன்.

# ஆசியுரை

ஈழத்தமிழ் மக்கள் புலம் பெயர்ந்து வாழும் நாடுகளில் நம் எதிர்கால சந்ததியினர் தமிழ்மொழி, கலை, கலாசாரம், பண்பாட்டுக் கோலங்களில் இருந்து பிசகி அந்நியக் கலாசாரங்களில் மூழ்கி விடக்கூடாது என்பதில் மிகுந்த கவனமெடுத்து வருகின்றனர்.

குறிப்பாக கனடாவில் பத்திரிகைத் துறையினர் இத்தகைய முயற்சியில் முன்னின்று உழைத்து வருகின்றனர். கனடாவில் வாராந்த பத்திரிகைகள், சஞ்சிகைகள், மாதாந்த தகவல் இதழ், காலாண்டு சஞ்சிகை, வருடாந்த சஞ்சிகைகள் எனப் பல வகையில் தமது பாணிக்கேற்ப மெருகூட்டி பத்திரிகைத்துறை தம்பணியைச் செய்து வருகிறது.

இவற்றில் குறிப்பாக 'ரோஜா' சஞ்சிகை தமது பணியைத் தரமாகவும், கலைநயத்துடனும், சிறுவர் முதல் முதியோர்வரை பயன்பெறத்தக்க வகையில் செய்து வருகின்றது. மற்றும் எழுத்தாளர்கள், இலக்கிய படைப்பாளிகள், கவிஞர்கள், கலைஞர்கள் அனைவருக்கும் களம் அமைத்துக் கொடுத்து அவர்களுக்குள் ஒளிந்திருக்கும் திறமைகளை வெளிக்கொண்டு வருவதில் ரோஜா சஞ்சிகை முன்னிற்பதை யாரும் மறுக்க முடியாது. அத்துடன் இவ்வகையில் சமூக சேவையில் காலடி எடுத்து வைத்து தம் சேவையை செவ்வனே செய்வதில் 'ரோஜா' முன்னிற்கின்றது. அதனது பணி தொடர்வதற்கு வாசக பெருமக்களும், வர்த்தகப் பெரு மக்களும் தாம் வழங்கிவரும் ஆதரவை மேலும் தொடர்ந்து வழங்கி ரோஜாவின் வளர்ச்சி தொடர்ந்து நடைபெற உதவுவதோடு மாத இதழாக வெளிவரும் ரோஜா வார இதழாக வெளிவர வேண்டும். அது வாசகர்களின் கைகளிலேயே உள்ளது. நிச்சயமாக வாசகர்கள் தமது ஆதரவை வழங்குவார்கள்.

கனடாவில் எதிர்கால சந்ததியும் தேமதுரத் தமிழை உலகமெல்லாம் பரவும் வகை செய்ய வேண்டும் எனும் நன்நோக்கோடு சேவை புரியும் ரோஜா இதழ் மென்மேலும் வளர்ச்சியடைந்து பத்திரிகைத் துறையில் தனித்துவம் மிக்கதாக மிளிர வாசகர்களாகிய உங்கள் அனைவர் சார்பிலும், என் சார்பிலும் நல்லாசியையும், நல்வாழ்த்துக்களையும் கூறி ஈழத்தில் நடைபெறும் போர்ச் சூழலில் பாதிப்படைந்த எம் உடன் பிறப்புக்கள் அனைவரும் நிம்மதியுடனும், சுபீட்சத்துடனும் இன்னல்களின்றி வாழ வேண்டுமென கனடாவாழ் தமிழ் மக்கள் அனைவரும் இறைவனைப் பிரார்த்திப் போமாக.

சுபம்

இப்படிக்கு

**சிவஸ்ரீ பஞ்சாட்சர விஜயகுமார குருக்கள்**

ஸ்ரீ கௌரி மங்கள சேவை

# வாழ்த்துக்கள்!



பல்வேறு துறைகளிலும், பல்வேறு வழிகளிலும் நசுக்கப்பட்டு வரும் ஈழத் தமிழ் மக்களைப் பொறுத்தவரையில் புலம்பெயர்ந்த நாடுகளில் வாழும் எம் முன்னே உள்ள, எமது தாயகம் நோக்கிய பணிகளுக்கு அளவுகோல் கிடையவே கிடையாது.

சகல சுகங்களையும், சுதந்திரங்களையும் தொலைத்துவிட்டு மாற்றானிடம் பறிகொடுத்து விட்டு நடைப்பிணமாக வாழ்ந்து கொண்டிருக்கும் நாம், இந்தப் பணிகளுக்கு புலம்பெயர்ந்த நாடுகளிலுள்ள எமது பொதுசனத் தொடர்பு சாதனங்கள் மூலம் அளப்பரிய பங்கைச் செலுத்தலாம் என்பதில் இருவேறு கருத்துக்கள் இருக்க முடியாது.

இந்த வகையில் நான்காவதாண்டில் காலடி எடுத்து வைக்கும் கனடா, ரொறன்ரோவிலிருந்து வெளிவரும் 'ரோஜா' சஞ்சிகை தன்னால் முடிந்தளவு பங்கை செலுத்திக் கொண்டிருப்பது பாராட்டுக்குரியது.

புலம்பெயர்ந்த நாடுகளில் உள்ள ஈழத் தமிழர்களின் பத்திரிகைகள், சஞ்சிகைகள், வானொலிகள், தொலைக்காட்சிகளின் செயற்பாடுகள் 1990களில் ஓரளவு விருத்தி கண்டுள்ள போதிலும் இன்னமும் அவை முற்று முழுதான வளர்ச்சி நிலையை அடையவில்லை என்றே கூறவேண்டும்.

'நான்'..... 'எனது'..... 'எனது குடும்பம்'....... 'எனது வாழ்க்கை'....... என்ற எண்ணம் எமது மக்களிடையே தழைத்தோங்கி நிற்பதே எமது இன்றைய பின்தங்கிய நிலைக்கு முக்கிய காரணியாகும்.

'நாம்'....... 'எமது'..... 'எமது மக்கள்'.... 'எமது மண்'.... என்ற பரந்து பட்ட சிந்தனைக்குள் 'நான்'- 'எனது' என்ற எண்ணமும் உள்ளடக்கம் என்பதையும்......

'நாம்', 'எமது' என்ற சிந்தனை 'நான்', 'எனது' என்ற எண்ணத்துக்கு உயிரூட்டும் என்பதையும் புலம்பெயர்ந்த எமது மக்களும் பொதுசனத் தொடர்பு சாதனங்களும் உள்ளத்தில் இருத்தும் பட்சத்தில் எமது இலக்கு, இலட்சியம் இலகுவில் கைகூடும் என்பதில் சந்தேகமில்லை.

எமது மத்தியில் இலை மறை காய் போல் மறைந்திருக்கும் படைப்பாளிகளின் பயனுள்ள படைப்புகள் உரிய வேளையில் மக்களைச் சென்றடைய வேண்டும்.

அந்தப் படைப்புகள் எமது இனவிடுதலையை வென்றெடுக்கும் உந்து சக்திகளாகவும் அமைய வேண்டும். இந்த ரீதியில் அவர்களுக்குக் களம் அமைத்துக் கொர்டுக்கும் ரோஜா தொடர்ந்து நறுமணம் பரப்ப இதயத்தால் வாழ்த்தி அன்புடனும் ஆசியுடனும் விடைபெறும்

## இரத்தினம் கந்தசாமி

இணைஆசிரியர்
ஈழநாடு

## மலர்ந்த ரோஜா - பேசும் ஆசிரியரின் பேனா



என் இதயம் நிறைந்த வாசகர்களுக்கு!
உங்களின் ஆதரவாலும்....
எழுத்தாளர்கள்.....விளம்பரதாரர்களின்
தொடர்ச்சியான ஒத்துழைப்பாலும்
மூன்று வருடங்கள் கடந்து பூத்துக்
குலுங்குகின்றது உங்கள் 'ரோஜா'

இவர்கள் அனைவருக்கும்
எமது இதய நன்றிகள்!
வாசகர்களாகிய உங்களது ஆசியுடன்
நான்காவது ஆண்டில் மலரும் 'ரோஜா'
பல புதிய பகுதிகளுடன் பூத்துக் குலுங்கி
தொடர்ந்து மணம் பரப்பும் என்று உறுதி
கூறி விடை பெறுகிறோம்.

அன்புடன்,
வி. என். ஆனந்த்



# இதய நன்றிகள்

ரோஜா சஞ்சிகையின் மூன்றாவதாண்டு நிறைவு விழா மலரையும், நிலாகுகதாசனின் 'இன்னொருநாளில் உயிர்ப்பேன்' கவிதைத் தொகுதியையும் வெளியிடுவதில் இரவு பகல் பாராது தங்கள் பொன்னான நேரத்தையும் பொருட்படுத்தாது பல வழிகளில் உதவிய...

ரஞ்சி திருச்செல்வம்
அனுஷியா ஆனந்த்
கலைவாணி ராஜகுமாரன்
எஸ். திருச்செல்வம்
சசி பத்மநாதன் (ஹரன் கிறாப்)
கருணா (கிரியேட்டிப் போட்டோ)
எஸ். ராஜ்மோகன்
பரமு சிவசுப்பிரமணியம்
நிலா குகதாசன்
எஸ் ஜெகதீசன்
சுரேஷ் (பரடைஸ் அச்சகம்)
சிறி (விவேகா அச்சகம்)
*Mike yen chang (Central Perfect Bindery)*

மற்றும்

தங்கள் விலைமதிக்க முடியாத எழுத்துக்களால்......
இம்மலரை அலங்கரிக்கும் எழுத்தாளர்கள்,
கலைஞர்கள்.......

எமது விளம்பரங்களை நட்பு ரீதியில் பிரசுரித்த சஞ்சிகை, பத்திரிகைள்......

தமிழர் தகவல், நம்நாடு, ஈழநாடு

வானொலிகள்.....

ரேடியோ ஆசியா, தமிழ்ஒலி,
கனடியத் தமிழ் ஒலிபரப்புக் கூட்டுத்தாபனம், கீதவாணி

மற்றும் உதவிய அனைவருக்கும் எமது இதய நன்றிகள்.

ஆசிரியர்

# "தமிழ் எங்கள் உயிருக்கு நேர்"

உலகெங்கும் இருக்கின்ற தமிழர் வீட்டில் உயர்மொழியாம் தமிழ் தன்னில் பேசுதற்கும் பலவாண்டாய்ப் பிறநாட்டில் வாழ்கின்றாரின் பசுந் தளிர்கள் தாய்மொழியாம் தமிழைக் கற்க நலமான திட்டங்கள் தீட்டி ஆங்கே நம்மவர்கள் தமிழ் படிக்கத் தூண்ட வேண்டும் பலபேர் தாம் கூடுமிடம் தமிழ் பேசும் பழக்கத்தைக் கடைப்பிடித்தால் தமிழும் வாழும்.

மாறுபட்ட பண்பாட்டுச் சூழல் தம்மில் மனம் தோய்ந்து அந்நாட்டில் வாழும் போதும் வேறுபட்டு நிற்கும் நம் பண்டைப் பண்பை வெளிநாட்டார் போற்றுமாறு வீட்டில் காத்துப் பேறு பெற்ற ஆண் பெண்ணின் ஒழுக்கந் தம்மை பிறந்திட்ட தம் குழந்தை உணரும் வண்ணம் வேராக அடிமனதில் தோயப், பெற்றோர் வீட்டினிலே தமிழ்ப் பண்பில் வளர்க்க வேண்டும்!

வாழுகின்ற நாட்டினிலே கல்வி கற்றும் வளர்ந்துள்ள அம் மொழியின் நூல்கள் கற்றும் கூழுக்காய்ச் சென்றுள்ள எண்ணம் தன்னில் குனிகின்ற அடிமையராய் மாறிடாமல் வாழுகின்ற நம் மொழியின் இலக்கி யத்தை வளமான அகப்புறத்தின் மேன்மை தன்னை ஓதுதற்கு வழி வகைகள் செய்ய வேண்டும். ஒப்பற்ற குறள் நாளும் ஒலிக்க வேண்டும்.

மேல்நாட்டில் வாழ்வதனால் நாகரிக மேம்பாட்டால் வாழ்வுதனில் இணைந்திங் கேநல் ஆல்போலே தழைத்திருக்கும் தமிழ்க்கலைகள் அழிதற்கே விட்டிடாமல் வளருகின்ற பால்மனத்துக் குழவியருக்குப் பயிற்று வித்துப் பழந்தமிழின் பொம்மலாட்டக் கூத்துப் பொங்கல் வேல்விழியின் சிற்றூரின் கூத்தை வீர விளையாட்டைத் தொடர்வதற்கே முயல வேண்டும்!

பாவலர் கருமலைத் தமிழாழனின் உணர்ச்சிகள்.

கனடாவில் வாழ்கின்ற எமது பிள்ளைகளை மிகவும் அவதான-மாக வளர்த்தெடுக்க வேண்டும்.

தமிழ் மொழிமேல் அவர்களுக்கு பற்றுதலை ஏற்படுத்த வேண்டும்!

எமது கலை, கலாசாரம், பண்பாடு ஆகியவற்றின் பெருமைகளை எடுத்தியம்ப வேண்டும்.

'தமிழருவி' சந்திரமோகன்

உலகத்தின் எப்பகுதியிலும் எமது கலைக்கு இருக்கும் மகிமைகளை எடுத்துக்காட்ட வேண்டும்.

வெள்ளைக்காரர்களாக இருந்தாலும் அல்லது வேறு எந்த இனத்தவர் களாகவிருந்தாலும் எமது கலையை மூக்கின்மேல் விரல்வைத்துப் பார்ப் பதை தெரியப்படுத்த வேண்டும்.

கனடா நாடு எமது கலாசாரத்திற்கு மாறுபட்டதொன்று!

இதன் காரணமாகத் தடுமாறுகின்ற பெரியோர்கள் ஏராளம்!

கல்வி கற்றவர்கள் - எமது நாட்டில் பெரும் பதவிகளில் இருந்தவர்கள் கூட கனடாவில் தடுமாறுகின்றார்கள்.

இந்நிலையில் எமது சிறார்கள் தடுமாறுவது சாதாரணமானதே!

அவர்களுக்கு நாம்தான் வழிகாட்டி களாக இருக்க வேண்டும்.

பாடசாலைகளின் மாறுபட்ட நிலைகள் பழக்க வழக்கங்கள் ஆகியனவற்றைப் பற்றிப் புரியவைக்க வேண்டும்.

நிறபேதம் கறுப்பு வெள்ளை என்பவற்றையும் அவற்றுடன் எமது நிறத்தையும் சேர்த்து விளக்கங்கள் கொடுக்க வேண்டும்.

வெள்ளைகள் என்றால் இப்பூவுலகில் மேலானவர்கள் என்ற தப்பான அபிப்பிராயத்தை போக்கடிக்க வேண்டும்.

ஆங்கில மொழியை நாம் கற்றுக் கொள்ள வேண்டிய அவசியத்தையும், அத்தோடு எமது மொழியில் பாண்டித்தியம் பெற்று மிளிர வேண்டிய அவசியத்தையும் பதிய வைக்க வேண்டும்.

அத்தோடு.....

'யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம் பாமரராய், விலங்கு களாய் உலகனைத்தும் இகழ்ச்சி சொலப் பான்மை கெட்டு நாமமது தமிழரெனக் கொண்டு இங்கு வாழ்ந்திடுதல் நன்றோ? சொல்லீர் தேமதுரத் தமிழோசை உலகெலாம் பரவும் வகைசெய்தல் வேண்டும். எங்கள் தமிழ்மொழி செழிப்புற உலகமெலாம் தமிழ் முழக்கம் செய்வோம்!'

எங்கள் தமிழின் தொன்மை - இனிமை எமது செல்வங்களுக்குத் தெரியட்டும். எம்மைத் தொடர்ந்து அவர்கள் தமிழை வளர்க்கட்டும்.

தமிழீழத்தில் எமது இளைஞர்கள் ஏன் சிங்களவர்களோடு போர் தொடுத்துள்ளார்கள்?

எமது மொழி - கலை - கலாசாரம் பாதுகாக்கப்பட வேண்டும் என்ற நோக்கத்தில்.

எமது உரிமைகளைத் தாருங்கள் என தடவிக் கேட்டோம். தரவில்லை! அதனால் தட்டிக் கேட்கின்றோம்.

ஆட்சியில் இருக்கும் எம்மிடம் தானே அதிகாரம் உள்ளது. தமிழர்கள் எம்மை மிஞ்சமுடியாது என தப்புக் கணக்குப் போட்டார்கள் ஆட்சியாளர்கள்.

ஆனால் தோற்றுவிட்டது சிங்களம்!

வீறு கொண்டுள்ள எமது வேங்கை களுக்கு முன்னால் முகங்கொடுக்க முடியாது தடுமாறுகின்றது சிங்கள அரசு.

சரித்திரம் காணாத பெரும் தோல் வியை சந்திரிகா அரசு முல்லைத்தீவு முகாமில் பெற்றுள்ளது.

விடுதலைப்புலிகளின் வெற்றியை உலகமே பாராட்டுகின்றது!

முல்லைத்தீவு முகாமை துடைத்து எறிந்துவிட்டார்கள், எமது இளைஞர்கள்!

முல்லைத்தீவு முகாம் தோல்வியால் அரசே ஆட்டங் கொண்டுள்ளது!

'முல்லைத்தீவு முகாமைப் பறி கொடுத்த அரசே பதவி விலகு.....
ஆட்சி செய்ய உனக்கு என்ன......
அருகதை.....
வெட்கம்! வெட்கம்.....!'

என சிங்கள மக்கள் கூக்குரல் கொடுக்கத் தொடங்கிவிட்டார்கள்!

எதிர்க்கட்சி யூ.என்.பி யும் சந்திரிகா அரசைப் பார்த்துக் கேலி செய்கிறது.

சந்திரிகாவின் பொதுஜன ஐக்கிய முன்னணி அரசுக்குள்ளேயே ஆயிரம் பிரச்சனைகள்!

அரசில் அங்கம் வகிக்கும் கட்சிகளுக் கிடையே பெரும் மோதல்கள்!

ஸ்ரீமணி அத்துலத்முதலி சந்திரிகா வுக்கு எதிராகப் போர்க்கொடி!

சிறிமா - சந்திரிகா மோதல்கள்!

சிறிமா - அனுருத்த ரத்வத்தை வேறுபாடுகள்!

சந்திரிகா அரசுடன் கொழும்பில் தடுமாறும் தமிழ்க் கட்சிகள்!

போகும் போக்கில் சந்திரிகா அரசு கெதியில் கவிழும் அபாயம்தான்!

சந்திரிகா அரசு கவிண்டால் யார் பதவிக்கு வருவார்கள்?
ஐக்கிய தேசியக் கட்சியா?

தமிழர்களைப் பொறுத்த வரையில் ஐக்கிய தேசியக் கட்சி பதவிக்கு வந்தாலும் சுதந்திரக் கட்சி ஆட்சி அமைத்தாலும் ஒன்றுதான்.

ஒன்று பேய் என்றால் மற்றையது பிசாசு!

எமக்கு பேயும் வேண்டாம்!
பிசாசும் வேண்டாம்!

எம்மை நாம் ஆண்டால் போதும்.

இன்று தமிழர் சார்பாகவே காற்று வீசுகின்றது.

முல்லைத்தீவு வெற்றியினால்.... விடுதலைப் புலிகளின் கை ஓங்கி யுள்ளது - தேவையான பலகோடி ரூபா ஆயுதங்கள் கைவசம்!

எடுத்த ஆயுதங்களை வைத்துக் கொண்டே வேங்கைகள் அரசுமேல் பாயப்போகின்றன!

ஸ்ரீலங்கா அரசு பாய்ந்து பாய்ந்து இறக்குமதி செய்யும் ஆயுதங்களில் ஒரு விகிதாசாரம் எப்படியும் விடுதலைப்புலிகளின் கைகளுக்குள் போய்விடும்!

விடுதலைப் புலிகளுக்கும் சேர்த் துத்தான் ஸ்ரீலங்கா அரசு ஆயுதங் களை இறக்குமதி செய்கின்றது!

சிங்கள அரசே!
ஒரு ஆலோசனை.....!
உனக்கு ஒரு இறுதிச் சந்தர்ப்பம்!

உடன் விடுதலைப்புலிகளுடன் நிபந்தனை அற்ற முறையில் பேச்சுவார்த்தை நடத்து!

தமிழர்கள் கேட்பதைக் கொடுத்து சமாதானத்தை ஏற்படுத்து!

கௌரவமாக பிரச்சனைகளுக்குத் தீர்வுகாண்!

மேலும் காலம் தாழ்த்தினால் நீ ஆபத்தில் சிக்கப்போகின்றாய்!

தங்கள் உரிமைகளை - அவர்கள் கேட்பதை அடித்துப் பறிக்கப் போகின்றார்கள் விடுதலைப்புலிகள்!

அவமானப்படப்போகின்றாய் இலங்கை அரசே!

கௌரவமாகத் தப்பித்துக் கொள்ளக் கூடாதா?

தமிழைக் காப்பதற்காக போர்க் கொடி ஏந்தியுள்ளார்கள் தமிழகத் தில் இளைஞர்கள்!

நாமும் கனடாவில் எமது சிறார்கள் தமிழ்கற்று, எமது கலை, கலா சாரத்தை மேம்பாடடையச் செய்வ தற்கு தமிழ்க் கொடியை ஏந்துவோமா? எல்லாவற்றோடும் முக்கியமான ஒரு விடயத்தை நாம் கவனத்தில் எடுக்க வேண்டும்.

எமது தாய்த் திருநாட்டிலிருந்து புலம்பெயர்ந்து சிதறி நாம் இன்று உலகம் பூராவும் வாழ்ந்துகொண்டி ருக்கின்றோம்.

எமது மண்ணை நினைவில் நிறுத்தி அப் பசுமையான நினைவுகளோடு நாம் வாழ்ந்து வருகின்றோம்.

எம் மண்ணை நினைக்கும் போதெல்லாம் நெஞ்சம் வேதனை யால் வெடிக்கின்றது!

மண்ணின் மைந்தர்கள் படும் வேத னைகள் வார்த்தைகளால் வடிக்க முடியாதன!

அந்த மண்ணிற்கு நாம் மீண்டும் திரும்பிச் செல்வோமா? அன்று நாம்வாழ்ந்த வாழ்க்கையை மீண்டும் அனுபவிப்போமா? நாம் எப்போது செல்லக்கூடிய சூழ்நிலை ஏற்படும்? அல்லது எமது மண்ணைப் பார்க் காமலேயே மடிந்து விடுவோமா?

எத்தனை கேள்விகளை மனதில் சுமந்து கொண்டு நாம் எல்லோரும் வாழ்ந்து வருகின்றோம்!

ஒன்றாக ஒருகுடும்பமாக ஒரு கிராமத்தில் வாழ்ந்துவிட்ட எம்மை சிதற அடித்துவிட்டார்களே சிங்கள ஆட்சியாளர்கள்!

தாய் - தந்தையரைப் பிரிந்த பிள்ளைகள், கணவனைப் பிரிந்த மனைவி, மனைவியைப் பிரிந்த கணவன் சகோதரர்கள் ஒருவரை-யொருவர் பிரிந்து நாம் இன்று சிதறிவிட்டோம்!

இப்படியான சூழ்நிலைகளை எமக்கு ஏற்படுத்தித் தந்தவர்கள் யார்?

ஆணவம் அகங்காரம் தலைக் கேறிய சிங்கள அதிகார வர்க்கம்!

இவையெல்லாம் பார்த்துப் பொறுக்க முடியாத எமது இளைஞர்கள் இன்று ஆயுதம் ஏந்தியுள்ளார்கள்!

எம் எல்லோரது விடுதலைக்காகவும் இளைஞர்கள் வீர காவியம் படைக் கின்றார்கள்!

அவர்கள் அழிந்தாலும், அவர்கள் ஆன்மா எம்மோடு என்றும் வாழும்!

இச்சமயத்தில் நாம் கவனத்தில் எடுக்க வேண்டியது... கனடாவில் உள்ள எமது பிள்ளைகளுக்கு நாம் எமது நாட்டில் நடப்பவைகளைத் தெளிவு படுத்த வேண்டும்!

எமது பிரச்சனைகளை அவர் களுக்கு எடுத்துக் கூற வேண்டும்!

தமிழ்மொழிப்பற்றை அவர்களுக்கு ஊட்ட வேண்டும்!

இவைகளை நாம் பெரும் பொறுப்பாக எடுத்து செயற்படுத்த வேண்டும்!

எமது வருங்காலச் சந்ததியை நல்ல முறையில் வளர்த்தெடுப்போமா?



**நன்றிகள்!**

இம்மலரின் அட்டைப் படத்தைத் தந்துதவிய தமிழர் புனர் வாழ்வுக் கழகத்திற்கு எமது நன்றிகள்.

# தமிழ் வாழ்க!

பெருங்கவிக்கோ
**வா. மு. சேதுராமன்**

இன்றொரு நல்லா நாளே!
　　இனிய நம் இளவல் 'ஆனந்த்'
நன்றொரு கூடல் கண்டேன்!
　　நனி இதழ் 'உரோசா' என்னும்
தென்றலின் தேடல் கண்டேன்,
　　திசைத்தமிழ் மணக்கக் கண்டேன்!
அன்றிலின் அன்பு கண்டேன்
　　ஆனந்தின் முயற்சிவெல்க!

கனடாவில் பல்லிதழ்கள்
　　கனித்தமிழ் வளர்க்கக் கண்டேன்
இனம்வாழ மொழியும் வாழ
　　எடுத்தநன் முயற்சி வாழ்க!
நனவாகி வளர்ந்தே ஓங்கி
　　நற்றமிழ் இதழாம் உரோசா
மனத்தோட்டம் உலவவேண்டும்
　　வண்டமிழ் செழிக்க வென்றே!

கருணாவென் னும்நல் நண்பர்
　　கவினுறு நிழற்ப டங்கள்
அருமையாய் எடுத்தல் கண்டேன்
　　அழகொளிர் நலங்கள் வாழி!
தருமத்தை சிதைப்போர் ஈழம்
　　தான்வீழ தமிழீ ழம்தான்
வருவதைக் காண வேண்டும்
　　வரலாறு தொடர்க மாதேர்!

# ஈழத்துத் தமிழ்ச் சஞ்சிகை உலகுக்கு வயது ஐம்பது ஆண்டுகள்!

ஈழத்துத் தமிழ்ச் சஞ்சிகை உலகம் பற்றிப் பேசுபவர்களும், எழுதுபவர்களும் மறுமலர்ச்சிக் காலத்திலிருந்தே ஆரம்பிப்பர். 'மறுமலர்ச்சி' என்றால் என்ன என்று பலரும் கேட்கக்கூடும். தற்கால இலக்கியகாரரில் பலருக்கும் 'மறுமலர்ச்சிக் காலம்' என்பது தெரியாததாக இருப்பதையும் அவதானிக்க முடிகின்றது.

இலங்கைத் தமிழ் எழுத்தாளர்களின் முதலாவது அமைப்பாக உருவானது மறுமலர்ச்சிச் சங்கம். 'தமிழ் இலக்கிய மறுமலர்ச்சிச் சங்கம்' என்ற பெயரில்

## திரு எஸ். திருச்செல்வம்

இந்த அமைப்பு பதிவுசெய்யப்பட்டிருந்தது. இதனையே சுருக்கமாக 'மறுமலர்ச்சிக் கழகம்' என்று அனைவரும் அழைப்பர். 1943ம் ஆண்டு ஜூன் மாதம் 13ம் திகதி யாழ்ப்பாணம் கஸ்தூரியார் வீதியில் சிற்பக் கலைஞர் ஒருவரின் வீட்டு விறாந்தையில் சங்கம் உத்தியோகபூர்வமாக அங்குரார்ப்பணம் செய்யப்பட்டது. அப்போது இளம் எழுத்தாளர்களாக இருந்தவர்களான
அ. செ. முருகானந்தன் (அ.செ.மு),
அ. ந. கந்தசாமி, நாவற்குழியூர்
நடராசன் (கலாநிதி கே. எஸ். நடராசா)
பண்டிதர் ச. பஞ்சாட்சர சர்மா
(கோப்பாய்),
தி. ச. வரதராஜன் (வரதர்)
து. உருத்திரமூர்த்தி (மஹாகவி)
ஆகியோரும் இன்னும் சிலரும் சேர்ந்து 'தமிழ் இலக்கிய மறுமலர்ச்சிச் சங்கத்தை' உருவாக்கினர்.

ஐம்பத்து மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் உருவாக்கப்பட்ட இந்தச் சங்கத்தின் ஸ்தாபகர்களில் நால்வர் (கனக செந்திநாதன், நாவற்குழியூர் நடராசன், அ.ந.கந்தசாமி, மஹாகவி) இப்போது எம்மிடையே இல்லை. அ.செ.முருகானந்தம் அவர்கள் யாழ்ப்பாணம் 'ஈழநாடு' வாரமலர் பத்திரிகையின் ஆசிரியராகப் பணியாற்றியவர். சங்கத்தை அமைக்கும் வேலையில் முக்கியஸ்தராகவிருந்த வரதர் அவர்களின் இலக்கியச் சேவைகளைப் பாராட்டி இரண்டு மாதங்களுக்கு முன்னர் கொழும்பில் பெருவிழா ஒன்று நடத்தப்பெற்றது.

தமிழ் இலக்கிய மறுமலர்ச்சிச் சங்கம் உருவானதையடுத்து சஞ்சிகையொன்றினை வெளியிட வேண்டுமென்ற முடிவு எடுக்கப்பெற்றது. வரதர் அவர்கள் தமது முயற்சியினால் 'மறுமலர்ச்சி' என்ற பெயரில் கையெழுத்துச் சஞ்சிகையைக் கொண்டு வந்தார். ஆனாலும் இலக்கியத் தாகம் முற்றுப் பெறவில்லை. இதன் பலனாக 'மறுமலர்ச்சி' அச்சுவாகனமேறியது.

ஈழத்தமிழ் வரலாற்றில் முதலாவதாக வெளியான இலக்கியச் சஞ்சிகை என்ற பெருமை மறுமலர்ச்சி'க்குக் கிடைத்தது. இதன் காரணமாகவே, ஈழத்து இலக்கிய வளர்ச்சி பற்றிப் பேசும்போதும், ஈழத்துத் தமிழ் சஞ்சிகை வரலாறு பற்றிப் பேசும்போதும் 'மறுமலர்ச்சி' என்கின்ற பெயர் வரலாற்றுப் புகழுடன் துலங்குகின்றது.

முதலாவது 'மறுமலர்ச்சி' இதழ் 1946ம் ஆண்டு மார்ச் மாதம் வெளியானது.

இந்த வகையில் 1996ம் ஆண்டானது (தற்போதைய ஆண்டு) ஈழத்துத் தமிழ்ச் சஞ்சிகை வரலாற்றின் ஐம்பதாவது ஆண்டாக (பொன் விழா) அமைந்துள்ளது. கடந்த ஐம்பது ஆண்டுகளுக்குள் சுமார் இருநூறுக்கும் அதிகமான தமிழ்ச் சஞ்சிகைகள் பிறந்த நாட்டிலிருந்து வெளிவந்துள்ளன. இதன் தொடர்ச்சியாக நாம் குடி புகுந்துள்ள நாடுகளிலிருந்தும் ஏராளமான தமிழ்ச் சஞ்சிகைகள் வெளிவரத் தொடங்கின. மிகக்கூடுதலானவர்கள் கனடிய மண்ணில் பாதம் பதித்ததால், சுமார் பத்து வரையிலான சஞ்சிகைகள் இங்கு பிரசவம் கண்டுள்ளன.

ஈழத்துச் சஞ்சிகை வரலாற்றில் முக்கியமான இடத்தினைப் பெற்ற மூன்று வெளியீடுகளை அறிமுகம் செய்வதே இக்கட்டுரையின் நோக்கம். மூன்று சஞ்சிகைகளும் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு இலக்கியப் பின்னணியுடன், வெவ்வேறு தளத்தில் நின்று வெளிவந்தவை. எனினும், இவைகளின் இலக்கிய முயற்சி தமிழிலக்கியத்தைச் செம்மைப்படுத்தியதுடன் பெருமளவிலான இளம் எழுத்தாளர்களையும், இலைமறை காயாக இருந்தவர்களையும் இலக்கியச் சந்தையில் அறிமுகம் செய்து வைத்தது என்று சொல்லலாம்.

1940களில் வெளிவந்த 'மறுமலர்ச்சி', 1950களில் வெளிவர ஆரம்பித்த 'கலைச்செல்வி', 1960களில் வெளிவரத் தொடங்கி, தொடர்ந்து வந்துகொண்டிருக்கும் 'மல்லிகை' ஆகிய மூன்று சஞ்சிகைகள் பற்றியும் இங்கு மேலோட்டமாகக் கவனிப்போம்.

## மறுமலர்ச்சி

1946ம் ஆண்டு மார்ச் மாதத்திலிருந்து 1948 அக்டோபர் வரை 'மறுமலர்ச்சி' இதழ்கள் வெளிவந்தன. எல்லாமாக முப்பது மாதங்களில் 24 இதழ்கள் வெளிவந்துள்ளன. இந்த 24 இதழ்கள் பற்றிய விரிவான விமர்சனக் கட்டுரையை பிரபல எழுத்தாளர் சொக்கன் அவர்கள் எழுதியுள்ளார். இது கொழும்பிலிருந்து வெளிவரும் தினகரன் வாரமஞ்சரியில் 1980ம் ஆண்டு ஜுலை மாதம் தொடக்கம் நவம்பர் மாதம் வரை தொடர்ச்சியாக வெளிவந்தது.

1946ம் ஆண்டு காலப் பகுதியில் சஞ்சிகையொன்றினைக் கொண்டு வருவது என்பது இலகுவான காரியமன்று. விடயதான சேகரிப்பு, அச்சடிப்பு, விற்பனை என்பவைகளை விட, தேவையான நிதியைச் சேகரிப்பது பெரும் சிரமம். இதனால் ஐந்து பேர் சேர்ந்து ஆளுக்கு ஐம்பது ரூபா (இப்போதைய ஐம்பதாயிரம் ரூபாவுக்குச் சமம்) வீதம் போட்டுச் சஞ்சிகையை ஆரம்பித்தனர். நாவற்குழியூர் நடராசன், பண்டிதர் ச. பஞ்சாட்சர சர்மா, வரதர், கவிஞர் சாரதா (க. இ. குமாரசாமி), ஆசிரியர் க. நா. மதியாபரணம் ஆகியோரே நிதியுதவி வழங்கிய மூலவர்கள். வரதர் அவர்கள் பொறுப்பாசிரியர்.

யாழ்ப்பாணம் ஆஸ்பத்திரி வீதியிலிருந்த பார்வதி அச்சகத்தில் 125 ரூபா செலவில் ஐநூறு பிரதிகளுடன் முதலாவது இதழ் மலர்ந்தது. அதனுடன் சேர்ந்து ஒரு சட்டப் பிரச்சனையும் வந்தது. யாழ்ப்பாணப் பிரமுகர்கள் இருவர், சஞ்சிகையின் விற்பனைக்குத் தடை விதிக்கும் மனுவை நீதிமன்றத்தில் தாக்கல் செய்திருந்தனர். சுமார் இரண்டு மாதங்கள் நீதிமன்ற விசாரணைகளை முடித்த பின்னரே முதலாவது இதழ் வெளியில் வந்தது.

யாழப்பாணம், காங்கேசன்துறை வீதியில் மூன்று ரூபா மாதாந்த வாடகைக்கு அறையொன்றினை எடுத்து மறுமலர்ச்சிக் கந்தோர் செயற்படத் தொடங்கியது.

மறுமலர்ச்சிச் சங்க ஸ்தாபகர்களான ஏழு பேரும் தொடர்ச்சியாக அனேகமான இதழ்களிலும் எழுதியுள்ளனர். இவர்களுடன் சு. இராசநாயகன், க. சி. குலரத்தினம், சு. வேலுப்பிள்ளை (சு.வே), க. சொக்கலிங்கம் (சொக்கன்), சோ. தியாகராசா, கு. பெரியதம்பி ஆகியோரின் படைப்புகளும் மறுமலர்ச்சியில் இடம்பிடித்துள்ளன. இந்திய எழுத்தாளர்களில் ப. கோதண்டராமன், வல்லிக்கண்ணன் ஆகியோர் அதிகமாக மறுமலர்ச்சியில் எழுதியுள்ளனர்.

இந்திய எழுத்தாளர்களின் சிறந்த நாவல்களைத் தமிழில் மொழி பெயர்த்து வெளியிடவும், மறுபிரசுரம் செய்யவும் மறுமலர்ச்சிக்காரர் பல தடவைகள் முயன்றுள்ளனர். ஒருதடவை இவ்வாறு ஒரு மொழிபெயர்ப்பினைப் பெறுவதற்கு முற்பணமாக ஐம்பது ரூபாவை அனுப்பி ஏமாற்றப்பட்டுமுள்ளனர். மொழிபெயர்ப்புச் செய்வதாக ஒப்புக் கொண்டு பணம்பெற்ற 'ஸ்ரீ.ஸ்ரீ' என்பவரின் வாக்குறுதியை நம்பி, மறுமலர்ச்சி இதழில் 'காண்டேகரின் பொன் வண்டி விரைவில் வெளிவரும்' என்று விளம்பரம் செய்து தாம் அவமானத்தைச் சந்தித்ததாக வரதர் அவர்கள் தமது வானொலிப் பேச்சொன்றில் குறிப்பிட்டுள்ளார். "எழுத்தாளர்கள் என்றால் அவர்கள் உயர்ந்தவர்கள், நேர்மையானவர்கள் என்று நான் வைத்திருந்த நம்பிக்கை 'பொன் வண்டி'யின் பின்னர் சிதறுண்டு போனது" என்று வரதர் (முரசொலி - அக்டோபர் 1986) வேதனையுடன் குறிப்பிட்டுள்ளார்.

மறுமலர்ச்சி அதன் முதல் இதழிலிருந்து கடைசி இதழ் வரை தனது முன் அட்டையில் அதிக கவனம் செலுத்தியுள்ளது. 'புளக்' பாவித்து இரட்டை வர்ணங்களில் (டபிள் கலர்) அட்டை தயாரிக்கப்பட்டுள்ளது. இதன் கவர்ச்சியும்கூட சகல இதழ்களும் விற்பனையாவதற்குக் காரணமாக இருந்துள்ளது. யாழ்ப்பாணத்தின் புகழ்பெற்ற 'எல்.கே.எஸ்' நகை மாளிகையின் விளம்பரம் பின்அட்டையில் நிரந்தரமாக வெளிவந்தது. அப்போது இதற்கு இருபத்தைந்து ரூபாவை (ஒரு இதழுக்கு) அவர்கள் வழங்கியுள்ளனர்.

நிதியின்மை, ஆட்பலமின்மை, இலக்கிய உலகில் ஆரம்பமான 'குழு' நிலை ஆகியவை உட்படப் பல காரணங்களால் மறுமலர்ச்சியைத் தொடர்ந்து வெளியிட முடியாத நெருக்கடி உருவானது. எந்தவிதமான மனத்தாங்கலுமின்றி 1948 அக்டோபர் மாதத்தில் இலக்கிய உலகிலிருந்து 'மறுமலர்ச்சி' ஓய்வு பெற்றது. தரமான, நிறைவான, இலக்கியச் சஞ்சிகையொன்றின் மரணம் உடனடியாகப் பாதிப்பை ஏற்படுத்தவில்லை. அதேசமயம், தனக்கெனத் தனியான ஒரு இடத்தினை 'மறுமலர்ச்சி' நிலைநிறுத்தியுள்ளது என்பதனை இப்போது உணரக்கூடியதாகவுள்ளது.

## கலைச்செல்வி

ஈழத்து இலக்கிய உலகில் வெற்றிகரமாகப் பவனி வந்து, ஸ்திரமான ஒரு பெயரினைப் பெற்ற சஞ்சிகை 'கலைச்செல்வி'. இதன் ஆசிரியராக இருந்து இதனைச் சிறப்பாக வெளியிட்டவர் புகழ் பெற்ற எழுத்தாளரான சிற்பி அவர்கள். சுன்னாகம் கந்தரோடையைப் பிறப்பகமாகக் கொண்ட இவரது இயற்பெயர் சி. சிவசரவணபவன். பிராமண சமூகத்தைச் சேர்ந்தவர். ஆசிரியராக இருபத்தைந்தாண்டுகளுக்கு மேலாகப் பணியாற்றிய இவர் யாழ்ப்பாணம் வைத்தீஸ்வரா வித்தியாலயத்தில் அதிபராகக் கடமையாற்றி இரண்டாண்டுகளுக்கு முன்னர் ஓய்வு பெற்றார்.

1958ம் ஆண்டு ஜூலையிலிருந்து

(இனக்கலவரத்தையடுத்து) எட்டாண்டு களாகக் 'கலைச்செல்வி' வெளிவந்தது. எழுத்துலகில் பல புதுமைகளைச் செய்தது 'கலைச்செல்வி'. பண்டிதர்கள், பல்கலைக் கழகத்தினர், பாமரர் என்றிருந்த மூன்று வர்க்கத்தினரையும் இணைத்துப் பாலம் போட்டு அதில் இலக்கியப் பவனி வந்தது.

"இலக்கியப் பிரக்ஞையுடன் நடத்தப் பட்ட 'மறுமலர்ச்சி' மாத இதழின் தொகுப்பை வாசித்துப் பார்க்கும் நல்வாய்ப்பு 1955ம் ஆண்டில் எனக்குக் கிடைத்தது. இவையனைத்தும் ஈழத்து எழுத்தாளர்களிடம் என்னை ஈடுபாடு கொள்ளச் செய்தன. அவர்களுடைய ஆற்றலும் திறமையும் மேலும் வளரவும், அவர்களுடைய 'திறமான புலமை'யினை வெளிநாட்டாரும் அறிந்து வணங்கவும் என்னால் ஏதும் செய்ய முடியாதா" என எண்ணத் தொடங்கினேன். இதன் பின்னணியில்தான் 'ஈழகேசரி' (குரும்பசிட்டி பொன்னையாவால் வெளியிடப்பெற்றது) யில் எழுதினேன்" என்று 'கலைச்செல்வி' யின் முதலாவது இதழில் ஆசிரியர் சிற்பி அவர்கள் தெரிவித்துள்ளார்.

தரம் வாய்ந்த, பிரபலம் மிக்க அனைத்து எழுத்தாளர்களுடனும் 'கலைச்செல்வி. நெருங்கிய தொடர்பினைப் பேணிவந்தது. ஒவ்வொரு படைப்பு களும் மிக நுணுக்கமாகப் பரிசீலனை செய்யப்பட்ட பின்னரே பிரசுரம்பெற்றன. ஆசிரிய தலையங்கங்கள் இதன் முத்திரை. வாசகர்களுக்கு முக்கிய இடம் கொடுக்கப்பட்டது.

எட்டாண்டுகளிலும் ஏராளமான இலக்கியப் போட்டிகளைக் 'கலைச்செல்வி'' நடத்திப் பரிசுகளையும் வழங்கியுள்ளது. ஈழத்தின் முதலாவது நகைச்சுவைக்- கட்டுரைப் போட்டியைக் 'கலைச் செல்வி'யே நடத்தியது. 1962ம் ஆண்டில் நடத்தப்பட்ட அகில இலங்கைச் சிறுகதைப் போட்டி முக்கியமானது.

'யாழ். இளம் எழுத்தாளர் சங்கம்' உருவாவதற்கு முக்கிய காரணியாக விளங்கியது 'கலைச்செல்வி'. காலஞ் சென்ற எழுத்தாளர் கலா. பரமேஸ்வரனும் நானும் சங்கத்தின் இணைச் செயலாளர் களாகப் பணியாற்றினோம்.

'கலைச்செல்வி'யில் முதன் முதலாக எழுதிய பலர் இன்று ஈழத்தின் பிரபல்யமான எழுத்தளார்களாகத் திகழ்வது பெருமைக்குரிய விடயம். 'கலைச்செல்வி' எழுத்தாளர் பட்டியல் என்ற ஒன்று அப்போது தொகுக்கப் பட்டிருந்தது. ஆசிரியர் சிற்பி அவர்கள் 1982ம் ஆண்டு பெப்ரவரி மாதம் இலங்கை வானொலியில் நிகழ்த்திய உரையொன்றில், "பிரபல எழுத்தாளர் களான செங்கை ஆழியான், செம்பியன் செல்வன், செ. யோகநாதன், பெனடிக்ற் பாலன், சாந்தன், கல்வயல் குமாரசாமி, எஸ். திருச்செல்வம், யாழ்நங்கை, பொ. சண்முகநாதன், மு. பொன்னம்பலம், தி. ஞானசேகரன், பா. சத்தியசீலன், தெணியான், பாமா ராஜகோபால், து. வைத்திலிங்கம், க. பரராஜசிங்கம் (துருவன்), செ. கதிர்காமநாதன், இரா. சிவசந்திரன், முகிலன், முனியப்பதாசன், செ. கதிர்காமநாதன்...." ஆகியோர் 'கலைச்செல்விப் பண்ணை'யில் உருவானவர்கள் என்று மனமகிழ்வுடன் தெரிவித்திருந்தார். 'மல்லிகை' வெள்ளி விழா மலரில் எழுதிய கட்டுரை யொன்றிலும் இதனை விரிவாகத் தந்துள்ளார்.

'கலைச்செல்வி'யின் முதலாவது ஆண்டு மலர் சிறந்தவொரு இலக்கியப் பொக்கிஷம். சில்லையூர் செல்வராஜன், பரஹம்ஸதாசன், மஹாகவி, முருகையன் ஆகியோரின் இலட்சியக் கவிதைகள் இம்மலரில் இடம்பெற்றன.

'என்னை உருவாக்கியவர்கள், 'என்னைக் கவர்ந்த என் கவிதை, 'ஏன் மறைத்தேன்

என் பெயரை" என்ற தலைப்புகள் ஊடாகப் பெருமளவு எழுத்தாளர் களைத் தரிசிக்கச் சந்தர்ப்பம் தந்தது 'கலைச்செல்வி'. 'இலக்கியக் கடிதங்கள்' என்ற தலைப்பில் டானியல், டொமினிக் ஜீவா, செ. கணேசலிங்கன், வ.அ.இராசரத்தினம், வரதர், ஈழத்துச்சோமு, இலங்கையர்கோன், அ.ஸ.அப்துஸ் ஸமது ஆகியோர் தமக்கிடையே அவ்வப்போது எழுதிய கடிதங்களை இப்பகுதியில் பிரசுரித்துப் பெரும் பரபரப்பை 'கலைச்செல்வி' ஏற்படுத்தியது.

எட்டு வருடங்களிலும் ஆறு நாவல்கள் 'கலைச்செல்வி'யில் வெளியாகியுள்ளன. ஆயிரம் ருபா பரிசுக்கான நாவல் போட்டியொன்றினைக் 'கலைச்செல்வி' நடத்தியது. முதற்பரிசு மு. தளையசிங்கம் எழுதிய 'ஒரு தனி வீடு' என்ற படைப்புக்கும், இரண்டாவது பரிசு மன்னவன் எழுதிய 'காலடியிலே' என்ற படைப்புக்கும், மூன்றாவது பரிசு செ. யோகநாதன் எழுதிய 'ஞாயிறும் எழுகிறது' என்ற படைப்புக்கும் கிடைத்தன. ஆனால் பரிசுகள் வழங்கப்படவில்லை. அதற்கு முன்னர் நிதிநிலை மோசம டைந்ததால் அனைவரதும் பலத்த வேதனையுடன் 'கலைச்செல்வி' நின்று விட்டது.

அதுபற்றித் தமது கட்டுரையொன்றில் பின்வருமாறு ஆசிரியர் சிற்பி அவர்கள் குறிப்பிட்டுள்ளார்: "கலைச்செல்வியின் இலக்கியப்பணி இடையிலேயே தடைப் பட்டதேன்? என்ற கேள்விக்கு 'திறமை யற்ற நிர்வாகம்' என்ற ஒரேயொரு காரணத்தையே கூறமுடியும்; உண்மையும் அதுதான்! எழுத்தாளன் எழுத வேண்டும். இலக்கிய ஆர்வமுடைய செல்வந்தர் யாராவது வெளியீட்டுப் பொறுப்பை ஏற்கவேண்டும். இரு சாராரும் இணைந்து செயற்பட்டால், தமிழ்ச் சஞ்சிகைகளின் எதிர்காலம் பிரகாசமானதாக அமையும்" என்று உண்மை நிலையை ஒழிவு மறை வின்றிச் சொல்லியுள்ளார்.

ஆனால், தமிழ்ச் சஞ்சிகைகளைப் பொறுத்தளவில் எழுத்தாளர்களே அவைகளின் ஆசிரியர்களாகவும், வெளியீட்டாளர்களாகவும் இருந்து வரும் நிலைமையே தொடருகின்றது. எந்த மாற்றமும் காணப்படவில்லை.

கலைச்செல்வி ஆசிரியரின் கூற்றுக்கு எதிரான வகையில், ஈழத்து இலக்கிய வானில் இருபத்தைந்து ஆண்டுகளாகப் பிரகாசித்து மணம் பரப்பிவரும் 'மல்லிகையின் தோற்றத்தையும், வளர்ச்சியையும் பார்ப்போம்.

## மல்லிகை

மல்லிகையின் முதலாவது இதழ் 1964ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் வெளியானது. (நிதி நிலைமையால் 'கலைச்செல்வி' மூடுவிழாக் காணுகின்ற வேளையில் 'மல்லிகை' கருக்கூட்டியது). இதன் ஆசிரியர் பிரபல எழுத்தாளரும், சிறந்த பேச்சாளருமான டொமினிக் ஜீவா அவர்கள். சாதாரண தொழிலாளக் குடும்பத்தில் பிறந்தவர் இவர். இலங்கைச் சாஹித்திய மண்டலப் பரிசு பெற்ற டொமினிக் ஜீவா அவர்களின் புகைப்படத்தை, தமிழ்நாட்டிலிருந்து வெளிவந்த தாமரை, சரஸ்வதி ஆகிய சஞ்சிகைகள் அட்டையில் பிரசுரித்துக் கௌரவித்துள்ளன.

மல்லிகை சஞ்சிகையின் அட்டையில் 'முற்போக்கு இதழ்' என்ற அறிவித்தலைக் காணலாம். முற்போக்கு என்பது 'மார்க்ஸிய கருத்துடைய' என்ற அர்த்தத்தைக் கொண்டதாகும். ரஷ்யா சார்பு கம்யுனிஸத்தைத் தனது கொள்கையாக ஏற்றுக்கொண்டு, இலக்கியத்திலும் வாழ்வியலிலும் அதனை முழுமையாகக் கடைப்பிடித்து

வாழ்ந்தவர் டொமினிக் ஜீவா.

ஆனாலும், மல்லிகை சஞ்சிகையில் அரசியலுக்கு அப்பாற்பட்ட வகையில் ஓரிருவர் தவிர்ந்த மற்றைய எல்லோரது படைப்புகளும் இடம்பெற்றுள்ளன. வேற்றுமையிலும் ஒற்றுமையைக்கண்டு, அதனை நட்பாக்கி வாழப்பழகிய இலக்கியவாதி டொமினிக் ஜீவா. கம்யுனிஸ்ட் கட்சியானது இரு கூறுகளாகப் பிரிந்து, சோவியத் ரஷ்யா என்றும் சீனா என்றும் தனித்தியங்க ஆரம்பித்த வேளையில் மல்லிகை வெளிவர ஆரம்பித்தது என்பதை நினைவில் வைத்திருப்பது நல்லது.

மல்லிகையின் சிறப்பம்சங்களில் ஒன்று, இதழின் அட்டையில் ஒருவரது படம் இடம்பெறுவதாகும். இலக்கியம், கலை, அரசியல், பொதுவாழ்வு ஆகியவைகளில் அவ்வப்போது கௌரவம் பெறவேண்டியவர்களைத் தெரிந்தெடுத்து அவர்களை மல்லிகையின் அட்டையாக்கி விடுவார் ஜீவா. வாழும்போதே பெரியோர்களைக் கௌரவிக்கும் நல்நோக்கில் இது நடைபெற்றுள்ளது. மதம், மொழி, நாடு, இனம், வயது என்ற வேறுபாடு எதுவுமின்றி அட்டைப்படத் தெரிவு இடம்பெற்றுள்ளது. இவர்களுள் ஈழத்துக் கலைஞர்கள், படைப்பாளிகளே அதிகம்.

பிரபலமான பல சிங்களப் பிரமுகர்கள் மல்லிகையின் அட்டையை அலங்கரித் துள்ளனர். அவர்களை முழுமையாகத் தரிசிக்கும் கட்டுரையும் உள்ளே இடம்பெறும். இவ்வாறான கட்டுரைகள் தொகுக்கப்பட்டு இதுவரை இரண்டு நூல்கள் (அட்டைப்பட ஓவியங்கள், மல்லிகை முகங்கள்) மல்லிகைப் பந்தல் வெளியீடுகளாக வெளிவந் துள்ளன.

மல்லிகையின் ஆண்டு மலர்களை உழைப்பாளிகளின் புகைப்படங்களைத் தாங்கி வருவது. கள்ளிறக்கும் தொழி லாளி, மரம் வெட்டும் தொழிலாளி, இளநீர் விற்கும் தொழிலாளி, பாண் விற்கும் தொழிலாளி என்று உழைப் பாளர்கள் பலரை மல்லிகை அட்டையில் தரிசித்துள்ளோம்

மல்லிகையின் மற்றுமொரு சிறப்பம்சம் யாதெனில், முல்லைத்தீவு-மலையகம்- கிளிநொச்சி- நீர்கொழும்பு ஆகிய பகுதிகளுக்கெனப் பிரதேச மலர்களை வெளியிட்டதாகும். அந்தந்தப் பிரதே சங்களின் சிறப்பியல்புகளைத் தாங்கி, பிரதேச மலர்கள் உருவாக்கப் பட்டுள்ளன.

மல்லிகையும் பல்வேறு இலக்கியப் போட்டிகளை நடத்தியுள்ளது. காலஞ் சென்ற மூத்த எழுத்தாளர் கனக செந்திநாதன் நினைவாக, யாழ் இலக்கிய வட்டத்துடன் இணைந்து வருடந் தோறும் குறுநாவல் போட்டியை நடத்தி வருகின்றது.

மல்லிகையின் கேள்வி-பதில் பகுதி பிரசித்தமானது. பிரச்சனைக்குரிய, இலகுவாகக் கையாளமுடியாத பல விடயங்கள் கேள்வி-பதில் மூலம் தீர்த்து வைக்கப்படும். சில பதில்கள் முகத்தில் ஓங்கி அடிப்பது போலவும், அக்கு வேறு ஆணி வேறாகக் கீறிக் கிழிப்பது போலவும் அமைந்திருக்கும். இந்தப் பகுதிக்குத் 'தூண்டில்' என்று பெயர். ஆசிரியர் டொமினிக் ஜீவாவே பதிலளிப்பவர். ஒவ்வொரு இதழிலும் கடைசிப் பக்கங்களில் 'தூண்டில்' இடம்பெறும். தெரிந்தெடுக்கப்பட்ட கேள்வி-பதில்கள் 'தூண்டில்' என்ற பெயரில் நூலாக வெளிவந்துள்ளது.

தனி ஒரு மனிதனின் முயற்சியால் உருவாகி வெளிவருவது மல்லிகை. பிரதிகளைக் கடைகளுக்கு எடுத்துச் சென்று வினியோகம் செய்வது, பணம் சேகரிப்பது, விளம்பரம் சேகரிப்பது

ஆகிய அனைத்துப் பணிகளையும் தனி ஒருவராக நின்று செய்பவர் அதன் ஆசிரியரான டொமினிக் ஜீவா அவர்களே.

ஈழத்தில் 29 ஆண்டுகளாகத் தொடர்ந்து வெளிவரும் இலக்கிய வரலாற்றுப் பெருமை பெற்ற ஒரேயொரு தமிழ்ச் சஞ்சிகை என்னும் பெருமை மல்லிகைக்கு மட்டுமேயுண்டு. மல்லிகையின் வெள்ளி விழா மலர் அளவிலும் அடக்கத்திலும் பெரியதாக 1990ம் ஆண்டு ஜனவரியில் வந்தது.

கடந்த மூன்று தசாப்தங்களாக குரு ஷேத்திரத்தில் நின்று இலக்கிய வேள்வி நடத்திவரும் டொமினிக் ஜீவா, பல வேதனைகளையும் சோதனை களையும் தாண்டி இலக்கியச் சரித்திர நாயகராகக் காட்சி தருகின்றார். மல்லிகையைத் தனது குடும்ப உறுப்பினர்களில் ஒருவராக நேசிக்கும் தன்மையை ஜீவாவில் காணமுடிகின்றது. தற்போதைய உள்நாட்டுப் பிரச்சனை யால், தமிழீழத்தின் மற்றைய வெளி யீட்டகங்கள் சந்திக்கும் பிரச்சனை களை ஜீவாவும் சந்திக்க வேண்டியது தவிர்க்க முடியாததாகும். நிலைமைக்கு ஏற்றவாறு அண்மைய சில இதழ்கள் 'கொப்பிக்' கடதாசியில் வெளியாகியுள்ளன. 'மீண்டும் என் சொந்தகம் சென்று மல்லிகையைப் புதுப் பொலிவுடன் கொண்டு வருவேன்' என்று ஜீவா திடமுடன் கூறி வருவது மனதுக்குத் தெம்பளிக்கின்றது.

1940 களிலிருந்து 1960இன் நடுப்பகுதி வரையான காலப் பகுதிக்குள் ஈழத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் வேறு பல சஞ்சிகைகளும் வெளிவந்தன. அவைகளில் தொண்ணூற்று ஒன்பது வீதமானவையும் நின்று விட்டன. எனினும் 'இளம்பிறை' போன்ற சில ஏதோவொரு வகையில் சாதனை படைத்து விட்டே கண்களை மூடிக் கொண்டன. கட்டுரையின் விரிவஞ்சி எல்லாவற்றையும் இதில் சேர்த்துக் கொள்ள முடியவில்லை. விரிவான கட்டுரை எழுதச் சந்தர்ப்பம் கிடைக்கும் போது அனைத்தையும் சேர்த்துக்கொள்ளும் எண்ணமுண்டு.

கனடாவில் மூன்றாண்டுகளாக வெளி வந்து சாதனை படைத்திருக்கும் இலக்கியச் சஞ்சிகையான 'ரோஜா'வின் மூன்றாவது ஆண்டு மலரில், அதன் வாசகர்கள் பயன் கருதி, தமிழீழத்தி லிருந்து பிரசவமான மூன்று இலக்கியச் சஞ்சிகைகள் பற்றிய சிறுகுறிப்புகளை மட்டுமே கட்டுரையாக்கியுள்ளேன்.





# அர்த்தங்கள் பலவிதம்

~ கவிஞர் வி. கந்தவனம்

சின்னச் சின்ன ஆசையால்
பொன்னும் பொருளும் போனதால்
பென்னம் பெரிய தலைவனைக்
கன்னி இன்னும் கண்டிலள்.

காட்டுக் காளை வந்தது
நாட்டு மாட்டைக் கண்டது
வாட்டும் வாழ்வைத் தள்ளியே
வீட்டுச் சுகத்தில் வீழ்ந்தது.

காட்நாட கத்தில் கற்றதை
வீடு கட்டி விற்றவர்
ஈடு செய்யச் சொந்தமாய்
வீடு கட்டப் பிந்தினார்.

காட்பெரிய சாதிப் பிள்ளைவாள்
சிறிய சாதி வள்ளிபால்
கருணை காட்டிச் சேரவே
பெரிய புதுமை நேர்ந்தது.

காட்வாடும் கொக்கை நாடுவார்
கோடி செல்வம் தேடுவார்
சூடு கூடி ஓடுவார்
பூடு வாங்கிப் போடுவார்.

காட்நாடு மாறி வாழினும்
ஓடும் குருதி குருதியே
ஆடு மயிலும் பாடுமோ
பாடும் குயிலும் ஆடுமோ?

காட்சொந்த நன்மை பார்ப்பவர்
பந்த பாடு பார்ப்பரோ
வந்து வந்து குந்துபேர்
உந்தி ருக்கை ஊழியம்.

காட்தோட்டந் தன்னில் ஆவதே
வீட்டில் வந்துமேவுமாம்
நாட்டுக் கூட்ட வில்லையேல்
தேட்ட நன்மை இல்லையாம்.

காட்காடு வெட்டித் தானொரு
வீடு கட்ட எண்ணினாள்
கூட வில்லை ஆவிதன்
கூடு நீங்கப் போகுதே!

வந்த காந்தி பார்த்தனர்
நொந்து கேள்வி கேட்டனர்
இந்தி யாவின் சிறைகளின்
விந்தை விருத்தி காட்டினர்.

ஏடு தாங்கச் சாத்திரம்
வீடு வாங்கச் சாத்திரம்
கூடி வாழச் சாத்திரம்
ஓடிப் போக ஓடுமாம்.

ஒன்றை ஒன்ப தாக்கியே
நன்று பெருக்கிக் காட்டிய
குன்றக் குமரன் சாதனை
மன்றில் ஏறி நின்றது.

உந்து வண்டு யிர்க்குல
விந்தை வேகம் கண்டதில்
சிந்தை கெட்டு நின்றனன்
அந்த ரச்செவ் வாய்மகன்.

நாமம் நமச்சி வாயவால்
சேம முற்றுச் சிறந்தவன்
காம சுத்தி ரத்தினால்
சாமி யாக மாறினான்.

# நாட்டார் இலக்கியம்

சில்லென்று பூத்த
சிறு நெருஞ்சிக் காட்டினிலே
நில்லென்று வைத்து
நெடுந்தூரம் போயினையே!

இது திரைப்படப் பாடலொன்றின் ஆரம்ப வரிகள் அல்ல, உயிரோடு கலந்து உறவாடித் திரிந்த இணையொன்று பிரிந்து விட்ட தாளாத துயரில், நாட்டுப்புறப் பேதையொருத்தி நெஞ்சுருகச் சிந்திய கிராமத்துக் கண்ணீர்த்துளிகள்.

காரிகை கற்றுக் கவிபாடும் கவிராயர்களும் எட்டிப்பிடிக்க முடியாத உயரத்திற்கும் மேலே இந்தக் கிராமத்து உணர்வுகள் மிக இலகுவாக சென்று விடுகின்றன.

## பொன்னையா விவேகானந்தன்

இவை,
ஏடும், எழுத்தும் பாட்டும் படிப்பும் அறியாத பாமர நெஞ்சங்களின் உணர்வுகளின் அறுவடை, அனுபவங்களின் சிற்றோடை.

இயற்றியவர் யார்? இசையமைத்தவர் யார்?
இவைகளெல்லாம் வரலாற்றைக் கடந்து சென்றாலும் விடைபெற முடியாத வினாக்கள்.

பூங்காற்றுத் தேர்ஏறி சுகந்தங்கள் சுவாசத்திற்குள் புகுந்து சுகம் தருகின்றன அல்லவா!

விலாசங்கள் அற்ற இந்த சுகந்தங்கள் நாசியை சுத்திகரிக்கும்.
ஆதிமூலம் அறியா இந்தக் கிராம சந்தங்கள் நெஞ்சை வசீகரிக்கும்.

காதலென்ற, இதயம் கொண்ட எல்லா மனிதனுக்கும், சுரக்கும் மனிதனின் இரத்த அணுக்கள் அத்தனையையும் சுண்டியிழுக்கும் சக்தி இந்த ஒரு உணர்வுக்கு மட்டுமே உண்டு.

இராமனாக இருந்தாலும் சரி, பாமரனாக இருந்தாலும் சரி இதற்கு விதிவிலக்கல்ல;

ஒரு நாட்டுப்புறப் பாமரனும் இந்த உணர்வுக்கு ஆட்பட்டு விடுகின்றான்.

அவனது நெஞ்ச அரங்கில் தினம் நடம் புரியும் அந்த நாயகி, ஒருநாள் நெல்வயல் ஒன்றில் நாற்று நட்டுக் கொண்டிருப்பதை அவன் கண்டுவிடுகின்றான்.

இவன் அருகே சென்ற பிறகும்கூட, அந்தப் பெண் நாற்று நடுவதில்தான் கவனமாக இருந்தாள்.

அவள் வேலையைத் திசை திருப்பவும் இவனுக்கு மனமில்லை, அதற்காக விட்டு விட்டுப் போகவும் சக்தியில்லை.

ஓரமாய் ஒதுங்கி நின்று ஒரு பாடலை மட்டும் அவளை நோக்கி வீசி வைத்தான்,

நாலுமூலை வயலுக்குள்ளே
நாத்து நடும் குள்ளப் பெண்ணே
நாத்து நடும் கையாலே -
என்னையும்
சேத்து நடலாகாதோ.

அவனுக்கு பொறாமை அவள்மீது அல்ல, அவள் கைதொட்டு கைதொட்டு நட்டுக் கொண்டிருக்கும் நாற்றுகள் மீது.

அந்த நாற்றினைப்போல நானும் அவள் கையால் நடப்பட வேண்டும் என்ற ஆதங்கம், அப்படி நடப்பட்டால் நன்றாக விளையலாம் என்ற ஆசை.

தன்னையும் சேர்த்து நடும்படி அவளுக்கு விண்ணப்பிக்கச் செய்தது.

பெண்கள் குழுமியிருந்து சிந்தும் சிரிப்பைப் போல,
சலசலத்தோடும் ஓர் அழகிய சிற்றோடை,
அந்தச் சிற்றோடையில் அவனும் அவளும் வெவ்வேறு இடங்களில் குளித்துக் கொண்டிருக்கின்றார்கள்.

சிற்றோடையில் தனக்குக் கீழே அவள் குளித்துக் கொண்டிருப்பதை அவன் கண்டு விடுகின்றான். அவள் காணவில்லை.

அவளுக்கு அழைப்பு ஒன்று கொடுக்க வேண்டுமே, சத்தமிட முடியாது. அருவியின் சிரிப்போசை அதை அடக்கிவிடும். இந்த காற்று, மேகம் எல்லாம் இலக்கியப் புலவர்களின் கற்பனைத் தூதுவர்கள். இந்த நிஜக் காதலுக்கு உதவாதவை. என்ன செய்கின்றான் அவன்.

காதல் தூதின் வகைகள் எல்லாவற்றையும் கடந்து, புதுவகைத் தூதொன்றை அவளுக்கு அனுப்புகின்றான். அதுதான் சந்தனம் விடு தூது.

கடிதத் தூதுகள் முகவரிக்குத்தான் போகும். அவனோ அவள் முகத்திற்கே தூதுவிடுகின்றான்.

"சந்தனம் விடு தூது"

ஓடுகிற தண்ணியிலே
ஒரசிவிட்டேன் சந்தனத்தை
சேர்ந்ததோ சேரலையோ
செவத்த புள்ள நெத்தியிலே?

முகவரிகள் மாறிச் செல்லும் கடிதங்களைப்போல, சில வேளை சந்தனமும் முகம் மாறிச் சென்று விட்டதோ என்ற கவலை அவனுக்கு, அதனால்தான் சேர்ந்ததோ சேரவில்லையோ என்று கவலைப்படுகின்றான்.

மற்றொருநாள், பால்பொழியும் பௌர்ணமி, அடர்ந்த ஒரு பருத்திக்காடு. அங்கு வழக்கமாய் தொடரும் காதல் காத்திருப்பு அங்கும் தொடர்ந்தது. அவன் வருகைக்காக அவள் பருத்தி மரசெ-மான்றின் அடியில் அமர்ந்து அந்த வெளிச்ச இரவை ரசித்துக் கொண்டிருந்தாள்.

சத்தமின்றி வந்த அவன் அவளை மெதுவாக அழைத்தான். அந்தக் கணத்திலே துணுக்குற்றாளோ இல்லை திடுக்கிட்டாளோ, எதுவென்று தெரியவில்லை.

ஆனால் அவள் உணர்வு அற்புதமான பாடலாக உருவெடுத்தது

பால்போல் நிலாவடிக்க
பருத்திக்குள்ள நானிருக்க
மின்னுவெட்டான் பூச்சிபோல -
அவன்
மெல்ல வந்து கூப்பிட்டானே.

நெல்வயல்களில் வளர்ந்த பயிர்களோடு, களைகளும் சேர்ந்து வளர்ந்த அக்காலப் பொழுதில் ஒருநாள்,
அந்தக் கிராமத்துக் குயில் பச்சை வயலொன்றில் களையெடுத்துக் கொண்டிருந்தது. அவள் காதலனுக்கோ வேலை வெட்டி இல்லைப் போலும்,
அங்கேயும் வந்து விடுகின்றான். அவளுக்குச் சங்கடத்தை ஏற்படுத்த,

அருகே களையெடுக்கும் வேறு பெண்கள் தூரத்தே மேற்பார்வை செய்யும் பண்ணையாள்.

இவன் ஏதாவது சொல்லி விடப்போகின்றானோ என உள்ளூரப் பயம் இவளுக்கு,

மச்சானுக்கு மனம்
பொறுக்கவில்லை.
இவள் பயந்தபடியே நடந்து
விடுகின்றது.
தொடங்கிவிட்டான் அவன்.

கானக் கரிசலிலே
களையெடுக்கும் பெண்மயிலே
நீலக் கருங்குயிலே
நிற்கட்டுமா? போகட்டுமா?

நிலைமையைப் பார்த்துப் புரிந்து கொண்டு போய்த்தொலைய வேண்டியதுதானே! இதில் என்ன நிற்கட்டுமா? போகட்டுமா? அவள் பதைபதைக்கிறாள்.

நிற்கச் சொன்னால் வேலைக்குப் பழுது. போகச் சொன்னால் அவன் நெஞ்சுக்குப் பழுது.
இந்தத் தர்மசங்கடமான நிலைமையை பெண்களுக்கே உரிய புத்தி சாதுரியத்தோடு சமாளிக்கிறாள் இந்த கிராமத்து கைகாரி.

நிற்கச் சொன்னால் நிஷ்டூரம்
போகச் சொன்னால் பொல்லாப்பு
பொழுதிருந்தால் வந்திடுங்க....
கண்ணுசாமியே
பொல்லாப்பு வையாதிங்கோ
மன்னா மன்னவரே!

சொந்தமாய் ஒருசாண் நிலம்கூட இருக்காது அவனுக்கு,
ஆனால்மன்னா மன்னவரே என்று மனம் குளிரப் பண்ணி அவனை அனுப்பி விடுகின்ற தனித்திறன் இந்தப் பெண்களுக்குண்டு.

இவ்வாறெல்லாம் இயற்கையின் தாலாட்டில் சீர்பெற்று வளர்ந்த இந்தக் காதல், கால ஓட்டத்திலே தடம்புரண்டு போய் விடுகின்றது.

அந்தக் கிராமத்துச் சித்திரப்பாவை கட்டுப்பாட்டுக்குள் சிக்கிவிட்ட சிறு கிளியானாள்.

கட்டுப்பாடற்றுச் சிட்டுக் குருவியாய் சிறகடித்த அவளின் சிறகுகள் கத்தரிக்கப்பட்டன.

சுவாசக் காற்று அவளுக்கு
வீட்டுக்குள்ளே வழங்கப்பட்டது.

நாற்று நட்டபோதும் களை எடுத்தபோதும் கூட கூடவே திரிந்த அந்தக் காதலன்,
இந்தக் குயிலைக் காணாமல் துவண்டு போனான்.
அவன் படிப்பறிவற்ற கிராமத்து இளைஞன்தான். ஆனால் ஒரு இலக்கிய காதல் தோல்வியின் அத்தனை சோகங்களும் அவனுக்கும் இருந்தன.

துடித்தான், துணையின்றித்
தவித்தான்.

கண் போன போக்கிலே நடந்தான்.
“அது என்ன அது.....?
இந்த கள்ளிப் பூச்சாரலில் எனக்கு பழக்கமான ஒரு தடம்........, ஆம் இது என் பொன்மானின் பாதச் சுவடு”
அடையாளம் கண்டு கொண்டான்.
அருகிலேயே அமர்ந்து விட்டான்.

காதல் நினைவால் தாஜ்மகால் கட்ட அவன் சாஜகான் போலக் குபேரனல்ல, ஒரு காவியத்தைப் பாடி முடிக்க கவிஞனுமல்ல,
சிற்பத்தைச் செதுக்கிவிட
சிற்பியுமல்ல,
கண்ணீரைத் தூரிகையில் நனைத்து

ஓவியமாக்க ஓவியனுமல்ல,
அதற்காக,
துயர உணர்வுகள் அற்றவனும்
அல்ல,
அந்தச் சுவட்டையே உற்றுப்பார்த்துக்
கொண்டிருந்தவன், தன்
சக்திக்கேற்றவாறு சோகத்தைக்
கொட்டுகின்றான்.

அள்ளட்டா மெள்ளட்டா
அடிமடியில் கட்டட்டா
குச்சி கட்டிக் காக்கட்டா
குணமயிலே உன் தடத்தெ.

அவள் சுவட்டை அள்ளி, மெள்ள
அடிமடியில் கட்டிக் கொண்டு செல்ல,
அந்தப் பாமரக் காதல் நெஞ்சம்
துடிதுடிக்கின்றது. சாத்தியமற்ற
சங்கதியல்லவா அது?
சரி, சுமந்து செல்ல முடியாத சுவடு
அது, என்ன செய்யப் போகின்றான்
அவன்? குச்சி எடுத்து சுற்றி வர
அரண் அமைத்து, அதைக்
காக்கவா.....?
என்று கேட்கின்றது இந்த ஏழை
இதயம்.

அந்தத் தாஜ்மகாலை விட மிக மிக
உயர்ந்ததல்லவா இந்த கிராமத்துக்
காதல் சின்னம்.

இந்த நாட்டுப்புறப்பாடல்கள்,
இலக்கணப் புலமையின் மரபுகளைக்
கடந்து இயற்கையாகப் பூத்து
மணக்கும் காட்டுப் புஷ்பங்கள்.
அதனாலேயே சுத்தமாக இருப்பவை.

இந்தக் கவிதைகள் தனிமனிதன்
குரல் அல்ல, ஒரு சமுதாயப்
பண்பாட்டின் கலாசாரத்தின் குரல்.

இங்கு காற்றும் மேகமும் தூது
போகும் கற்பனைச் சித்திரங்கள்
கிடையாது. ஒரு சமூகத்தின்
நிஜமான படப்பிடிப்பு இந்த
நாட்டுப்புறப் பாடல்களே. இவை
புனைவுகளற்ற ஆன்மாவின்
ராகங்கள். புன்னகைகள்,
கண்ணீர்த்துளிகள், தேசத்தின்
வரைபடங்கள்.








## கலைவாணி ராஜகுமாரன்

விடுமுறை நாட்களுக்கே உரித்தான கலகலப்பு வீட்டில் குடிகொண்டிருந்தது. பிள்ளைகள் தொலைக்காட்சியை அதிக சத்தத்தோடு பார்த்துக் கொண்டிருந்தார்கள். என் கணவர் கையிலுள்ள புத்தகத்தில் ஆழ்ந்து போயிருந்தார். சமையலறையிலிருந்து தட் தட்டென்று எதையோ உரலில் இடிக்கின்ற சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. அம்மா சமையல் ஆயத்தத்தில் ஈடுபடுவதை அந்தச் சத்தத்திலிருந்து அறிந்து கொண்டேன். அம்மா இங்கு வந்த புதிதில் அந்த உரலைப் பார்த்து விட்டுக் கூறியது காரணமில்லாமல் நினைவுக்கு வந்தது.

"இங்கை வீடுகள்தான் சின்னனெண்டு நினைச்சன். இந்த உரலைப் பார் பிள்ளை ஊரில் பாக்கு இடிக்கிற உரல் மாதிரி........"

"அம்மாவிற்கு அந்த மண்ணில் இருப்பதெல்லாம் உயர்வுதான்" என்று எண்ணியபடியே வீட்டைச் சுத்தம் செய்வதில் முனைந்தேன். அங்கும் இங்குமாய் சிதறிக் கிடந்த புத்தகங்களை ஒன்று சேர்த்து அடுக்க முற்பட்டபோது அந்த 'அல்பம்' என் கண்ணில் பட்டது. ஒரு ஆவலில் உந்தப்பட்டவளாக அதை எடுத்துப் பிரித்துப் பார்க்கிறேன். எத்தனையோ தடவை பார்த்த புகைப்படங்கள்தாம். ஆயினும் பார்க்கிற ஒவ்வொரு தடவையும் அந்தப் புகைப்படங்கள் எடுக்கப்பட்ட சூழலும் சூழ்நிலையும் மனசில் ஒருகணம் வந்து போகும். அவற்றைப் பார்த்தபடி அந்த நினைவுகளில் ஆழ்ந்து போயிருப்பதில் இனம்புரியாத சுகம் ஏற்படும்.

பக்கங்களைப் புரட்டிக் கொண்டே போன என் விரல்கள் ஓரிடத்திலே தயங்கி நிற்கின்றன.

"மைதிலி" என் உதடுகள் ஒரு மந்திரத்தைப் போல் அந்தப் பெயரை உச்சரிக்கின்றன. அந்தப் பெயரின் இனிமையில் கட்டுண்ட மனசு நினைவுக் கடலைக் கடந்து போய் இறந்த காலத்தில் கரையேறுகிறது.

மிகுந்த சிரமத்தின்பின் எங்களுக்கு அந்த வீடு கிடைத்தது.

"எத்தனை நாளைக்கெண்டு சாவகச்சேரியில இருந்து பஸ்ஸில வந்து போறது. யூனிவர்சிட்டிக்குக் கிட்டத்தில ஒரு வீடு பார் பிள்ளை. நானும் கொம்மாவும் உன்ரை படிப்பு முடியும் வரைக்கும் உன்னோடை வந்திருக்கிறம்" என்ற அப்பாவின் ஆலோசனை எனக்குப் பிடித்திருக்கவே நான் வீடு தேடும்

படலத்தில் இறங்கினேன்.

வீடு கிடைப்பதென்பது அத்தனை சுலபமாக இருக்கவில்லை. பல்கலைக்கழக மாணவர்களால் வீடுகள் நிறைந்திருந்தன. இறுதியில் எனது சிநேகிதி ஒருத்தி உதவ முன்வந்தாள்.

"எங்கடை மாமா வீடு ஒண்டு பழம் றோட்டிலை இருக்கு. அவையள் குடும்பத்தோட கனடாவுக்குப் போட்டினம். முதல் கொஞ்சக்காலம் ஆரோ வாடகைக்கு இருந்தவை. இப்ப அவையள் இல்லை. மாமாவுக்கு ஒருத்தருக்கும் வாடகைக்கு விடுற எண்ணமில்லை. அதால பூட்டிக் கிடக்குது. நான் உமக்காக வேணுமெண்டால் அதுக்குப் பொறுப்பான சின்ன மாமாவோட கதைச்சுப் பார்க்கிறன்" என்றாள்.

அவளுடைய சிபாரிசின் பேரில் அந்த வீடு கிடைத்தது. ஆலடிச் சந்தியிலிருந்து கிளை விட்டுப் பிரிகிற



பழம் றோட்டில் அவ்வீடு அமைந்திருந்தது. வீட்டின் முன்புற மதில்கள் ஷெல்லடியினால் சிதிலமாகி இருந்ததைத் தவிர அந்த வீட்டில் குறை ஒன்றும் காணமுடியவில்லை. முன்பு அங்கு குடியிருந்தவர்கள் சிதைந்த கற்களை உடைத்துச் சமன் செய்து மதிலை நேர்த்தியாக்கி இருந்தார்கள். ஏறக்குறையப் படிக்கட்டு போலக் காணப்பட்ட அந்த அரைச்சுவர் மீது இரண்டு அணில் குஞ்சுகள் ஒன்றையொன்று துரத்தி விளையாடிக் கொண்டிருந்தன. ஓடுவதும் இடையில் நின்று வாலை உயர்த்தி "ணிக் ணிக்" என்று சப்தித்து போக்குக் காட்டுவதுமான அவற்றின் விளையாட்டு எனது பார்வைக்கு விருந்தானது. எவ்வளவு நேரம் அவற்றின் சாகசத்தில் லயித்திருந்தேனோ........ திடீரென்று என் பின்புறத்திலிருந்து அந்தக் குரல் கேட்டது.

"என்ன வீடு பிடிச்சுதா....?" கேட்டவளுக்கு வயது பதினேழுக்குள் தானிருக்கும். ஒரு சிநேகிக்கும் புன்னகையோடு அவள் நின்றிருந்தாள். முதற் பார்வையிலேயே அவளை எனக்குப் பிடித்துப்போக, கள்ளமில்லாத அந்தப் புன்னகை ஒன்றே போதுமானதாக இருந்தது. இரட்டைப் பின்னல்களில் ஒன்றை அவிழ்ப்பதும் பின்னுவதுமாக அவளுடைய விரல்கள் தன்னிச்சையாக இயங்கிக் கொண்டிருப்பதிலிருந்து அவள் துடுக்கும், சுட்டித்தனமும் நிறைந்த சிறு பெண் என்பதைப் புரிந்து கொண்டேன். நான் வாசலில் நிற்கும் போது இவளெப்படி உள்ளே வந்திருக்க முடியும். ஒருவேளை அணில்களின் சாகசத்தில் நான் கவனிக்கவில்லையோ என்றெண்ணி வெட்கினேன். எனது மனதைப் படித்தவள் போல் அவள் சொன்னாள்.

"நான் எப்பிடி வந்தனெண்டு யோசிக்கிறீங்களா..... அங்கை பாருங்கோ" என்று அவள் சுட்டிக்காட்டிய இடத்தில் இரண்டு வீட்டிற்கும் இடையிலான வேலி பிய்ந்திருந்தது.

“முந்தி இங்கை வாடகைக்கு இருந்தவைக்கும் எங்களுக்கும் இடையிலை அதுதான் போக்குவரத்துப் பாதை......!” அவள் கலகலவென்று நகைத்தாள்.

இருந்தாற்போல அவளின் முகம் மாறியது. உடைந்திருந்த மதிலைப் பார்த்த பார்வையில் வேதனை கொப்பளித்தது.

“எவ்வளவு அறுக்கையா இருந்த வீடு! இப்ப திறந்த வெளி மாதிரி ஆக்கி போட்டாங்கள்!” அவள் வேதனையோடு தொடங்கிக் கோபத்தில் முடித்தாள். அவளுடைய சின்ன உருவத்திற்கும் அந்தக் கோபத்திற்கும் பொருத்தமில்லாதிருந்தது. ஆனால் அவளுடைய கோபம் எனக்குப் பிடித்திருந்தது. முதன்முதலாக நான் தயக்கத்தை விட்டுப் பேசினேன்.

“உங்கடை பேர் என்ன....?”

“மைதிலி.....!”

அவளுக்கு அந்தப் பெயர் நேர்த்தியோடு பொருந்தியிருந்தது. சிலருக்கு உருவத்தோடு பெயர் ஒட்டுவதில்லை. இவள் பெயர்



அப்படியல்ல என்று எனக்குள் வியந்து கொண்டேன். நான் ஏதோ கேட்க நினைத்து வாயெடுப்பதற்கிடையில் புறப்பட்டுவிட்டாள்.

“அம்மா தேடப்போறா....! நான் போறனக்கா....!

வேலிப்பொட்டுக்குள் குனியப்போனவள் திரும்பி என்னிடம் கேட்டாள்.

“உங்கடை பேர் என்னவெண்டு சொல்லேல்லையே....”

“கல்யாணி!” என்றேன்.

“நான் ஏழாம் வகுப்புப் படிக்கேக்குள்ள கல்யாணி எண்டு எனக்கொரு ‘பிரெண்ட்’ இருந்தவ” என்று கூறிவிட்டுப் பொட்டுக்குள் நுழைந்து போய்விட்டாள்.

நான் அதன்பிறகும் செவ்வரத்தை மரத்துக்கு இடம்மாறி விட்ட அணில்களை வேடிக்கை பார்த்தபடி அங்கேயே நின்றிருந்தேன். இம்முறை அவற்றின்மேல் கவனம் பதிய மறுத்து அலைந்தது. பக்கத்து வீட்டுச் சிறுபெண்ணின் சிரிப்பும் துடுக்கும் பேச்சும் மனசில் நின்றது.

அந்த வீட்டிற்கு நாங்கள் குடிபெயர்ந்து ஒரு கிழமையே ஆகியிருந்தது. மைதிலி ஒவ்வொரு நாளும் எங்கள் வீட்டிற்கு வந்து பேசிக்கொண்டிருந்துவிட்டுப் போவாள். நான் எப்போது பல்கலைக்கழகத்திலிருந்து வருவேனென்று காத்துக் கொண்டிருந்தாற்போல வந்து நிற்பாள்.

ஆனால்... நான் எண்ணியிருந்ததுபோல அவளொன்றும் விவரம் புரியாதவளல்ல என்று அவளோடு பேசப் பேச எனக்குப் புரிந்தது. நான் அந்த நாட்களில் மு. மேத்தாவின் கவிதைகளில் என் மனசைப் பறிகொடுத்திருந்தேன். அவருடைய கவிதைகளை வாசித்துப் பிடித்தமான வரிகளை அடிக்கோடிட்டு

மீட்டுக் கொண்டிருந்தேன். அதுபோல பாரதியார் கவிதைகளும் என்னைப் பைத்தியமாக அடித்திருந்தன. அந்த இளவயதில் காதல் கவிதைகளில் பைத்தியமாகி இருந்தது நான் மட்டுமல்ல என்பதை மைதிலியைச் சந்தித்த பிறகு நான் உணர்ந்து கொண்டேன். அப்துல் ரகுமானின் கவிதைகளையும், இரா. வேலுச்சாமியையும், அடியாரையும் எனக்கு அவள் அறிமுகப்படுத்தினாள். பாரதிக்கு இன்னொரு முகம் உண்டென்று அவருடைய தேச விடுதலைப் பாடல்களை வாசித்துக் காட்டுவதன் மூலம் எனக்கு உணர்த்தினாள்.

பதினேழு வயதில் பாரதியை ரசிக்கிற அந்தப் பெண் என்னுள் பிரமிப்பை விதைத்தாள் பாரதி போலவே அவளும் சிறுமை கண்டு பொங்குவதை அடிக்கடி அவதானிக்க முடிந்தது. தமிழின் மேல் அவளுக்கு இருந்த காதல், பழந்தமிழிலக்கிய பாடல்களை மனனம் செய்து வைத்திருந்த பாங்கு அவள் மீது எனக்குண்டான விருப்பை ஸ்நேகிதமாக்கிற்று.

என்னைவிட மூன்று வயது இளையவளான அவளே எனது ஆத்மார்த்த சிநேகிதியாவாள் என்று அவளைநான் சந்தித்தபோது எண்ணியிருக்கவில்லை. ஆனால்..... அது நிகழ்ந்தது. எத்தனைக்கெத்தனை நான் அவளை நேசித்தேனோ அத்தனைக்கத்தனை கண்ணீரை அவள் எனக்குத் தந்தாள்.

அவள் பலதடவை எங்கள் வீட்டிற்கு வந்துபோன பிறகே முதல் தடவையாக அவளுடைய வீட்டிற்கு நான் போக முடிந்தது.

"இப்பதான் வழி தெரிஞ்சதா?" என்று செல்லமாகச் சிணுங்கியபடி என்னை அவள் வரவேற்றாள். உள்ளே நுழைந்த பிறகுதான் கவனித்தேன்: வரவேற்பறையில் ஒரு இளைஞன் உட்கார்ந்திருந்தான். நான் தயங்குவதைக் கண்ட மைதிலி என் கைகளைப் பற்றி உள்ளே அழைத்துச் சென்று அந்த இளைஞனை எனக்கு அறிமுகப்படுத்திய விதம் புதுமையாக இருந்தது.

"இவர்தான் எங்கடை மாமா கடைசி



காலத்திலை செய்த தவறு....!" கூறிவிட்டு கலகலவென்று அவள் சிரித்தாள். அவளின் சிரிப்பை அளவுக்கதிகமான ஆர்வத்தோடு அவன் ரசிப்பதை அவனுடைய முகபாவத்திலிருந்து என்னால் அறிய முடிந்தது. அவன் கண்களில் காதலும் கனிவும் மிளிர்ந்தன. அவன் பார்வையைச் சந்திக்க முடியாமல் மைதிலி நாணத்தோடு முகத்தைத் திருப்பிக் கொண்டதை வியப்போடு நான் கவனித்தேன்.

"ஓ....! அதனால்தான் மேத்தாவும், இரா. வேலுச்சாமியும், பாரதியின் கண்ணனைப் பற்றியதான காதல் பாடல்களும் உன்னைக் கவர்ந்தனவா.....?" ஆச்சரியத்தோடு மனசுக்குள் நினைத்துக் கொண்டேன்.

"ஏன் பிள்ளை..... மாமான்ரை

மகனெண்டு சொல்லன். உனக்குப் பகிடி கூடிப் போச்சுது...!" என்று கடிந்து கொண்டவளாக முன்னறைக்கு வந்த தாயைக் கண்டதும், எனது கைகளைப் பற்றி இழுத்துக் கொண்டு



தன்னறைக்கு நகர்ந்தாள் மைதிலி.

அவளுடைய அறையில் பொருட்கள் அந்தந்த இடத்தில் வைக்கப்பட்டு நேர்த்தியாக இருந்ததை நான் அவதானித்தேன்.

ஒரு அலுமாரி நிறையப் புத்தகங்கள் அடுக்கப்பட்டிருந்தன. மேசையில் வினாவிடைகள் அடங்கிய புத்தகங்கள் சீராக வைக்கப்பட்டிருந்தன. கட்டில் சுத்தமான விரிப்போடு இருந்தது. நான் கதிரையில் அமர்ந்து புவியியல் வினாவிடைப் புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்தபோது அவள் கேட்டாள் "கல்யாணி அக்கா....! நீங்கள் செங்கை ஆழியான் எழுதின "கங்கைக் கரை ஓரம்" வாசிச்சனிங்களா....?
நான் அவளுக்குப் பதிலளிக்கவில்லை. நான் பார்த்துக் கொண்டிருந்த வினாவிடைப் புத்தகத்தினுள்ளிருந்த சிறு புத்தகத்தைக் கண்டு திகைத்தேன்.

அது.... விடுதலைப் போராட்டம் பற்றியதான ஒரு சிறு புத்தகம்! கறுப்பும் சிவப்புமான அந்த எழுத்துக்களைக் கண்டு நான் கலவரமடைந்தேன்.

"என்ன மைதிலி இது.... பக்கத்திலை ஆமி "காம்ப்"பை வைச்சுக்கொண்டு.... "றவுண்ட்அப்" ஏதும் நடந்தால்...... முதலிலை இதை எங்கை வாங்கினீரோ அங்கை கொண்டு போய்க் குடுத்திட்டு வாரும்" நான் படபடத்தேன்.

"ஏனக்கா இப்பிடிப் பயப்பிடுறீங்கள்.....? வாசிச்சு முடிய கொண்டுபோய்க் குடுக்கத்தானே போறன்!" அவள் அமைதியாகக் கூறினாள். அவள் பழைய மைதிலி அல்லவென்று எனக்குத் தோன்றியது. கலகலப்பும் விளையாட்டுத் தனமும் மறைந்து உணர்ச்சிக் கலவையாய் அவளுடைய முகம் விகசித்ததை மெதுவாகச் சுடர்விட்ட விளக்கு வெளிச்சம் காட்டியது.

அவள் சிறிது நேரம் மௌனமாக இருந்தாள். பின் ஏதோவொரு உணர்வினால் உந்தப்பட்டவளாக உணர்ச்சி ததும்பும் குரலில் கூறினாள்.

"ஏனக்கா எங்கடை சனம் மட்டும் இப்படிக் கஷ்டப்படுது.... எப்ப ஷெல்லடி நடக்கும்....எப்ப பொம்மர் வரும் எப்ப ஆமி வெளிக்கிடுவான் எண்டு பயந்து பயந்து உயிரைக் கையிலை பிடிச்சுக் கொண்டு அலைய வேண்டியிருக்கு ஒவ்வொரு நாளும் சனம் சாகுது. பொம்பிளையள் வயசுபோனதுகள், குழந்தைப் பிள்ளையள் எண்டு ஈவிரக்கம் பாக்காமல் கொல்லுறாங்கள். தெரிஞ்சே கொல்லுறாங்கள். ஒரு இனத்தைப் புல் பூண்டு கூட இல்லாமல் அழிச்சுப்போட வேணுமெண்டு சபதம் எடுத்த மாதிரி எல்லாம் நடக்குது. எவ்வளவு காலத்துக்கெண்டு கையைக் கட்டிக் கொண்டு எல்லாத்தையும் பாத்துக்

கொண்டிருக்கிறது... சொல்லுங்கோ!

என்னால் பதில் பேச முடியவில்லை. ஆனால்... பயமாக இருந்தது. அங்கிருந்து அந்தப் புத்தகத்தை அகற்றி விட்டால் நல்லதென்று நான் நினைத்தேன்.

"மைதிலி....! உம்மடை அம்மாவுக்குத் தெரிஞ்சால்...."

"அழுவா! கத்துவா....! புத்தகத்தை எடுத்து அடுப்பிலை போடுவா....!" அவள் வெகுசாதாரணமாகக் கூறினாள்.

அவளுடைய வேதனையும், விரக்தியும் எனக்குள்ளும் பரவியதை உணர்ந்தேன். என்னால் அங்கு இருக்க முடியவில்லை.

"இருட்டி கனநேரமாப் போச்சுது....! மைதிலி...! நான் போட்டு நாளைக்கு வாறன்".



"நான் உங்களைப் பயப்படுத்தி போட்டனா. முதன் முதலில் வீட்டை வர நான் உங்களை இப்பிடிக் கதைச்சு உங்களைக் கலைக்கிறன் எண்டு நினைக்கிறீங்களா...." அவள் என் கைகளைப் பற்றி இரங்கும் பார்வையோடு கேட்டாள்.

"இல்லை... நான் நாளைக்கு வந்து ஆறுதலா இருந்து கதைக்கிறன். "கொப்பி" பண்ண "நோட்ஸ்" கொஞ்சம் கிடக்குது" என்றபடி விடைபெற்றேன்.

மறுநாள் அவர்களுடைய வீட்டு வாசற்படியில் நான் ஏறவும் மைதிலியின் மாமாவின் மகன் கண்ணன் வெளியேறவும் சரியாக இருந்தது. அவன் வெளியேறிய வேகத்தில் நான் அவனோடு மோதிவிட இருந்தேன். நல்லவேளையாக நிலையைப் பற்றிச் சமாளித்துக் கொண்டேன். அவன் முகத்தில் ஏன் அத்தனை கோபமென்று எனக்குத் தெரியத்தானில்லை.

என்னைக் கண்ட மைதிலி வெளியே வந்தாள். அவள் கண்கள் கலங்கிச் சிவந்திருந்தன.

"என்ன... உம்மடை மச்சான் இப்பிடி ஓடுறார். எதையும் விட்டிட்டு வந்திட்டாரோ...?

"அவர் ஒண்டையும் விட்டிட்டு வரேல்லை...! இங்கையிருந்து ஒண்டை எடுத்துக் கொண்டு போக வந்தவர். கிடைக்கேல்லை. அதுதான் கோவிச்சுக் கொண்டுபோறார்...!"

"அப்பிடி என்ன கேட்டவர்....?

"அது... வந்து... ஒண்டுமில்லையக்கா....! அவள் எனக்கு எதையோ ஒளிப்பதை தாழ்ந்திருந்த அவளது கண்கள் காட்டிக் கொடுத்து விட்டன.

"சொல்ல விருப்பமில்லாட்டில் விடும்....!"

"உங்களுக்குச் சொல்லாமல்... அது.... வந்து.... அவர் என்னை "லவ்" பண்ணுறாராம்" என்றாள் நெளிந்தபடி.

"அது தெரிஞ்ச விஷயந்தானே.... வீட்டிலும் எதிர்ப்பு வராது... ஓம் எண்டு

சொல்லுறதுதானே...." நான் கேலி செய்தேன்.

"அது நடக்காதக்கா....!" என்றாள் அவள் சட்டென்று.

"ஏன் மைதிலி... அவருக்கென்ன குறை...?"

"இப்ப இதுக்கு என்னாலை பதில் சொல்ல முடியேல்லை. ஏனெண்டு வேளை வரேக்குள்ளை நீங்களே அறிவீங்கள்.....!"

நான் அவளை அதற்கு மேல் வற்புறுத்திக் கேட்கவில்லை.

அவள் சொன்ன வேளை வந்தது. அவள் தான் போய்விட்டாள். பக்கத்து வீட்டிற்குப் போன அம்மா பதறியபடி வந்தா.

"உவள் மைதிலி இன்னும் பள்ளிக்கூடத்தாலை வரேல்லையாம். சைக்கிளையும் அவளின்ரை புத்தகங்களையும் ஆரோ சிநேகிதப் பிள்ளையிட்டை குடுத்திட்டுப் போனதாம். அதோடை தான் இயக்கத்துக்குப் போகப் போறனெண்டு கண்ணனோடை கதைச்சவளாம். இயக்கத்துக்குத்தான் அவள் போட்டாள் போலை. தாய் மனிசி பாவம்..! ஒரு பொம்பிளைப் பிள்ளை எண்டு செல்லம் குடுத்து வளர்க்க... இப்பிடிச் செய்து போட்டுப் போட்டுதே...! அம்மா அங்கலாய்த்தாள்.

நான் துடைத்துக் கொண்டிருந்த 'சிம்னி' கையிலிருந்து நழுவித் தரையில் விழுந்து என் மனசு போல சிதறியது.

"மைதிலி...! இதுவா நீ சொன்ன வேளை? நான் எனக்குள் அரற்றினேன்

நாட்கள் நகர்ந்தன. அரசியல் மாற்றங்கள் நிகழ்ந்தன. இராணுவம் வெளியே வராதபடி முகாம்களுக்குள் முடக்கப்பட்டது. சின்ன முகாம்கள் சிதறடிக்கப்பட்டன. பலாலியிலிருந்தும் கோட்டையிலிருந்தும் இராணுவம் வெளிவர முயன்று முயன்று தோற்றது. விடுதலைப் போராளிகள் சுதந்திரமாக வீதிகளில் உலவத் தொடங்கினார்கள். மைதிலியை திருநெல்வேலியிலும் கந்தர்மடத்திலும் பலதடவைகள் கண்டதாகவும், பேசமுடியவில்லை என்றும் அவளின் அண்ணா வாமதேவன் என்னிடம் கூறினான். அவள் வருவாள் வருவாள் என்று என் கண்கள் வீதியைத் துழாவின. சீருடையும் துப்பாக்கியுமாக சைக்கிளில் போகிற போராளிகளிடையே நான் மைதிலியைத் தேடிக் களைத்தேன். ஆனால் ஏமாற்றமே கிடைத்தது.

எனது பல்கலைக்கழகக் கல்வியும் நிறைவு பெறும் தறுவாயில் இருந்தது. என்னைத் திருமணம் செய்து கொடுத்து அனுப்பி விட ஏற்பாடுகள் நடந்தன. கனடாவிலிருந்த ரகுவிற்கும் எனக்கும் திருமணம் நிச்சயமாகியது. அவர் யாழ்ப்பாணத்திற்கு வந்து என்னைத் திருமணம் செய்தபின் மீண்டும் சில மாதங்களில் திரும்பி போய் என்னைக் கூப்பிடுவாரென்று அம்மா கூறினா. நான் மைதிலியை மறந்து எதிர்காலக் கனவுகளில் மூழ்கத் தொடங்கினேன்.

திடீரென்று அவள் வந்தாள்! முதலில் என்னால் அவளை அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. ஆனால் அந்தச் சிரிப்பு..... அதனை மறக்கக் கூடுமா....?

"மைதிலி....!" என் உதடுகள் வியப்புடன் அந்தப் பெயரை

உச்சரித்தன.

"மறந்து போனீங்களா... கல்யாணி அக்கா....!" சிரிப்பு மாறாத முகத்தோடு அவள் கேட்டாள்.

நான் அவளையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தேன். அவள் அணிந்திருந்த சீருடை அவளுக்கு மிகவும் பொருந்தியிருந்தது. இரட்டைப் பின்னல்களை மடித்துக் கட்டியிருந்தாள். நெற்றியில் வழக்கமாக இடும் சின்னப் பொட்டு இல்லை. அவள் தோளில் துப்பாக்கி இருந்தது. மார்பை மறைத்து துப்பாக்கிக் குண்டுகள் நிறைந்த தோற்பை கட்டப்பட்டிருந்தது. சைக்கிளில் ஒரு துணிப்பை மாட்டப்பட்டிருந்தது.

அவளை விட்டு என் விழிகள் அகலவில்லை. அவளுடைய முகம் புதியதொரு தேஜசுடன் பொலிந்தது அலங்காரங்கள் ஏதுமற்ற அவள் முகம் காய்ந்து கறுத்துப் போயிருந்தது. ஆனால்... அந்த அகன்ற விழிகள் இனம்புரியாத ஒளியோடு துலங்கின.

"என்ன அப்பிடிப்பாக்கிறீங்கள்... மறந்து போனீங்களா" என்றபடி என்னருகில் அமர்ந்தாள்.

மறப்பதா... உன்னையா... உன் சிரிப்பை கலகலப்பை... கவிதை படித்து லயித்ததை... திடீரென்று காணாமல் போனதை... எப்படியடி மறப்பது...?" நான் மனசுக்குள் புலம்பினேன்.

"ஏன் இப்பிடிச் சொல்லாமல் போனீர்....? நான் கோபத்தோடு கேட்டேன்.

"சொல்லீட்டுப் போற அளவுக்கு எனக்குத் தைரியம் இருக்கேல்லை" என்றாள்.

"எண்டாலும்......." நான் முணுமுணுத்தேன்.

அதற்கிடையில் அங்கே ஒரு கூட்டமே கூடிவிட்டது. மைதிலியின் தாய் மகளைக் கட்டிக்கொண்டு கண்ணீர் வடித்தாள். அண்ணன் வாமதேவன் கைகளைக் கட்டியபடி இறுகிய முகத்தோடு நின்று கொண்டிருந்தான்.

"வீட்டை வா ராசாத்தி!" என்று தாய் அழைத்துப் போனாள். "என்ரை பிள்ளை எப்பிடி மெலிந்து கறுத்துப்



போச்சுது!" என்று கலங்கினாள்.

எப்படியோ செய்தியறிந்து கண்ணன் அங்கே வந்தான். அவனைக் கண்டதும் பேசிக் கொண்டிருந்த மைதிலி மௌனமானாள். அவன் இருந்த திசையில் கூட அவள் திரும்பிப் பார்க்கவில்லை. மைதிலி சைக்கிளை எடுத்துக் கொண்டு போகப் புறப்பட்ட போது தாய் அவளின் கைகளைப் பிடித்து "திரும்பி வந்திடு பிள்ளை" என்று கெஞ்சினாள். அவள் தாயை இரக்கத்தோடு பார்த்தாள். விழிகளில் திரண்ட நீரை அவள் இமைகளை மூடித் தடுக்க முயன்றதை நான் கண்டு கலங்கினேன்.

பின்னின்று அழைத்த தாயின்

கைகளை விலக்கி விட்டு அவள் சைக்கிளில் ஏறிப் போய்விட்டாள்.

"என்ரை பிள்ளை... என்ரை குஞ்சு....! என்று மைதிலியின் தாய் வெகுநேரமாக அழுது கொண்டேயிருந்தாள்.

அதன் பிறகு எப்போதாவது வருவாள். வெகுநேரம் தங்கமாட்டாள். சீக்கிரத்தில் புறப்பட்டு விடுவாள்.

"இண்டு முழுக்க இங்கைதான் இருக்கப் போறன்!" என்றபடி ஒருநாள் வந்தாள்.

தாய் ஓடி ஓடிச் சமைத்தாள். கோழிக்கறியும் பொரியலுமாக வீடு மணத்தது. ஆனால் சாப்பாட்டைப் போட்டுக் கொடுத்தபோது அவள் சாப்பிட மறுத்து விட்டாள்.

"எனக்கு வீடு கிட்டடியில் இருக்கு நான் வாறன். ஆனா... எங்கடை காம்பிலை மட்டக்களப்பு, திருகோணமலைப் பிள்ளையளெல்லாம் இருக்கு. அதுகள் எங்கைபோய் இப்பிடி வாங்கிச் சாப்பிடுவது. எனக்கு உந்தச் சாப்பாடு வேண்டாமம்மா......!"

ஆனால்.... அந்தத் தாய் தன் மகளுக்குத் தன் கையால் சமைத்த சாப்பாட்டைக் கொடுத்து அவள் உண்ணும் அழகைக் காண ஆசைப்பட்டாள். மகனை அழைத்தாள்.

"தம்பி....! போய்.... அஞ்சு கோழி வாங்கியாடா.... அந்தப் பிள்ளையளுக்கும் சமைச்சுக் குடுப்பம். இப்ப சந்தோஷம்தானே சாப்பிடம்மா...!" என்றாள் தாய்.

இப்போது மைதிலி மறுக்கவில்லை.....!

எனது திருமணத்திற்கு நான்கு நாட்களே இருந்தன.

"என்ரை கலியாணவீட்டிற்கு வருவீரா....?" நான் ஏக்கத்தோடு கேட்டேன்.

"என்ன இது அசட்டுக் கேள்வி.....! என்பதாய் அவள் சிரித்தாள்.

அவள் வரவில்லை....! நான் ஒரு நப்பாசையில் காத்திருந்தேன். அவள் வரவேயில்லை. ரகு கனடாவிற்குத் திரும்பிப் போனதன் பின் ஒருநாள் அவள் வந்தாள். நான் கர்ப்பமாக இருப்பதையறிந்து சந்தோஷப்பட்டாள்.

"இந்தப் பிள்ளை சுதந்திர பூமியில் பிறக்க வேண்டுமென்று கடவுளை வேண்டுங்கோ....!" என்றாள்.

அவள் இப்போதெல்லாம் அதிகம் பேசுவதில்லை என்பதை நான் கவனித்தேன். கேட்ட கேள்விகளுக்கு ஓரிரு சொற்களில் பதிலளிப்பாள். பதிலளிக்க விரும்பாது போனால் இதழ்கடையில் ஒரு புன்னகைதான் பதிலாகும். அவளைப் பற்றி அதிகம் அறிந்துகொள்ள வேண்டுமென்று நான் ஆசைப்பட்டேன். அவள் எப்போதும் தன்னோடே கொண்டுதிரியும் துணிப்பையினுள் என்ன இருக்குமென்று நீண்ட நாட்களாகவே கேட்க எண்ணியிருந்தேன். ஒருநாள் அதற்குச் சந்தர்ப்பம் வாய்த்தது.

"நீங்களே பாருங்கோவன்!" என்று எடுத்துத் தந்தாள்.

அதனுள் விடுதலைப் போராட்டம் பற்றியதான புத்தகம் ஒன்று, நாட்குறிப்பு ஒன்று, இரண்டு பேனாக்கள் அவற்றோடு நோட்டுப் புத்தகம் ஒன்றும் இருக்கக் கண்டேன். நோட்டுப் புத்தகத்தைப் புரட்டிப் பார்க்க அதில் கவிதைகள் பல எழுதப்பட்டிருந்ததைக் கண்டு வியப்படைந்தேன்.

"இதெல்லாம் நீர் எழுதியதா....?" நான் ஆச்சரியத்தோடு அவளிடம் கேட்டேன்.

ஒரு மெல்லிய வெட்கப் புன்னகையோடு ஆம் என்பதற்கு அடையாளமாகத் தலையசைத்தாள்.அவற்றுள் பெரும்பாலானவை போராளிகளைப் பற்றியும் தமிழீழம் குறித்தும் பெண்விடுதலையைப் பேசுவனவாகவும் அமைந்திருந்தன. அவற்றுள் ஒரு கவிதை மேற்குறித்த ஒன்றையும் பற்றியதல்லாமல் எழுதப்பட்டிருந்தது. அந்தக் கவிதை....

எனக்கு....
இதயம் இல்லை
என்று
எழுந்து போனவனே....!
என் காதல்....
உன்னிடத்தில் மட்டுமல்ல;
இந்த மண்ணிடத்திலும் கூட!

நீ தென்றல்தான்....!
நான் மறுக்கவில்லை!
ஆனால்.....
என் தேசம்
தீயில் எரிகையில்
நான் மட்டும்
காதல் தேரேறி
கடிதில் மறைவதோ......?
சொல் அன்பே....!

நான் அதனை வாசித்து முடித்து அவளைப் பார்த்தேன். அவள் தலைகுனிந்திருந்தாள். அன்றொருநாள் கண்ணன் புயலென வெளியேறி விரைந்தது என் நினைவில் வந்தது.

"என்ன பெண் இவள்! தன் காதலை மனசுக்குள் புதைத்து, விடுதலைக் கனவைச் சுமந்து திரிபவள்!"

அவளின் முன் என்னைச் சுயநலமியாய், மண் பற்று அற்றவளாய் உணர்ந்தேன்.

அவள் பேச்சை வேறு திசைக்கு மாற்றினாள். 'கொன்வர்கேசன்' முடிஞ்சுது எண்டு சொன்னீங்கள். அப்ப... இனி சாவகச்சேரிக்குத் திரும்பிப் போயிடுவீங்களா....?"

"இப்ப இல்லை....! இந்தச் சூழல் எனக்குப் பழகிப் போச்சுது. இங்கையே இருந்து குழந்தை பிறந்த பிறகு போகப் போறன்!"

அவள் முகத்தில் சந்தோஷம் தெரிந்தது. பின் அவள் விடைபெற்றுப் போனாள்.

மாதங்கள்பல ஓடி மறைந்தன. நான் அழகியதொரு பெண்குழந்தைக்குத் தாயானேன். அதன் ஒவ்வொரு அசைவிலும் நான் என்னை மறந்தேன்.

இருந்தாற்போல "என்னை மறந்து போனாயா?" என்று கேட்பதுபோல மைதிலி வந்து நின்றாள்.



முன்பைவிட இளைத்திருந்தாள். கன்னத்து எலும்புகள் தெரிய நோயிலிருந்து எழுந்து வந்தவள்போல்..... அவள் தோற்றமே மாறியிருந்தது.

"என்ன கோலம் இது மைதிலி....?"

நான் திகைத்துப் போய்க் கேட்டேன்.

"பார் பிள்ளை இவளின்ரை கோலத்தை" அவளின் தாய் என்னிடம் முறையிட்டாள்.

"வவுனியாவிலை காட்டுக்கை கனநாள் இருந்தனாங்கள். ஒரே நுளம்பு மாறி மாறி மலேரியா வந்தது. அதுதான் மெலிஞ்சு போனன்!"
அது ஒன்றும் பெரிய விஷயமல்ல என்கிற பாவனையில் கூறினாள்.

வெகுநேரம் என் குழந்தையின் கைகளைப் பிடித்தபடி அமர்ந்திருந்தாள். "எவ்வளவு மென்மையான சின்ன விரல்கள்!" என்று வியந்தாள்.

அதற்கிடையில் மைதிலியின் தாயார் சமையலறைக்குள் போய்விட்டாள்.

"நீர் கூட இயக்கத்துக்குப் போகாமல்



இருந்திருந்தால்... கண்ணனைக் கலியாணம் கட்டி..... இப்பிடி ஒரு பிள்ளையும் பிறந்திருக்கும்!" என்றேன்.

"உங்களுக்கு விசர்... கல்யாணி அக்கா என்று அவள் சிரித்தாள். அந்தச் சிரிப்பில் ஒரு ஏக்கம் கணநேரம் மின்னி மறைந்தது.

அவள் புறப்பட ஆயத்தமான வேளையில் நான் கூறினேன்.
"இனி இங்கை வந்தால் நான் இருக்க மாட்டேன்!"

"ஏனக்கா?" அவள் ஏக்கத்தோடு வினவினாள்.

"ஊரிலை வீடு ஆக்களில்லாமை பாழடைஞ்சு போகுது. இங்கை இருந்து என்ன செய்யிறது.... இவர்கனடாவுக்கு எங்களைக் கூப்பிடுற வரைக்கும் ஊரில் போய் இருப்பமெண்டு அம்மா சொல்லுறா.

ஓ....! அவள் குரலில் வருத்தம் தொனித்தது.

"நீர் எப்ப யாழ்ப்பாணம் வருவீரென்று எனக்குக் கடிதம் போட்டீரென்றால் நான் இங்கை வந்து உம்மைப் பாத்திட்டுப் போவன்!"

"நான் இனி இப்போதைக்கு வரமாட்டனக்கா!' என்றாள்.
"எங்கை போறீர்....?"
"தூர ஒரு இடத்திற்கு..."

நான் எங்கேயென்று கேட்கவில்லை. கேட்டால் உண்மை சொல்லாது சிரித்து மறைத்து விடுவாளென்று எனக்குத் தெரிந்தே இருந்தது.

போகும்போது என் குழந்தையின் கன்னத்தில் இறுக முத்தமிட்டாள். என் கைகளைப் பற்றி அழுத்தி விடைபெற்றாள். அவள் ஒழுங்கை முடிவில் சென்று மறைவதை நாங்கள் பார்த்தபடி நின்றிருந்தோம்.
மைதிலியின் தாயின் கண்களிலிருந்து கண்ணீர்த்துளிகள் உதிர்ந்தன.

"புஷ்பம்...! பிள்ளையைப் போக விட்டிட்டு கண்ணீர் வடிக்கக் கூடாது வாங்கோ போவம்!" என்று என் தாய் மைதிலியின் தாயைத் தேற்றினார்.

அன்று முழுவதும் எனக்கு அவள் நினைவாகவே இருந்தது. இருட்டிய வேளையில் விமானங்கள் இரைந்தன.

குண்டு வீசும் சத்தங்கள் காதைக் கிழித்தன. தரையிலிருந்து எதிர்த்தாக்குதல் கேட்டது.

"அநியாயப்படுவாங்கள்......! வந்திட்டாங்கள்....! சனத்தை அள்ளிக்கொண்டு போக வந்திட்டாங்கள். முருகா! இந்தப் பாதகரை நீ தட்டிக் கேட்க மாட்டாயா...?" அம்மா சாமியறையில் தஞ்சம் புகுந்தாள்.

இருள் சூழ்ந்த பிறகும் விமானங்கள் வான்பரப்பிலிருந்து மறையவில்லை. நாங்கள் நடுக்கத்தோடு பதுங்கு குழிக்குள் வெகுநேரமாக உட்கார்ந்திருந்தோம். இரவு எட்டு மணியின் பின்னரே அந்தச் சத்தங்கள் ஓய்ந்தன. உயிர்கொல்லிப் பறவைகள் போன்ற அந்த விமானங்கள் தென்திசை நோக்கிப் போயின.

"தெற்குத் திசையிலிருந்து காலன் வருவானெண்டு சொல்லுறது சரியாத்தான் இருக்கு" என்றாள் அம்மா.

சத்தங்கள் ஓய்ந்து விட்ட போதிலும் என்னால் உறங்க முடியவில்லை. குழந்தையை என்னோடு சேர்த்து அணைத்தபடி விழித்திருந்தேன். விடிகாலையில் சற்று கண்ணயர்ந்திருப்பேன்.

திடீரென யாரோ அலறும் ஓசை என்னை உலுக்கி எழுப்பியது.

"ஐயோ.... என்ரை ராசாத்தி....!" என்று மைதிலியின் தாய் உரத்த குரலில் அழுவது கேட்டது. அம்மா வேலிக்குள்ளால் புகுந்து ஓடினா. நான் அவவின் பின்னால் ஓடினேன்.

அங்கே கலங்கிய கண்களோடு இரண்டு போராளிகள் நினறிருந்தார்கள். சிந்திக்க அவகாசம் தராமல், நான் முழுவதுமாக விளங்கிக் கொள்வதற்கிடையில் அந்தத் தாய் மீண்டும் அலறினாள்.

"மைதிலி எல்லாரையும் விட்டிட்டுப் போட்டாளம்மா..... என்னை அனா-தையா விட்டிட்டு என்ரை குஞ்சு போட்டுதம்மா.

இடி இடித்தது. என் கண்ணில் மழை பொழிந்தது. கடவுளே....! இது உண்மையா.... என்று மனசு அரற்றியது.

ஆனால்... அது உண்மை! எனது இனிய ஸ்நேகிதியை, எல்லோரையும் நேசித்த அந்த ஆத்மாவை, விடுதலைக்கனலை நெஞ்சிலே சுமந்து திரிந்த அந்தத் தென்றலை நாங்கள் இழந்தோம்!

விமானத்திலிருந்து பொழிந்த குண்டு மழையால் சிதைந்துபோன அந்தச் சின்ன உருவத்தை யாரோ கொண்டு வந்து கிடத்தினார்கள். அவளைப் போர்த்தியிருந்த புலிக்கொடி இரத்தக் கறையோடு இருந்தது. சாந்தமும் ஒளியும் நிறைந்த அந்த விழிகள் துயில்வது போல மூடியிருந்தன.

"மைதிலி...! மனசை அள்ளுகிற அந்தச் சிரிப்பை இனி நான் எப்பிறப்பில் காண்பேனோ? அவளுடைய காலடியில் உட்கார்ந்து கண்ணீர் பெருக்கினேன்.

"காதலாகி கசிந்து கண்ணீர் மல்கி.... விம்முதலோடு யாரோ பாடினார்கள். அவளுடைய சகதோழிகளின் மத்தியிலிருந்து விம்மல்கள் வெடித்தன. மைதிலியின் தாய் உணர்வற்று தரையில் சாய்ந்தாள். தேவார முடிவில் யாரோ அடக்கமாட்டாமல் அரற்றுவதுணர்ந்து நிமிர்ந்தேன். ஒரு மூலையில் சாய்ந்து இரு கைகளாலும் முகத்தைப்

பொத்திக் கொண்டு அழுது கொண்டிருந்தான் கண்ணன்.

"உனக்குத் தெரியுமா...? உன்னை அவள் நேசித்தாள். ஆனால்.. அவள் தன்னுடைய மண்ணுக்காய் மக்களுக்காய் தன் சொந்த உணர்வுகளை மறைத்து மூடி, சிரிப்பு என்னும் பொய் போர்த்தி, எல்லோரையும் ஏமாற்றினாள். அதை நீ அறிவாயா...? நான் மனசுள் அவனோடு பேசினேன்.



அவளுடைய உருவம் 'சடலம்' என்கிற பெயரோடு வெறும் அஃறிணைபோல் அங்கிருந்து எடுத்துச் செல்லப்படும்வரை காத்திருக்கவில்லை. துள்ளித்திரியும் அந்தக் கால்கள் தூக்கிச் செல்லப்படுவதைக் காண நான் விரும்பவில்லை. நான் எனது வீட்டை நோக்கி நடந்தேன்.

விமானங்கள் பலியெடுப்பதற்காய் மீளவும் வந்து கொண்டிருந்தன.

எனது விழிகளில் திரண்ட நீர் அந்தப் புகைப்படத்தில் கொட்டியது. என் விரல்களால் அதைத் துடைத்து விடுகிறேன். என் பின்புறம் காலடியோசை கேட்டுத் திரும்புகிறேன்.

அம்மா...!

"என்ன பிள்ளை அழுகிறாய்.....?" அம்மா பதறிப்போய்க் கேட்கிறாள்.

நான் மௌனமாக மைதிலியின் புகைப்படத்தைக் காட்டுகிறேன்.

"எவ்வளவு தங்கமான குணம்....! வீணாய்ச் செத்துப் போச்சுது".

"இல்லையம்மா இல்லை.....! மைதிலி அநியாயமா செத்துப் போனதாய்ச் சொல்லாதைங்கோ!" நான் ஒரு ஆவேசத்தோடு கூறுகிறேன். அம்மா குழப்பத்தோடு வெளியே போகிறா.

"விடுதலைக்காக தமது இன்னுயிரை அர்ப்பணித்து, அர்ப்பணித்துக் கொண்டிருக்கிற எந்தவொரு உயிருமே வீணாய்ப் போனதல்ல! அந்தத் தியாகம், அந்த மேன்மை ஒருபோதும் வீண் போகாது. அந்த மரணங்கள் வீணானதாயின்..... இந்தச் சந்திர சூரிய அக்கினி தேவர்கள் பொய்....! தர்மமே ஜெயிக்கும் என்ற தெய்வவாக்கு பொய்.....! சத்தியம் தோற்றுப் போனதாய் சரித்திரமில்லை....! அதனால் அவர்களின் அந்த மெழுகுவர்த்திகளின் மரணம் வீணாய் போனதென்ற வார்த்தைகளால் விமர்சிக்கப்படல் கூடாது" நான் எங்கெங்கோ இருக்கிற விடுதலையை நேசிக்கிற மக்களோடு மானசீகமாகப் பேசுகிறேன்.

தூரத்தில் மழை இரைச்சலிட்டுக் கொண்டு நெருங்குவது கேட்கிறது.



# எரியும் இரவுகள்

அ. கந்தசாமி



மலைமுகட்டில் இருந்து
வழியும்
அருவியைப் போல்
பிருஷ்டத்தை வருடி
வெட்கத்தில் நெளியும்
அவள் கூந்தல்

மனிதத்தின்
மெல்லிய வேர்கள்
பெண்ணில் சினைத்து
மௌனத் தபஸில்
கிராமத்து இரவாய்
நிலம் நோக்கி இறங்கும்

மாலை வெய்யில்
கறுப்பு மல்லிகை
தோப்பின் மீது
மின்மினிப் பூச்சிகளை
விவசாயம் செய்ய
எனக்குள் விரிந்தது
வானவில் வளைவு

வீணையின் விழுதுகள்மேல்
முலை தடவும்
கன்றின் தவனம்
விரல்களில் எங்கும்
புல்லாங்குழல்களைப்
புஸ்பித்த கணத்தில்
சரீரச் சுவருள்
சங்கீத அதிர்வுகள்

அர்ச்சுனன் இலக்கில்
எழுந்த வலது கை
மூச்சுப்படும் தூரத்தில்
விரல்களைத் தொலைத்து
வெறுமைப் பட்டபோது
எனக்குள் மீண்டும்
விழிப்பு வந்தது.

கனவுகளைச் சுமந்து
கைகளை
அம்மணமாக்குவதில்
எனக்குச் சம்மதமில்லை
இதனால்
நித்திரை வருவதற்குமுன்பே
என் இரவுகள்
எரிந்து போகின்றன.

# அதியமான் நெடுமான் அஞ்சி அவனேதான் ஈழத்தில் தம்பி

வீணை மைந்தன்




பால் மணம் மாறாப் பருவம்.
பால் நிலவைக் காட்டி பாலமுதூட்டி
வளர்த்த உருவம்.
அகவை பத்து இரண்டு ஆண்டுகளே
ஆகியிருந்தது அப்போது!.
இளங்கன்று பயம் அறியாதல்லவா?
இளவரசன் தானே அவன்.
துள்ளித் திரிந்தான் பள்ளி
மாடத்திலும், பள்ளிச் சாலையிலும்.
அள்ளி அணைத்துத் தடைபோடும்
அந்தபுரத்துத் தாதிகளைப்
பந்தாடிவிட்டுப் பறந்து செல்வான்
மின்வெட்டும் வேளைக்குள்.

பயம் அறியாப் பாலகனுக்குப் பாரிய
பொறுப்பொன்று வந்தது! பாராளும்
பொறுப்பு!
என்னென்று கேட்பீர்கள்.
எடுத்துரைப்பேன்
கேளுங்கள்!
இளம் சிங்கம் இவன்
என்றால் ஆர்த்தெழுந்த
தந்தையோ அரிமாவைப்
போன்றவராம்!
அயல் நாட்டுப் படைவீரர்
ஆர்ப்பரித்து வந்தவேளை
பூப்பறிக்கும் வேலை
போன்று போர் வாளால்
சிரங்குவிக்கும் மறக்குலத்து
மன்னன் அன்றோ அவர்.
பாராளும் தேர் செலுத்தி
படைமுகத்தில் வலம் வந்த
ஊர் போற்றும்
உத்தமனைப் பாடையிலே
காண்போமோ!
விழுப்புண் தாங்கியவன்
விண்ணுலகம் சென்ற
செய்தி வீரமிகு
செய்தியன்றோ!

அழுவதே தெரியாத
அரிமாவின் ராஜ்யத்தை
யாரிடத்தில்
கொடுப்பதென்று
அமைச்சரவை கூடியது!
வயதில் சிறியவன் தான்! வாள்
வீச்சில் புயலவன்!
பருவம் பன்னிரண்டு தான். படிப்பறிவு
பாராளப் போதுமென்றனர்!
அஞ்சா நெஞ்சன். ‘அதியமான்
நெடுமான் அஞ்சியே எங்களை ஆள
வேண்டும்’ என்றனர் அவையில்
கூடியிருந்த அந்நாட்டு மக்கள்!
மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு!
பாலகன் ‘அதியமான் நெடுமான்
அஞ்சி’ பாராளும் கட்டிலேறினான்.

ஆள் அம்பு சேனையின் அணிவகுப்பு
கண்டு நின்றான்.
பன்னிரண்டு வயதில் படைமுகத்தில்

புதுப் பொறுப்பு!
என்னென்று இவனால் மண்
பொறுப்பைக் காக்க முடியும் என்று
அச்சம்.கொண்ட அமைச்சரவை
ஆச்சரியத்தால் திணறியது.
பின் அகமகிழ்ந்தது. இளையவனின்
ஆண்மை கண்டு இறும்பூதெய்தியது
நீதி காக்கும் திறன் கண்டு பாதி
விழிகளை அகலத் திறந்தது.
வள்ளல் குணம் கண்டு வாழ்த்துப்
பாடியது!

மணிமுடி தரித்த மாணவ மன்னனின்
மகிமையை மதிப்பதற்கு அயல் நாட்டு
அரசுக்கும், அண்டை நாட்டு
மன்னர்களுக்கும் மனம்
ஒப்புக்கொள்ளவில்லை.

மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கும்
மணம் உண்டு என்று சொல்ல மனம்
வராத காலம் அது.

பால் குடிக்கும் பாலகன் பட்டம்
சூடுவதா? பார் ஆளுவதா? 'பொடியன்'
இவன்! படையெடுத்தோமானால்
பொடிப் பொடியாகி விடுவான்!

பொறாமையின் வேகம் பேராசையாகிப்
போர் தொடுக்க முனைந்தனன் பொது
அறிவு இல்லா மன்னன் ஒருவன்.

கத்தி வீசப் புறப்பட்டவனைப் புத்தியாய்
வெல்வதற்குப் புறப்பட்டாள்
புலமைமிகு தமிழ்க் கிழவி!

மூத்த தமிழ் அறிந்த முதுமைப்
பாட்டியவள்!
குழவியாய் வடிவெடுத்த குழந்தை
முருகனுக்கு அமுதத் தமிழ் உரைத்த
அவ்வைக் கிழவியவள்.

அயல்நாட்டு மன்னனிடம் தூதாகப்
போய் நின்றாள்!
எழில் சூழ்ந்த மன்னவனே பயிலாத
பாடங்கள் பல உனக்கு நான்
உரைப்பேன்.

மயிலாடக் கண்டது போல்
மன்னனுக்கும் மற்றையோர்க்கும்
மனமகிழ்ச்சி துள்ளியது.
அவ்வைப் பாட்டியவள் அரசவைக்கு
வந்ததினால் அளவில்லா ஆனந்தம்.
அளப்பரியா மரியாதை!
பதிலுக்கு மரியாதை பாட்டியும் தந்து
விட்டுப் பாட்டொன்று உரைத்திட்டாள்.

பாட்டி சொன்ன பாட்டுக்குப் பொருள்
விளக்கம் கேட்டிடுவீர்!

"மன்னா! சிந்தித்துச் செயல்படுவீர்!
செய்வதற்குத் துணிந்து விட்ட செயல்
சீரிய செயலன்று! மட்டமான புத்தி
கொண்டவரல்லவோ திட்டமிடாது
செயல்படுவீர்! எச்சரிக்கை
செய்கின்றேன்! அதற்கெனவே நான்
வந்தேன்!"

உன்னுடைய நாட்டின் காடுகளிலே
குட்டையுண்டு; குளமுண்டு!
குளத்தினிலே முதலையுண்டு!
குளத்திலும் குட்டையிலும்
விளையாடும் உன் நாட்டின் வீரமிகு
சிறுவர் குளத்தையும்-குட்டையையும்
குழப்புவர்; கலக்குவர்!

முதலைகள் இருப்பது தெரிந்தும்
ஆபத்தை அறியாது அச்சமின்றி
விளையாடுவர்!
வீரமிகு சிறுவர்கள் அல்லவா உன்
நாட்டுப் பிள்ளைகள்! அச்சத்தை
அறியாத அஞ்சா நெஞ்சர்கள்!
முதலைகளின் வாயிலிருந்து தப்பி
விடுவார்கள்!
உண்மை தான்!

ஆனால், தாகத்தைத் தீர்ப்பதற்குத்
தண்ணீர் குடிக்கக் குட்டைக்குச்
சென்ற மாபெரும் யானையை அந்த
முதலை மடக்கிப் பிடித்து இழுத்துச்
செல்கிற காட்சியையும் நீ
கண்டிருப்பாய. முதலை சிறியது!
யானை பெரியது!

சிறிய முதலை பெரிய யானையை வென்று விடுகிறது!
என்னுடைய நாட்டு மன்னன் சிறியவன் தான்!
ஆனால் முதலையைப் போன்றவன்!
அதியமான் நெடுமான் அஞ்சியை
உங்களுக்குப் புரியவில்லை.!
அவனைப் பாலகனாகப் பார்க்கின்றீர்கள்!
அவனுடைய அஞ்சா நெஞ்சத்தையும் வீரதீரச் செயல்களையும் விளையாட்டாக
நினைக்கிறீர்கள்!
கடுகு சிறிது காரம் பெரிது என்பார்களே!
எமது மன்னனைப் பொறுத்தளவில் அது
உண்மை. உருவம் கண்டு நகையாதீர்!
பருவம் பார்த்துப் பகிடி பண்ணாதீர்!
எனது புத்தியைக் கேட்டால் நன்மை;
கேட்காவிடில் நாசம்!
ஆகவே போரைத் தவிர்த்துப் பொறுப்புடன் நடவுங்கள்!
பொடியன் என்று சொல்லி இளக்காரம் செய்யாமல் உங்களைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள்!

அவ்வைப் பிராட்டியார் பாடி வைத்த
அதியமான நெடுமான் அஞ்சியை நாங்கள்
புறநானூற்றில் பார்த்தோம்!
தமிழீழத்தில் நீங்கள் ஒரு 'பொடியனை'ப் பார்க்கிறீர்கள்!
ஒன்றல்ல பல பொடியன்கள்!
'தம்பி' என்றும் சொல்வீர்கள்!
அவர்கள் எல்லோரும் எமது தாயகத்தின்
'அதியமான் நெடுமான் அஞ்சி'களே!

## மழை

வானத்தையும்
பார்க்கவில்லை
வானிலை
அறிக்கையையும்
பார்க்கவில்லை
அப்போ
எப்படித்தெரியும்
இந்த
எறும்புகளுக்கு
மழைவரப்
போவது
வீடுகளுக்குள்
ஒளிந்து
கொண்டனவே

எஸ். லிங்கேஸ்

இதோ பாடல்:

"போற்றுமின், மறவீர்! சாற்றுவதும் நும்மை
ஊர்க்குறு மாக்கள் ஆடக் கலங்கும்
தாள்படு சிலநீர்க் களிறு அட்டு வீழ்க்கும்
ஈர்ப்புடைக் கதா அத்து அன்ன என்னை
நுண்பல் கருமம் நினையாது
'இளையன்' என்று இகழின் பெறல் அரிது ஆடே,"

புறநானூறு 104





என்

வானை முட்டும் மாடங்கள் மலிந்து கிடக்கும்
தேனையொத்த வாழ்வளிக்கும் கனடாநாட்டில்
தேன்தமிழை வளர்க்க நாளும் முயன்றுவரும்
நான் படித்துச் சுவைக்கும் நல்ல ரோஜா மலரே!

முத்தான மூன்றாண்டை முடித்து விட்ட
மூத்ததொரு சஞ்சிகையாம் முத்தமிழை வளர்க்க
சொத்தாக எங்களுக்குக் கிடைத்துவிட்ட
தித்திக்கும் சுவையொழுகும் ரோஜா மலரே!

வண்ணங்கள் கொண்டு நல்ல வடிவமைத்து - இலக்கிய
எண்ணங்கள் தனை வடிவாய் ஏட்டில் வடித்து
சன்னங்கள் பட்டு மடியும் தமிழ் வாழ்வை
முன்னங்கமாகப் பதிக்கும் ரோஜா மலரே!

காவியங்கள் படைக்கும் ஈழத்தமிழின் வாழ்வில்
சீவியம்தான் இங்கே எப்படியென்று - நவீன
ஓவியமாய் பார்த்திருந்தேன் பக்கமொன்றில் - அதையே
பாவியற்றி பாடுகின்றேன் ரோஜா மலரே!

வனம் சென்று வாழ்ந்தாலும் இராமன் - அன்று
குணம் கெட்டு வாழவில்லை குறிக்கோள் தவறி - அதுபோல்
கனம் கொண்ட மனிதனை நல்வழிப்படுத்தும்
மனம் விட்டு சொல்லும் வண்ண ரோஜா மலரே!

தொழில் நுட்பத்தையும் வர்த்தகத்தையும் வாழ்வில் வளர்க்க
எழில் நுட்பமாகவே கருத்துக்கள் வழங்கி - தமிழன்
விழிப்புடன் வாழவும் வழிகள் சொல்லி - நாளும்
செழிப்புடன் வளரும் ரோஜா மலரே!

பொன்வண்டு புகுந்தாடும் சோலை இதுவோ? - நாளும்
கண்கண்டு களிக்கும் சிறப்பாசிரியர் பக்கங்களோ
வெண்பட்டுக் குழந்தைகளின் மழலை மொழிபோல் - என்
கண்பட்டு போனதுவோ ரோஜா மலரே!

கரும்பாக இனிக்கும் தமிழ் இலக்கியத்துறையில் - எழுத்தாளர்
அரும்புகளை அறிமுகமாக்கும் அழகைக் கண்டு
வரம்புகள் இல்லா அத்துறையை நாடி - புதியவர்
எறும்பாக மொய்த்தனர் ரோஜா மலரே!

மாதமொருமுறை மலரும் வண்ண மலரே - உன்னில்
வீதமொருசிறப்பை நானும் கண்டு கொண்டேன் - அதனால்
பாதமொருமுறை பணிந்தேன் ரோஜா மலரே!

கங்கையா நாகேந்திரன்

# விடிவை நோக்கி

நிலா குகதாசன்

வெளியே மழை கொட்டிக் கொண்டிருந்தது. அடிக்கடி காற்று அதிகமாகும்போது கேட்கும் "உய்" என்ற ஓசையைத் தவிர வேறு சத்தமின்றி அந்த இரவு அமைதியாயிருந்தது. மாலை நாலு மணியளவில் ஆரம்பித்த மழை இரவு பன்னிரண்டு மணியாகியும் விடுகிறமாதிரியில்லை. வெட்புகாரில் தொடங்கிய மழை என்பதால் இலேசில் விடாது என்பது அன்னம்மாவிற்கும் தெரியும். அத்தோடு கோடைகால மழையென்பதால் காய்ந்து கிடந்த கூரையால் நிறைய ஒழுக்கு. ஒழுக்குகளுக்காகப் பாத்திரங்களை எடுத்து வைத்துவிட்டு ஒரு மூலையில் சுருண்டு படுத்திருந்தாள்.

காலையிலிருந்து எதையுமே சாப்பிடாமல் தேனீருடன் இருந்ததால் வயிறு கடகடத்தது. மனம் அழுதபடி நினைவுகள் எங்கோ தவறிய நிலையில் நித்திரையுமற்ற, விழிப்புமில்லாத ஒரு உணர்வு. இந்த உலகமே தன்னோடு சேர்ந்து அழுவதாக அன்னம்மாவிற்கு ஒரு நினைப்பு. வெளியே மழை கொட்டியபடியேயிருந்தது.

"அன்னம்மாக்கா! பள்ளிக்கூடத்துச் சுவரில உங்கட கனகுவின்ர பெரிய படம் ஒட்டியிருக்குது. கையிலை மிசின்கண்ணோட நல்லவடிவான படம்".

பக்கத்து வீட்டு ராசம்மாவின்ர பேரன் நாதன் காலையில் வந்து சொன்னதிலிருந்து அன்னம்மாக்கா இதே நிலைதான்.

அன்னம்மாக்காவைத் தெரியாதவர்கள் அந்த வட்டாரத்தில் இல்லையெனுமளவிற்கு அவளது பெயர் பிரசித்தம். அவளது தயாரிப்புக்களான அப்பம், இடியப்பம், தோசை, வடை என்பவற்றிற்குப் பயங்கர கிராக்கி. அவளது கைருசியே தனியானது. அந்த வட்டாரத்திலுள்ள தேனீர் கடைக்கு இவற்றை அவித்துக் கொடுப்பதுதான் தொழில். அத்தோடு வீட்டிலும் வழமையாக வரும் வாடிக்கையாளருக்காக எப்போதுமே உணவு தயார் நிலையிலிருக்கும். அவள் வீட்டுப் பருப்பு வடைக்காக குழந்தைகள் முதல் கிழடுகள் வரை ஒரு கூட்டமே காத்திருக்கும். அன்னம்மாக்காவின் ஒரேமகன்தான் கனகராசா.

சின்னவயதிலேயே தகப்பனை இழந்த கனகராசாவிற்கு அவள்தான் எல்லாமே. சொந்தமாக ஒரு சிறு வீடு. கொஞ்சம் காணி. அதுதவிர நாலு

ஏக்கர் வான்பார்த்த வயற்காணி. இதனைக் குத்தகைக்குக் கொடுப்பது. அதன் மூலம் ஐந்து மூடை நெல் வரும். காணியிலுள்ள மா, பலாமரங்கள் கொஞ்சம் தென்னைகள் அதோடு கடையப்ப வருமானம் என்று தனது வாழ்க்கையைச் சிரமமின்றி ஓட்டிக் கொண்டிருந்தாள்.

கனகராசா மிக அமைதியானவன். தானுண்டு தன் வேலையுண்டு என்றிருப்பான். படிப்பிலும் நல்ல கெட்டிக்காரன். எப்படியும் நல்லமுறையில் படிப்பித்து அவனை ஒரு வாத்தியாராக ஆக்குவதுதான் அன்னம்மாவின் நெடுநாளைய ஆசை. அந்த ஆசையை முறிக்காதபடி கனகராசாவும் நன்றாகவே படித்தான். தனது சக்திக்கு மீறி அவனை உயர் வகுப்பிற்காகத் திருமலையிலுள்ள ஒரு பெரிய கல்லூரியொன்றில் சேர்த்து விட்டாள். தினமும் பஸ்ஸில் போய்வரும் மகனுக்கு சாப்பாடு கட்டுவதே அவளுக்குப் பிடித்தமான ஒன்று. கடையப்பம் வாங்க வருவோருக்கெல்லாம் தன் மகன் கனகுவைப் பற்றி வாய் ஓயாமல் சொல்லுவதே அவளது பொழுது போக்கு. ரவுனுக்குப் படிக்கப் போன பின்னர்தான் கனகுவின் நடையில் சிறிய மாற்றம். யாருடனுமே அதிகம் பேசாத கனகு இப்போதெல்லாம் அடிக்கடி யாரையாவது தன் நண்பர்களென்று கூட்டிவரத் தொடங்கினான்.

சனி, ஞாயிறுகளில் முன்பெல்லாம் வீட்டில் நின்று அன்னம்மாக்காவிற்கு அடுப்படியில் உதவி செய்பவன், இப்போதெல்லாம் ஊரிலுள்ள சில படித்த இளைஞர்களுடன் ஏதாவது பேச்சுக்களில் ஈடுபட்டிருப்பான். "குசு, குசு" என்று இரகசியப் பேச்சுக்கள். அன்னம்மாக்கா அவனது இந்த நடவடிக்கைகளைக் கண்டும் காணாதது போல் இருந்து விடுவாள். ஓரிரு முறை புதிய இளைஞர்கள் பற்றிக் கேட்ட போதும் அவன் "அவங்கள் என்னோட படிக்கிறவங்கள்" என்று சொல்லி விட்டான். அந்தக் காலத்தில் நான்காம் வகுப்புவரை படித்த அன்னம்மாக்காவிற்கு இந்தக் காலப் பொடியள் பற்றி புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் ஒன்றுமட்டும் புரிந்தது. அது தன் மகன் முன்பு மாதிரி இல்லையென்பது மட்டுமே.



உயர் வகுப்புக்கான பல்கலைக்கழகப் புகுமுகப் பரீட்சை நெருங்கிக் கொண்டிருந்தது. கனகராசாவும் இரவு பகலாகப் படித்தான். பரீட்சையும் முடிந்தது. அதன்பின் அவனது போக்கில் நிறைய மாற்றங்கள். அடிக்கடி எங்காவது வெளியே போவது. ஒருநாள் இரவு வரவேயில்லை. அன்னம்மாக்காவிற்கு அன்றிரவு நித்திரையே வரவில்லை. மறுநாள் பின்னேரம் சில

பொடியளுடன் வந்தபோது, ஆற்றாமையோடு கேட்டாள்; தன் சிநேகிதர்களுடன் தங்கியதாகச் சொன்னான். அன்னம்மாக்கா அதைப் பெரிதுபடுத்தாமல் "வளர்ந்த பொடியன் அவனுக்கும் நாலுபேர் தேவைதானே" எனத் தன்னைச் சமாதானப்படுத்திக் கொண்டாள்.



பரீட்சை முடிவுகள் வெளியாகின. கனகராசா திறமையாகச் சித்தியடைந்திருந்தான். ஊரிலுள்ள படித்தவர்களின் பாராட்டுக்கள் ஊர்ப் பள்ளிக்கூட வாத்தியார்கள், நேரில் வந்து பாராட்டினார்கள். அன்னம்மாக்காவிற்குத் தலைகால் புரியாத மகிழ்ச்சி. தன் மகனின் திறமைபற்றிப் பேசியே களைத்துப்போனாள். உடனடியாக ரவுனுக்குப்போய் அவனுக்கு ஒரு "ஓம் முருகா" பென்ரன் வாங்கி வந்தாள். முருகன் கோயில் அபிஷேகம் வேறு. அபிஷேகம் முடிந்து அடுத்த நாளிரவு கனகராசா வீட்டுக்கு வரவில்லை. இரண்டு நாள்......மூன்றுநாள்.... நான்காம் நாள் அன்னம்மாக்காவின் பெயரில் ஒரு கடிதம் வந்தது. "அம்மா! நான் ஒரு முக்கிய வேலையில் ஈடுபட்டுள்ளேன். உயிருடன் இருந்தால் உங்களை மீண்டும் சந்திப்பேன். என்னை மன்னித்து விடுங்கள். கனகு".

நாட்கள் வாரங்களாகின. கனகரா-சாவைப்பற்றி ஊரில் கிசு கிசு. அவனும், இன்னும் சில பொடியளும் சேர்ந்து இயக்கத்துக்குப் போயிட்டாங்களாம். அன்னம்மாக்கா நாட்களை எண்ணியபடியே காலத்தை ஓட்டினாள். வாரங்கள்.... மாதங்கள்.... வருடமும் ஒன்றாயிற்று. அவனிடமிருந்து எந்தத் தகவலுமில்லை. அன்னம்மாக்கா ஒவ்வொரு வெள்ளியும் கோயிலுக்குப் போவாள். தன் கவலைகளை முருகனிடம் சொல்லுவதில் ஒரு ஆறுதல். "முருகா! என்ர பிள்ளைக்கு ஒரு குறையும் வராமல் காப்பாத்து...."

மண்டபத்திலிருந்த கலண்டரில் மோதகம் வைத்துக் கொண்டிருந்த பிள்ளையார் போய்ப் புதிய கலண்டரில் முருகன் சிரித்தபடி அபயம் சொல்லிக் கொண்டிருந்தார். அன்னம்மாக்கா நாட்களைக் கணக்குப் பண்ணினாள்.... " ம்.... கனகு போய் ஒண்டரை வருஷம் முடிஞ்சுது...."

அன்றும் இப்படித்தான் மழை பெய்துகொண்டிருந்தது. வெளிக் கதவினை யாரோ திறக்கும் சத்தம் கேட்டது. மழைக்குப் பயந்து வெளி விறாந்தையில் சுருண்டிருந்த நாய் குரைத்தபடியே வெளியே பாய்ந்தது. நாயை அதட்டிய அந்தக் குரல்.... கனகராசாதான்! அன்னம்மாக்கா வெளியே எழுந்து வந்து

விறாந்தையில் கட்டியிருந்த அரிக்கன்லாம்பைத் தூண்டிவிட்டாள். முற்றத்தில் நனைந்தபடி வருவது அது... கனகுதான்! அவனுக்குப் பின்னால் இன்னும் இருவர்.

"அம்மா!......
"கனகு! ஓடிவந்து கட்டிப்பிடித்து ஓவென்று அழுதாள் அன்னம்மாக்கா.
"அம்மா! என்னணையிது; சின்னப்பிள்ளை மாதிரி.... அழாதைய-ணை....."
"ஐயய்யோ நல்லா நனைஞ்சிட்டாய்.... உள்ளவா மோன.... துவாய் தாறன். முதல்ல தலையைத் துடை.... இல்லையெண்டாக் காச்சல் வந்திடும்...."

கனகு சிரித்தான்.... பின்னால் திரும்பித் தன்னுடன் வந்த நண்பர்களைப் பார்த்தான்..... அதெல்லாம் அப்ப.... இப்ப எல்லாம் பழகிற்று.... அது கிடக்கட்டும் அம்மா! முதல்ல சாப்பிட என்ன இருக்குது? பேயாப் பசிக்குது.... நாங்கள் மூண்டுபேரும் சாப்பிட வேணும்.... எதண்டாலும் இருக்கா...?

ஒன்றரை வருடத்தின் பின் தன் மகன் வந்து சாப்பிட வேணும் எண்டு கேட்பது..... அவள் சுறுசுறுப்பானாள்.

"கொஞ்சம் இருங்கப்பா!... இப்ப ஒரு நொடியில இடியப்பம் அவிச்சுத் தாறன்".... இடியப்பமும், கருவாட்டுக்குழம்புமாக சாப்பிட்டு முடியும்போது சாமமாகிவிட்டது.

"அம்மா! இவன் சுருளி. அவன் கோபி" இப்போதுதான் அன்னம்மாக்கா அவர்களைப் பார்த்தாள். நல்ல உடற்கட்டுடன் உயரமாக...... இருவரது தோளிலும் ஒரு இயந்திரத் துப்பாக்கி இருந்தது. கனகுவின் இடுப்பிலும் ஒரு சிறிய துப்பாக்கி இருந்தது. "அதோட என்ர பெயரையும் மாத்தியாச்சு. என்ர பெயர் இப்ப சங்கிலி'. அடுத்தடுத்த அதிர்வுகளால்உறைந்து போயிருந்த அன்னம்மாக்கா மெல்லக் கேட்டாள் "ஏனப்பு பெயர் மாத்தினனீ?... கனகு எண்ட பெயர் புடிக்கேல்லையா....?

"அதெல்லாம் பிறகு சொல்லிறன்... இப்ப இவங்களைப் படுக்க விடவேணும்"..... காலம அஞ்சு மணிக்கு எழுப்பினால் போதும்..."

அவர்களைப் படுக்க விட்டிட்டு அவன் தாயின் அருகில் படுத்தபடி இந்த ஒன்றரை வருட வாழ்க்கை பற்றி மனம் விட்டுப் பேசினான். எதையுமே குறுக்கே பேசாமல் தலையசைத்தபடி கேட்டுக் கொண்டிருந்த அன்னம்மாக்கா முடிவில் கேட்டாள், "அப்பு நீ சொல்லிறது சரிதான்.... ஆனா நீ எனக்கு ஒரே மகன்.... உன்ன விட்டா எனக்கு ஆரிருக்கினம்?.... இதெல்லாம் வேற ஆராவது பார்க்க மாட்டாங்களா...? நீ ஏனப்பு சேந்தனீ? நீ ஆருக்காக இதில சேரவேணும்?....

கனகு எதுவும் பேசவில்லை. மெல்ல எழுந்துபோய் முன் விறாந்தாவிலிருந்த குடத்தில் தண்ணீர் வார்த்துக் குடித்தான். அன்னம்மாக்காவும் எழுந்து போனாள்.
"அம்மா! முத்தத்தில் நிற்கிற இந்தப் பிலா மரம் ஆரணை நட்டது?.......
"ஏன்? எங்கட அப்புதான்...... நான் சின்னப்பிள்ளையா இருக்கேக்குள்ளைதான் நட்டவராம்......
"அதுசரி....அவர் அதின்ர பழம் சாப்பிட்டவரோ....?
"அவர் எங்கடா சாப்பிட்டவர்.... அவர்தான் பாம்பு கடிச்சு செத்திட்டாரே! பிறகெங்க சாப்பிடுறது?

தன்ர புள்ள குட்டியாவது சாப்பிடட்டும் எண்டுதான் நட்டவர்..... ஏன் இப்ப நாங்கள் சாப்பிடுறம் தானே?....

"இது மாதிரித்தானம்மா இந்தப் போராட்டமும்.... நாங்கள் நல்லாயிருக்க எண்டில்ல.... வரப்போற எங்கட சந்ததியாவது நிம்மதியாகவும், சந்தோஷமாயும் இருக்கவேணும்.... இப்ப நாங்கள் படுற அவதி அவங்களும் படக்கூடாது. அதாலதான் நான் இதில சேந்தனான்....."



அன்னம்மாக்காவிற்கு ஏதோ புரிந்தது போலிருந்தது. தன் மகன் இவ்வளவு அழகாகத் தனக்கு விளங்கப்படுத்தினதை நினைக்க பெருமையாயும் இருந்தது. தன்னிடம் விளக்கம் கேட்ட மகன் இன்று தனக்கே பாடம் படிப்பிப்பதை நினைக்க சந்தோஷமாயிருந்தது. அதன்பின் அவள் எதுவுமே கேட்கவில்லை.

இப்போதெல்லாம் அன்னம்மாக்கா வீடுதான் சங்கிலியும் அவனது சக இயக்கத்தினரும் வந்துபோகும் முக்கியமான இடம். அவளுக்கு அவனது இயக்கத்தைச் சேர்ந்த அனைவரது பெயரும் அத்துப்படி. லோகன், ராஜி, சுருளி, கமால், காக்கா, அம்மான், சிங்களவன் என்று ஆட்களையும், A.K. 47, M-16, G-3, எல்.எம்.ஜி, ரொக்கட் லோஞ்சர் என்று ஆயுதங்களையும் பிரித்தறியுமளவிற்கு அன்னம்மாக்கா அவர்களில் ஒருவராகவே மாறிவிட்டாள்.

ஒருநாள் சங்கிலி ஒரு புதியவரை அழைத்து வந்தான். "அம்மா! இவர்தான் மாவட்டத்துக்குப் பெரியவர். இவருக்குக் கொஞ்சம் "அல்சர்" பிரச்சனையிருக்கு. அதால கறியில உறைப்பைக் குறைச்சுச் சமைக்க வேணும். நாங்கள் ஒரு அலுவல் முடிச்சிற்று வாறம்....."

அன்னம்மாக்காவிற்கு ஆச்சரியமாயிருந்தது. ஐந்தடி ஆறங்குல உயரமிருக்கும். முப்பது வயது மதிக்கத்தக்க தோற்றம். தலைமயிர்கள் அரைவாசி நரைத்தபடி.... "என்னம்மா! அப்பிடி பாக்கிறியள்..... எங்களால உங்களுக்குச் சிரமம் இல்லையா?.....

அவர் கேட்டபோது அன்னம்மாக்காவிற்கு கோபம் வந்து விட்டது. "தம்பி! நீங்களெல்லாம் ஆர்பெத்த புள்ளயளோ எனக்குத் தெரியாது. ஆனா.... ஒண்டுமட்டும் உண்மை. இந்தக் கிழட்டுச் சீவன் உங்களுக்கு எப்படியும் சமைச்சுப்போடும்..... உங்கட

ஆசையள விட்டிட்டு மற்றவர்களுக்கு உதவி செய்ய உங்கட உயிரையே குடுக்க நினச்சீங்களே!..... அந்த முருகன் உங்களைக் காப்பாத்துவார்....

இதைச் சொல்லி முடித்தபோது அவள் அழுது விட்டாள். அவர் அன்னம்மாக்காவின் தோளைத் தட்டியபடி "அம்மா! நான் சும்மா பகிடிக்குத்தான் சொன்னனான். உங்களப்பற்றி எனக்குத் தெரியும். உங்களின்ர சாப்பாட்டு ருசியைப் பற்றித்தான் எங்களின்ர பொடியள் சொல்லுவினம்.....

அதுமட்டுமல்ல! சங்கிலியைப்போல ஒரு பிள்ளையப் பெத்ததுக்காக நீங்கள் பெருமைப்படவேணும்.... என்ர வலதுகை அவர்தான்! அதோட குறிபார்த்துச் சுடுறதில வலுவிண்ணன்...

அன்னம்மாக்காவிற்கு வயிற்றில் பால்வார்த்தன அவரின் வார்த்தைகள். தன்பிள்ளை திறமையானவனென்பதை அடுத்தவர் சொல்லிக் கேட்ட பூரிப்பு அது. அந்த நாட்கள் உண்மையிலேயே அவளுக்கு ஆனந்தமயமானவை.

காலம் காலில் சக்கரம் கட்டியபடி ஓடிக்கொண்டிருந்தது. இப்போதெல்லாம் தினமும் எங்காவது மோதல் நிகழ்ந்த வண்ணமிருந்தது. அன்று சித்திரை வருடப்பிறப்பு. பகல் சங்கிலியும் சிலரும் வந்து சாப்பிட்டுவிட்டுப் போனார்கள். அன்றிரவு ஒருமணியளவில் ஊரின் எல்லையிலுள்ள உப்பாற்றுக் கரையருகே துப்பாக்கிச் சத்தம் கேட்டது. தொடர்ந்து ஒரு மணிநேரமாகச் சண்டை. அதிகாலை நான்கு மணியளவில் சங்கிலியும் அவனது நண்பர்களும் வந்தனர்.



வெடிச்சத்தம் கேட்டதிலிருந்து நித்திரை வராமல் முருகா முருகாவென்று அழுதுகொண்டிருந்த அன்னம்மாக்கா ஓடிவந்து பார்த்தபோது மூன்று உடல்கள் துப்பாக்கியினால் சல்லடையாகி....

அதற்குமேலும் பார்க்கமுடியாமல் தலை சுற்றியது. கீழே விழப்போனவளைச் சங்கிலி தாங்கிப் பிடித்தான். மெல்ல தன் உடலில் சாய்த்தபடியே அழைத்துப்போய்ப் படுக்கச் சொன்னான்.

"தம்பி!.... என்ன விட்டிட்டுப் போகாதை.... கொஞ்சம் இரய்யா..... உன்னோட கதைக்கோணும்....

....என்னம்மா? சொல்லுங்கவன்.......
கனகு!.... என்ர ராசா.... அப்பு..., நீ
இதில இருந்து விலத்தோணும்....
.......என்னம்மா சொல்லுறீங்க.....
.... அப்பு! நீ எனக்கு ஒரே பிள்ளை....
உனக்கொண்டு நடந்தா..... என்னால
தாங்க ஏலாதய்யா!..... எனக்குச்
சத்தியம் செய்து தரோணும்.... நீ
விலத்தப்பு.... என்ர குஞ்சல்லோ.....

அழுதபடி அவனைக் கட்டிப்பிடித்துக்
கொண்டே கெஞ்சினாள் அவள்.
அவன் எதுவும் பேசாமல் இருந்தான்.
சிறிது நேரத்தின்பின் தாயின்
தலையைத் தடவியபடி சொன்னான்
"அம்மா! உங்களுக்கொரு கதை
சொல்லுறன். உண்மையா நடந்தது.
ஆனால் இஞ்சயில்ல. வியட்நாம்
எண்டொரு நாட்டில. அங்கையும்
இதுமாதிரித்தான் பிரச்சனை....
போராட்டம்.... கனகு கதை சொல்லத்
தொடங்கினான்.

கூலிப்படைகளினால் துரத்தப்பட்ட ஒரு
போராளி ஊர்மனைக்குள் வருகிறான்.
அங்கிருந்த ஒரு வீட்டினுள் நுழைந்து
அடைக்கலம் கேட்கிறான். அங்கே
ஒருதாய் சுகவீனமுற்றிருந்த தன்
மகனுடன் இருக்கிறாள். போராளியை
உள்ளே அழைத்து வந்து
ஒளித்திருக்கும்படி சொல்கிறாள்.
ஆனால் அந்தப் போராளி
அவ்வீட்டினுள் நுழைந்ததை ஒரு
படைவீரன் பார்த்து விட்டான். சிறிது
நேரத்துள் அந்த வீட்டை
முற்றுகையிடுகின்றன கூலிப்பட்டாளம்.
உள்ளே நுழைந்த ஒருவன் அந்தத்
தாயிடம் ஓடி வந்தவனை வெளியே
கொண்டு வருமாறு கேட்கிறான்.
அந்தத் தாயோ சுகயீனமாக இருந்த
தன் மகனை அழைத்து வந்து
இவன்தான் என்கிறாள். அந்த மகன்
தாயின் முன்பே வேட்டை
நாய்களினால் சல்லடையாகி
விடுகிறான். படையினர் அகன்றதும்
அந்தப் போராளி வெளியே வந்து
அம்மா! என்ன காரியம்
செய்தீர்கள்?.... ஏன் இப்படி
நடந்தீர்கள் என்று கண்ணீரோடு
கேட்க அவளோ "தம்பி! எனக்கு
இன்னொரு மகனிருக்கிறான். அவன்
மூலம் ஆறுதலடையலாம். ஆனால்
ஒரு போர்வீரனை உருவாக்குவது
எவ்வளவு சிரமமானது" என்று அழுது
கொண்டே சொல்கிறாள்.

அன்னமாக்கா கதையைத் திறந்த
வாய் மூடாமல் கேட்டுக்
கொண்டிருந்தாள். அம்மா!.... என்ர
அம்மாவும் ஒரு வீரத்தாயாக
இருக்கிறதுதான் எனக்கு விருப்பம்.
அவள் அழவே கூடாது.... என்ன
நடந்தாலும் அதைத் தாங்கிக்
கொண்டு எங்கட நாட்டு
விடுதலையில பங்கெடுக்கோணும்....

இது நடந்து ஒரு மாதத்தின் பின்
எல்லைப்புறத்தில் காவலுக்குப்போன
சங்கிலியை மறுநாள் துப்பாக்கியினால்
துளைக்கப்பட்டு, அப்போதும் சிரிப்பு
மாறாத முகத்தோடுதான்
அன்னம்மாக்கா கண்டாள்.

எங்கேயோ ஓநாய் ஊளையிட்டது.
நினைவுகளிலிருந்து விடுபட்டவள்
மெல்ல வெளியே வந்து பார்த்தாள்
மழை விட்டிருந்தது. அவளது
மனதைப் போலவே வானமும்
தெளிவாயிருந்தது. பறவைகளின்
ஓசை கேட்டு அதிகாலை நாலு
நாலரை மணியிருக்குமென ஊகித்துக்
கொண்டாள். விடிவதற்கான
அறிகுறிகள் ஆங்காங்கே தெரிந்தன.

அந்த விடிகாலை வேளையில்
அவளுக்கு ஏனோ "என் மகன் வீரன்.
அவனுக்காக நான் அழமாட்டேன்"
என்று சத்தம்போட்டு கத்த வேண்டும்

போலிருந்தது. "கனகு! நான் அழமாட்டன்... உன்ர விருப்பப்படியே நான் நடப்பனய்யா!....

அவளுக்கு கனகுவை ஒருமுறை பார்க்கவேணுமெண்ட உத்வேகம். உள்ளே போய் அரிக்கன் லாம்பை எடுத்தவள் மெல்லக் கதவைத் திறந்து பள்ளிக்கூடத்தை நோக்கி நடந்தாள். அவனது படம் ஒட்டியிருந்த சுவருக்கு அரிக்கன் லாம்பைத் தூக்கிப்பிடித்துத் திரியை தூண்டினாள்.

அவளது கனகு ஏ. கேயுடன் சிரித்துக் கொண்டிருந்தான். வழக்கத்தை விட ராணுவ உடையில் மிக அழகாக இருந்தான்.

அவனது முகத்தை தடவியபடி "என்ர குஞ்சு! ராசா!.... என்னவடிவாயிருக்கிறாயப்பு.... என்னத் தனிய விட்டிட்டுப்போக எப்பிடியப்பு மனம் வந்தது?......

கண்களைத் துடைத்தபடி கீழே பார்த்தாள் "எல்லைப்புறத்தில் இராணுவத்துடனான நேரடிச் சமரில் பல படையினரைக் கொன்று வீர மரணமடைந்த லெப்டினன்ட் சங்கிலி" என எழுதப்பட்டிருந்தது.

அதற்குக் கீழே "நூறு கவிதைகள் எழுதி ஒரு கவிஞன் என்று பெயர் பெறுவதை விட களத்தில் ஒரு போராளி என்று பெயர் பெறுவதையே நான் விரும்புகிறேன்" என்றிருந்தது.

அவளுக்குத் தெரியும் இது கனகு அடிக்கடி சொல்லும் வாசகம். கிழக்கே வானம் சிவந்து கொண்டு வந்தது. விடியலுக்கு முந்தின வெள்ளாப்பு அது.

---

இனவாத நெருப்பினால் எரிந்துபோன அப்பாவிப் பொது மக்களுக்கும், சொந்த பந்தங்களைத் துறந்து சோகங்களைச் சுகமாக்கி விடுதலை நெருப்பில் வெந்துபோன அனைத்துத் தமிழ்ப் போராளிகளுக்கும் இக்கதை சமர்ப்பணம்.

நிலா குகதாசன்
*1987*

# எங்களின் பிஞ்சுகள்....



இங்கே விதைக்கப்பட்டிருப்பது பிஞ்சுகளின் உடல்கள். நாகர்கோயிலில் இனவெறி அரசின் கோரத்திற்கு துடிதுடித்துப் பலியான விரியாத மொட்டுகள்...



நேரம் பொன்னானவை என்பார்கள்... ஆம்... இந்த நேரத்தை எவ்வாறு பயன்படுத்து கின்றோம் என்பதில் எமது தலையெழுத்து மட்டுமல்ல சமுதாயத்தின் வளர்ச்சியும் தங்கியுள்ளது.

ஆனால் இதுபற்றி நாம் எவருமே சிந்திப்பதோ, கவலைப்படுவதோ இல்லை.

எமக்குள் இருக்கும் திறமைகள் வெளியே எட்டிப்பார்க்கும் போதெல்லாம்.... அவற்றை எமக்குள்ளேயே முடக்கிவிட்டு அகதிக் கொடுப்பனவுக்காக மாத இறுதி வரை காத்திருந்து..... உலகில் எல்லாவற்றையும் அடைந்துவிட்டதாக இறும்பூதடைகிறோம்.

## எஸ். ராஜ்மோகன்

எமது கையில்தான் எதிர்கால சமுதாயத்தின் ஆரோக்கியம் தங்கியுள்ளது. ஒரு இனத்தின் வளர்ச்சி கண்மூடித்தனமான நாகரிகத்தினால் மட்டும் பெறப்படுவதில்லை. இன்று எமது அறிவு வளர்ச்சிக்கு நாம் என்ன செய்கிறோம்..... செய்யப்போகிறோம்.... எதுவுமே இல்லை.... இதனால்தான் எமது இனத்தின் எதிர்காலம் கேள்விக்குறியாக்கப்பட்டுள்ளது.

நாங்கள் இளைஞர்கள்... எமக்காக... எமது வாழ்க்கைக்காக சிந்திப்போம்....

கட்டுப்பாடுகள் என்பது... மனிதன் பக்குவப்படுதவற்கு போடப்பட்ட பாலம்... பக்குவப்பட்ட மனிதனுக்கு கட்டுப்பாடுகள் அவசியமில்லை. ஆனால் நாம் பக்குவப்படாமலே கட்டுப்பாடுகளை மீறுகிறோம்.. எமது தாயக மண்ணிற்கு எதிர்மறையான.... கட்டுப்பாடுகளற்ற சுதந்திரங்களால் தலைகீழாய் நடக்கிறோம்.

கல்வி கற்கும் வயதில் நாம் எத்தனைபேர்.... வீண் பொழுது போக்கி.... பிரச்சனைகளை நாமாகவே வாங்கிக் கொள்கிறோம். வேலைசெய்ய விருப்பம் இல்லை... படிக்க இஷ்டமும் இல்லை... அந்த மாதவருமானமொன்றே “போதும்” என்று அலைகின்றோம். எவ்வளவு காலத்திற்கு இது சாத்தியம்....

கார் வைத்திருப்பதும்.... அதற்கு *Woofer* பூட்டுவதும்... கல்வி கற்காமலே... பாடசாலைகளில் அலைவதுமா வாழ்க்கை...? இதுதான் பிறவியின் பயனா? எத்தனை வயதுவரை இப்படி இருக்கப்போகின்றோம். எங்கள் எதிர்காலம் என்ன.... எங்கள் திருமணம், வாழ்க்கை, மனைவி பிள்ளைகள்.... சந்ததிகள்..... எத்தனை பொறுப்புகள் எமது தலைமேல் சுமத்தப்பட்டுள்ளன. மறந்து விட்டோமா.....!

விஞ்ஞான உலகம்... சாதனைகள் பலபடைத்துவரும் இக்காலகட்டத்தில் நாம் என்ன செய்கிறோம்? பெண்களுக்குப் பின்னால்.... வீதிச் சண்டைக் காரர்களாக மோதிக்

கொள்கிறோம். இப்படியே போனால்... நீராவியில் குழல்புட்டைவிடஇன்னும் சுவையாக ஒரு புட்டைத்தான் எம்மால் கண்டுபிடிக்க முடியும். “தமிழன் என்று சொல்லடா தலைநிமிர்ந்து நில்லடா”.... எப்படி நாம் தலைநிமிர்வது.

தாயக மண்ணில் உயிர்கள் காய்ந்து கொண்டிருந்தாலும் கல்வி பிரவாகித்துக் கொண்டிருக்கிறது. எத்தனை தடைகள் வந்த போதும் கல்வி அமுக்கப்பட்டதா.... இல்லை.... ஆனால் இங்கு....?

கார் வாங்குவதற்கு கடன் வாங்க முன்னுக்கு நிற்கிறோம்..... கல்வியை... கடன்பட்டு.... கற்று முன்னேற பின்னுக்கு நிற்கிறோம். அரசு எத்தனை வசதிகள் செய்கிறது.... எதையாவது பயன்படுத்துகின்றோமா....? மாறாக..... பாடசாலைகளில் இருந்து துரத்தப்படுகிறோம்

காலையில் எழுவதும்... கோப்பிக்கடைகளில் சந்திப்பதும்... அரட்டை அடிப்பதும்.... தெருச்சண்டை பிடிப்பதும்.... தமிழ் சினிமாவில் ஒன்றிப்போய் விடுவதும்.... எமக்கு வழக்கமாகிவிட்டது.

சரி..... கடந்தவைகள் எல்லாம் கனவுகளாகட்டும். இனியாவது எமது வாழ்க்கை முறையை மாற்றுவோம். எவருக்காகவும் அன்றி..... எமக்காக..... எமது அறிவை வளர்க்க முயல்வோம்.

வாழ்க்கையைத் திட்டமிடுவோம். இந்த கோடை காலத்தில் வேலை..... அடுத்த பருவத்தில் கல்வி அல்லது பகுதிநேர வேலை/ கல்வி....... என்று தரப்படுத்துவோம். முக்கியமாக நண்பர்களை தெரிவு செய்து பழகுவோம். செலவினங்களை தவிர்த்து முற்போக்காக நடக்க முனைவோம்.

ஓர் மாணவன்..... ஒரு பெண்ணுக்காக கார் வாங்கி.... “எடுவைகளைக் காட்டி” அலைந்தானாம். அவளோ.... திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. என்ன செய்தான். பலசோதனைகள் மத்தியில் நான்கு வருடங்கள் முழுமூச்சாக கல்வி பயின்றான். முடிவு அந்தப் பெண் மட்டுமல்ல.... பலர் அவனை இன்று திரும்பிப் பார்க்கிறார்கள்.

இதுதான் வாழ்க்கை. நாம் ஒன்றைப் பெற வேண்டுமானால்... நிச்சயம் ஒன்றை இழந்தே ஆகவேண்டும்.

எனவே நடந்தவைகள் நடந்து விட்டன. புறப்படுவோம் புதுயுகம் தேடி. கலைந்து போகக்கூடிய கருமேகங்களை நிரந்தர இருளாக எண்ணாமல் புதிய பாதை அமைப்போம். புதிய நண்பர்களுடன்.... வாழ்க்கை முறையையே மாற்றுவோம்..... வெற்றி நிச்சயம்.



## தென்னை

குடிக்க
இளநீர்
தந்த மரத்தையே
தறித்து விட்டான்
இந்த நன்றி
கெட்ட மனிதன்
ஆனாலும்
இறந்த பின்னும்
மழையில் இருந்து
பாதுகாக்கிறது
அவனது
வீட்டுக் கூரையாக....

~ எஸ். லிங்கேஸ்

# பற்களின் பாதுகாப்பு

டாக்டர் ஆதி கணபதி சோமசுந்தரம்

எமது மக்களிடையே காணப்படும் பல்வருத்தங்கள் சில
1) சிறு பிள்ளைகளின் பாற்பற்களில் சூத்தை
2) 98% தமிழ் மக்களில் காணப்படும் முரசு வருத்தம்
3) Malocclusion. அதாவது பற்கள் ஒழுங்கில்லாது காணப்படுதல்
4) பற்களில் சூத்தை அரித்தல்
5) பல்பிடுங்கிய இடத்தில் கட்டுகள் ஏற்படுதல்

மேற்குறிப்பிட்ட வருத்தங்கள் ஏதும் இல்லாது இருந்தால் பல்வைத்திய நிலையங்கள் குறைவடையலாம் எவ்வாறு பல்வருத்தங்களிலிருந்து தப்பலாம்? இதற்கு நாம் என்ன செய்யலாம்? போன்ற கேள்விகள் பலரிடையே ஏற்படலாம். நீங்கள் செய்ய வேண்டியதும் செய்யக் கூடியதும் இவைதாம்
1) காலையும் மாலையும் பற்களை துலக்குங்கள்
2) பற்களிடையே உள்ள பகுதியை துப்பரவு செய்வதற்கு பல்நூலை (Dental Floss) உபயோகியுங்கள்.
3) 6 மாதத்திற்கு ஒரு தடவை பல்வைத்தியரிடம் செல்வதால் பின்வரும் நன்மைகள் ஏற்படும்

(1) பல்லில் உள்ள அழுக்குகள் சிறிதாக உள்ளபோதே



அகற்றுவதால் முரசு வருத்தம் தொடங்குமுன்னரோ அல்லது சிறிதாக உள்ளபோதோ வைத்தியம் செய்வதால் கூடியலாபம் அடையலாம்.

(2) சூத்தை சிறிதாக இருக்கும் போதே கண்டு பிடிப்பதால் அதனை அடைப்பது இலகு. இல்லாவிட்டால் சூத்தை பெரிதாகி பன்முதலை அடைந்து வலி ஏற்படும். இதனால் பல்வேரை அடைத்த பின்னர்தான் வெளியில் அடைக்க முடியும். இதன் செலவு 5 தொடக்கம் 10 மடங்கு அதிகம். எனவே பல்லில் சூத்தை சிறிதாக உள்ள போதே அடைப்பதால் செலவு குறைவாக இருக்கும்.

(3) சிலர் நன்றாக பல்துலக்குகின்றனர் என நினைத்து கடுமையான (Hard) பல்தூரிகையால் பல் துலக்குகின்றார்கள். இதனால்



வாய்க்கும் தீங்கு விளைவிக்கும் பழக்கங்களைச் செய்வார்கள். (உதாரணமாக நாக்கு கடித்தல், பல்நரும்புதல், விழுங்கும்போது நாக்கால் முன்வாய்ப்பற்களை வெளியில் தள்ளுதல்). இதனை இனம் கண்டு நாம் திருத்துவதற்கு உதவலாம்.

இனி ஏன் 6 மாதத்திற்கு ஒரு தடவை பல்வைத்தியரிடம் செல்வது வருடத்திற்கு ஒரு தடவையாகவோ அல்லது அதற்கு கூடுதலாகவோ இருக்கக் கூடாது எனப் பார்ப்போம். பல வருட பல் ஆராய்ச்சி, அனுபவங்களின் பின்னர் பல் வைத்தியர்கள் ஒரு நோயில்லாத பல் துலக்காத வாயிலிருந்து வருத்தம் உருவாகுவதற்கு கிட்டத்தட்ட 3 மாதங்கள் பிடிக்கலாம். ஆனால் நோயில்லாத பல்துலக்கும் ஒருவருக்கு முரசு வருத்தம் வர கிட்டத்தட்ட 6 மாதங்கள் பிடிக்கும், என தீர்மானித் துள்ளனர். எனவே 6 மாதத்திற்கு ஒரு தடவை பல்வைத்தியரை சந்திப்பது பயன்தரும்.





முரசு மட்டுமல்ல பல்லும் தேய்வடைந்து கூச்சம் உருவாகும். இப்படி செய்பவர்களை இனம் கண்டு அவர்கள் பல் துலக்கும் முறையில் உள்ள பிழைகளைத் திருத்தலாம்.

(4) சில சின்னப் பிள்ளைகளும் அல்லது பெரியவர்களும் தேவையில்லாத, பல்லிற்கும்

*Hi Grandpa !..* எங்களுக்கு கதை சொல்லுங்கோ என்று கேட்டபடி வந்தன பேரக்குழந்தைகள். ஊரிலை எல்லாம் அம்மம்மா, அப்பம்மாமார், தங்கட பேரப்பிள்ளையளுக்கு சோறு தீத்தேக்க கதை சொல்லுவினமாம் அதே போல சொல்லுங்கோ என கேட்டன பேரக்குழந்தைகள். யூலாய் மாத சமர் வெக்கை தாங்காமல் வெளியே கதிரையை போட்டுச் சாய்ந் திருந்த அருணாசல வாத்தியார் ஏதோ நினைவில் இருந்து அகன்று "பிள்ளையள் என்ன கதை சொல்ல? நிலாக்கதை சொன்னா நீங்கள் நம்பமாட்டியள். ஆச்சி வடை சுட்ட கதை சொன்னா இஞ்சை நம்பமாட்டியள். ஆ....... நல்ல புறாக்கதை ஒண்டு சொல்லுகிறன் கேளுங்கோ என்றபடி கதை சொல்லத் தொடங்கினார் அருணாசலவாத்தியார்.

என்ன யோசிக்கிறியள்? விக்கிரமாதித்தன் கதை எண்டோ? இல்லை...... இது கனேடிய கதை-தான். வெள்ளைப்புறா ஒன்று ஒரு மரத்தில் கூடுகட்டி வாழ்ந்தது. ஒரு நாள் பாருங்கோ ஒரு ஆண்புறா பெரும் புயல் காற்று, மழைக்கு அந்த வீட்டுப் பக்கம் ஒதுங்கிச்சிது. தனியா இருந்த பெண்புறாவும் *"Come on..., Come in"* எண்டிச்சுது. சின்னச் சின்ன சுள்ளியளைப் போட்டு நெருப்பு மூட்டி குளிர் காஞ்சினம். பிறகு ஒரு வைன் போத்தலை உடைச்சு நல்ல *Loin cout steake* சலாட்டுகளோடை சாப்பிட்டினை. சாப்பிடும் போதே கதைகள் பல, அதன் நடுவே ஆண்புறா சொல்லிச்சு "நான் முதல் ஒரு பெண்ணோடை உறவா இருந்து பிரிந்து விட்டேன்" எண்டு, அதற்கு பெண்புறா சொல்லிச்சு "நான் கலியாணத்தைப் பற்றி யோசிக்கிறன், அப்ப இரண்டு பேரும் கொஞ்சக்காலம் சேர்ந்து வாழுவம், வாழ்க்கை எப்படி போகுது எண்டு அனுபவிச்சுப் பார்ப்பம், நல்லா இருந்தா மணம் முடிப்பம், பிறகு பிள்ளைகள் பற்றி யோசிப்பம்...." இது தான் *Deal* எண்டது. *"O.K take it"* எண்டிச்சு ஆண்புறா.




நாட்கள் வருடங்களாகி சென்றன. பெண்புறாவுக்கு ஆண்புறாவைப் பிடித்துக்கொண்டது. ஆண்புறாவுக்கும் பெண்புறாவைப் பிடித்துக்கொண்டது. ஒரு நாள் மோதிரத்தை வாயில் கௌவியபடி வந்த ஆண் புறா *"Hi, sweety come...* நாங்கள் இண்டைக்கு கலியாணம் முடிப்பம்" எண்டது. *O.K* கலியாணம் முடிஞ்சுது. காலம் கடந்துசென்றது. பெண்புறா முட்டையிடத் தொடங்கியது. அடை-காத்து குஞ்சுகள் மூன்றைப் பொரித்தது.

அவர்களின் குடும்பமும் பெருகின. செலவுகளும் அதிகரித்தன. பெண்புறாவும் வேலை தேடிச் சென்றது. கஷ்டப்பட்டு ஒரு

வேலையைத் தனக்காகத் தேடிக்கொண்டது.

பொழுது விடிந்ததும் ஆண்புறா ஒரு திக்காகவும், பெண்புறா ஒரு திக்காகவும் பறந்தன. பெண்புறா குஞ்சுகளுக்கு இரை தேடிக் கொடுத்தது. குஞ்சுகளும் வளர்ந்து செட்டை முளைத்தன. அவைகளும் பறக்க வெளிக்கிட்டன. குஞ்சுகளுடன் பாசங்காட்ட தந்தைக்கோ, தாய்க்கோ நேரமில்லை. அந்த அளவுக்கு பணம்..., பணம்.., வேலை.., வேலை... என்று அலைந்து திரிந்தன. பாசம் என்றால் என்ன என்று தெரியாமல் வளர்ந்தன அந்த சின்னஞ் சிறுசுகள்.

ஒரு நாள் தந்தைப் புறாவை தனயன் புறா கேட்டது தனக்கு இரை தேடித்தரும்படி, அதற்கு தந்தைப் புறா "உனக்குத்தானே இறகுகள் முளைத்து விட்டன. நீயாகவே உன் இரையை தேடிக்கொள்" என்று அறிவுரை கூறியது. அதன் பிரகாரம் அது தனக்காக இரை தேடப் புறப்பட்டது.

ஒருநாள் இரவு எல்லாரும் ஒன்றாக இருந்து உணவு அருந்திக் கொண்டு இருந்தார்கள். அப்போது தந் தைப் புறா கூறியது. தனக்கு இந்த வாழ்வு கசந்து விட்டது. தான் சிலகாலம் சுதந்திரமாக பறக்கவேண்டும் போல் இருக்கிறது என்று. அதற்கு தாய்ப் புறா தனக்கும் அப்படிச் சிலகாலம் வாழவேண்டும், ஏனெனில் என்னோடு வேலை செய்யும் ஒருவர் என்னோடு வாழவேண்டும் ஒரு *Change*க்கு என கூறினார் என கூறியது. தந்தையும், தாயும் பிரிந்தார் கள். அப்போ எங்கள் கெதி என்ன என்று குஞ்சுகள் கேட்டன. சிலகாலம் அம்மாவுடனும் சிலகாலம் அப்பாவுடனும் இருக்கலாம் எனத் தீர்மானித்தன.

காலங்கள் பறந்தன. தந்தைப்புறாவுக்கு உடல் நலம் குன்றியது. தாய்ப்புறாவும் நோய்வாய்ப்பட்டது. பாசத்துக்காக ஏங்கின. ஆனால் அவை குஞ்சுகளுக்கு கொடுக்கத் தவறிய அந்த ஒன்றை இப்பொழுது குஞ்சுகளிடம் கேட்கத் தொடங்கின. ஆனால் குஞ்சுகளுக்கு அப்படி ஒன்று இருக்கிறதா என தெரியவில்லை.

அரசாங்க உதவிபெறும் அந்தத் தாதிச்சேவை வைத்திய விடுதி அவர்களுக்கு தஞ்சமாகியது. வருடத் தில் ஒரு முறை வரும் பெருநாளில் அவர்களை சந்திக்க அந்த இளம் புறாக்கள் வந்தன.

வருடங்கள் சில சென்றன. அந்தோ! காலன் தாய்ப் புறாவை கவர்ந்து சென்றான். வைத்திய விடுதியில் இருந்து பல, பல தொலைபேசிகள் பறந்தன. ஆனால் அது பொரித்த குஞ்சுகள் எந்த ஊரிலோ, எந்த நாட்டிலோ என்பது தெரியவில்லை. அவை எந்த வானத்தில் பறந்து கொண்டு இருந்தனவோ ஒருவருக்கும் தெரியவில்லை. அனாதையாக தாய்ப் புறா சென்றது. அதன் வாழ்வு முடிந்துவிட்டது.

கதையை முடித்த அருணாசல வாத்தியாரின் கண்களில் கண்ணீர் வடிந்தது. ஏன் *Grandpa* அழுகிறீங்க என கேட்டது ஒரு பேரக்குழந்தை. ஒண்டுமில்லை கண்ணு, இந்த புறாக்கதை போலத்தான் எதிர்காலத்தில் எங்கடை சமுதாயம் வரப்போகுது எண்டு நினைத்துப் பார்த்தன். அது கண்ணீரா வருகுது என்றபடி எழுந்தார் அருணாசல வாத்தியார்.

(மறு பிரசுரம்)

## கனடாவில் மேலோங்கும் தமிழர் நிறுவனம்

# போட்டலோ



## ஐந்தாவது ஆண்டில்....

பல்லின மக்கள் வாழும் நாடு கனடா. சனத்தொகைக்கேற்ப வர்த்தகமும் உயர்நிலையில் தான் இருக்கிறது. பல முன்னணி வகிக்கும் கனடிய தனியார் நிறுவனங்களின் மத்தியில் ஒரு குறிப்பிட்ட துறையில் ஒரு தனியார் நிறுவனத்தை ஆரம்பித்து சீரான வளர்ச்சியை ஏற்படுத்துவது என்பது மிகவும் கஷ்டமான விடயம்.

இந்த வகையில் கனடாவில் ஒரு நிறுவனத்தை ஆரம்பித்து அதே துறையிலான இதர நிறுவனங்களுடன் போட்டி போடும் அளவிற்கு வர்த்தக துறையில் ஒரு தனி இடத்தைப் பிடித்து இன்று வெற்றிநடை போடும் "ஒன்றுபட்ட தமிழ்க் குடும்பம்" ஒன்றின் நிறுவனம்தான்.

*Bay Hill Implex Ltd.*

இந்த நிறுவனமே *Portello*வைத் தயாரித்து கனடா முழுவதும் விநியோகித்து வருகிறது.

1991ஆம் ஆண்டு நவம்பர் மாதம் முதலாம் திகதி இந் நிறுவனம் ஆரம்பிக்கப்பட்டு அதே மாதம் 5ஆம் திகதி ஒன்ராறியோ வர்த்தக கூட்டுத்தாபன சட்டத்தின்கீழ் பதிவாகியது.



'போட்டலோ' நிறுவன அதிபர் ராஜ் அவர்கள்

125 வருடகாலமாக பொதுநலவாய நாடுகளிடையே பெரும் வரவேற்பைப் பெற்ற பிரித்தானிய குளிர்பானம்தான் *Portello*. இந்த குளிர்பானத்தையே *Bay Hill Implex Ltd* தயாரித்து விநியோகித்து வருகிறது.

ஆரம்பத்தில் ஒரு வர்க்க குளிர்பானத்தையே தயாரித்து வழங்கிய போதிலும், நாளடைவில் நுகர்வோரின் தேவைகளின் பொருட்டு ஆறு விதமான சுவையில் போட்டல்லோ (*Portello*) தயாரிக்கப்பட்டது.

1) *Mixed Berry*

*2) Orange*
*3) Ice Cream Soda*
*4) Ginger beer*
*5) Honey Lemon*
*6) Passion Fruit and Pineapple*
என்பன இவர்களின் பிற தயாரிப்புகளாகும்

*Bay Hill Implex Ltd* இன் அண்மைத் தயாரிப்பு காற்றடைக்கப்படாத தூயநீர் நிரப்பப்பட்ட *Plastic* போத்தல்கள். அத்துடன் *Dance Station* என அழைக்கப்படும் *Fm 107.9* அலைவரிசையில் விளம்பரம் மற்றும் பாடல் நிகழ்சிகளும் இந்நிறுவனத்தினால் நடத்தப்பட்டு வருகிறது.

ஐரோப்பிய நாடுகளில் பிரபல்யம் வாய்ந்த *Mackerel Fish* போன்ற ஒரு புரதச்சத்து அதிகம் வாய்ந்த உணவு கனடா மற்றும் தென்அமெரிக்க நாடுகளில் இதுவரை தயாரிக்கப்படவில்லை. இதை நிவர்த்தி செய்ய இந் நிறுவனம் புதியமுயற்சியை கையாண்டது. அதுதான் தாவரப் புரதச்சத்து நிறைந்த *So Soya* உலர் உணவு. இது 100% *Soya* அவரையிலிருந்து தயாரிக்கப்படும் உணவாகும். இது தற்பொழுது பக்கட்டுகளில் விற்பனையாகிறது. 1994/95 காலப்பகுதியில் 4,95,772 மெட்ரிக் தொன் *So Soya* வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியானது குறிப்பிடத்தக்கது.

*Bay Hill Implex Ltd* யும் அதன் வளர்ச்சியும்

1990ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் *'Stassen Liquid Gold Tea'* என்று பெயரிட்டு உயர் தர தேயிலை பக்கட்டுகளைத் தயாரித்து விநியோகித்து தமது வர்த்தக பயணத்தை கனடாவில் இந் நிறுவனம் ஆரம்பித்தது. *EATONS* உட்பட ஒன்ராறியோவின் பல முன்னணி வியாபார நிறுவனங்களில் இத் தேயிலை பக்கட்டுகள் விற்பனை செய்யப்பட்ட போதிலும் நன்கு திட்டமிடப்படாத, உறுதியில்லாத அத்திவார முதலீடு காரணமாக இம் முயற்சி எதிர்பார்த்தளவு நீண்டகாலம் நீடிக்கவில்லை.

இந்த அனுபவத்தை கொண்டு மீண்டும் அதே குடும்ப அங்கத்தவர்கள் இணைந்து 1991ஆம் ஆண்டு நவம்பர் மாதம் பிரித்தானிய குளிர்பானமான *Portello*வின் மூலப் பொருளைக்கொண்டு *Bay.H.I.Ltd* என்னும் தனியார் நிறுவனத்தை ஆரம்பித்தனர்.

*Portello*வின் மூலக்கலவை மட்டுமே இறக்குமதி செய்யப்படுவதால் குளிர்பானம் தயாரித்தல் போத்தலில் அடைத்தல் விநியோகித்தல் போன்ற வேலைகளைத் தாங்களே செய்ய வேண்டியிருந்தது. ஆரம்பத்தில் போத்தல்களில் அடைக்கும் அளவு குறைவாக இருந்ததால் கனடாவில் போத்தலில் அடைக்கும் எந்த நிறுவனமும் இவர்களுக்கு கைகொடுக்கவில்லை.

பல சிரமங்கள் மத்தியில் அயல் நாடொன்றிலிருந்து போத்தல்கள் வரவழைக்கப்பட்டதுடன் அவற்றை அடைக்கும் இயந்திரமும் கொள்வனவு செய்யப்பட்டு போத்தல்களில் நிரப்பும் வேலைகள் ஆரம்பிக்கப்பட்டன.

1994ஆம் ஆண்டு மே மாத நடுப்பகுதியில் *Portello*வின் நுகர்வு வீதம் அதிகரிக்க ஆரம்பித்தது. இக்காலகட்டத்தில் இந்த குளிர்பானத்தை வேறு சிலர் வேறு நாடுகளிலிருந்து குறைந்த செலவில் போத்தல்களாக இறக்குமதி செய்து விநியோகிக்க ஆரம்பித்தனர்.



இதை அறிந்து ஆரம்பத்தில் இந் நிறுவனத்தினர் அதிர்ச்சியடைந்தாலும் நிதானமான சிந்தனையின் பின்னர் தமது உற்பத்தியை சற்று மந்தப்படுத்தினர். இதனால் போத்தல்களில் அடைக்கப்பட்டபடியே இறக்குமதியாகும் *Portello*வின் அளவு அதிகரித்தது.

இறக்குமதியாகும் *Portello*வின் விற்பனை அதிகரிக்கவே *B.H.I.Ltd* நிறுவனத்தினர் உண்மையான *Portello*வின் தரத்தையும் இறக்குமதியாகும் *Portello*வின் தரத்தையும் நுகர்வோருக்கு தெரியப்படுத்தினர். சில நாட்களிலேயே நுகர்வோரினால் இறக்குமதி செய்யப்பட்ட *Portello* நிராகரிக்கப்பட்டு முற்றாக ஒழிக்கப்பட்டது. இதன் பின்னர் *Bay Hill Implex Ltd* நிறுவனத்தினர் குறிப்பிடத்தக்க வளர்ச்சி கண்டனர்.

தற்பொழுது *Price Chopper, Highland Farms, Portions Oshawa Foods, National Grocers, Weston Produce and Kealson* போன்ற முன்னணி நிறுவனங்கள் உட்பட பல பல்லின மக்களின் விற்பனை நிலையங்களிலும் விற்பனையாகிறது.

*Portello*வின் விற்பனையை அதிகரிக்கச் செய்ய வருடம் தோறும் 10 கண்காட்சிகளை இந் நிறுவனம் நடத்தி வருகிறது. இக் கண்காட்சிகள் சர்வதேச ரீதியில் பல்லின மக்களால் பிரதிநிதித்துவப்படுத்துவதாகும்.

*Bay Hill Implex Ltd* நிறுவனம் தனது உயர்ந்த தரத்தினால் அண்மையில் *Ontario Chamber of Commerce* விருதினைப் பெற்றுக் கொண்டது. அத்துடன் *U.S.A, Guyana, Trinidad, Dominica* மற்றும் சில ஐரோப்பிய நாடுகளுக்கும் *Portello* ஐ இந்நிறுவனம் ஏற்றுமதி செய்து வருகிறது. விரைவில் தகரத்தில் அடைக்கப்படும் 'POP' களும் விற்பனைக்கு வரவுள்ளது. இவற்றை *Pob Machine*களிலும் பெற்றுக்கொள்ள முடியும். 1997ஆம் ஆண்டு ரொறன்ரோ பெரும்பாகத்தில் சகல விற்பனை நிலையங்களிலும் இது நிலையான இடத்தை பெற்றுக் கொள்ளும் என எதிர்பார்க்கப்படுகிறது.

# தமிழினமே! அடிமை வாழ்க்கையா.....

வட்டக்கச்சி துரை

என் இனமே.... தமிழினமே அடிமை வாழ்க்கையா
எம்மினத்தின் விடுதலையை மறந்து வாழ்வதா....

எங்கள் மொழி பேசிப் பேசி அகதியாவதா - வாழும்
அகதி நாட்டில் தமிழ் மொழியை மறந்து போவதா.....
கூடிழந்த பறவைபோல தமிழர் வாழ்க்கையா
கூட்டம் கூடி பேசி பேசி அழிந்து போவதா.....

எங்களினம் வாழ்வதற்கு ஒருநாடுமில்லையா - வாழும்போது
எங்களினம் அழிந்து போவதா.....
எம்மினத்தையழித்து விட்டால் புரட்சி ஓயுமா - இல்லை
புரட்சியைத்தான் அழித்துவிட்டால் உரிமை கிடைக்குமா....

அகிம்சையென்ற ஆயுதத்தை தந்தை எடுத்தார் - அந்த
அகிம்சையிலே தமிழினத்தின் அழிவையும் கண்டார்
தந்தை சென்ற பாதையிலே உரிமையுமில்லை
அந்த கொடியவரின் இனவழிப்பு ஓயவுமில்லை....

தத்துவங்கள் பேசி பேசி தமிழினத்தை யழிப்பதா - அவர்
தத்துவத்தை நம்பி நம்பி நம்மினமோ காட்டி கொடுப்பதா
அந்நியரின் இனவழிப்பு அணையாத தீயாமன்றோ - அதை
அணைத்துவிட தமிழினங்கள் ஒன்று சேர்வதெப்போ.....

என் இனமே தமிழினமே சோகம் கொள்ளாதே....
எம்மினத்தின் விடுதலையை மறந்து போகாதே....
எம்மினமே தமிழினமே ஒன்று சேருங்கள் - உலகில்
தமிழினத்தின் விடுதலையை உரத்து கேளுங்கள்

நம்பிக்கை நற்சித்திரம்

# சிறுவர் பூங்கா



எனது பெயர் துஷிக்கா நடராசா. எனக்கு வயது பதினொன்று. நான் றோஸ் அவனியு பாடசாலையில் 6வது வகுப்பில் கல்விகற்கிறேன். எனது விருப்பமான பொழுது போக்கு வாசித்தல். தமிழில் தரமான பல சிறுவர் புத்தகங்களை நான் விரும்பி வாசிப்பேன். தமிழ் கற்கும் ஆவல் எனக்கு நிறையவே உண்டு. சனிக்கிழமை தோறும் எமது பாடசாலையில் சமூக மன்ற தமிழ் வகுப்புகளில் தமிழ் கற்று வருகிறேன். பாடசாலை தவிர்ந்த நேரங்களில் நடன வகுப்பிற்கும் செல்கிறேன். தமிழ் மொழியாம் எம் இனிய மொழியின் வளர்ச்சிக்காகவும் அதன் உயர்வுக்கும் உழைக்கும் அனைத்து அன்புக்கரங்களும் அரவணைக்கத்தகுந்தவை என்பது எனது கருத்தாகும்.

நான்காவது ஆண்டில் காலடி பதிக்கவுள்ள இந்த ரோஜாவை எனக்கு நிரம்பப் பிடிக்கும். அதிலும் இதன் சிறுவர் பூங்காவில் மணம் வீசி மலரும் பல ரோஜாக்கள் என்றுமே என்னைக் கவர்பவை. நல்ல தமிழில் நயமான கருத்துக்களுடன் நல்லதோர் ஏடாக மிளிர்கிறது 'ரோஜா' என்றால் அதில் சந்தேகமில்லை. எதிர் காலத்தில் நல்ல தமிழ் வளர்க்க ரோஜா உழைக்கும் என்று திடமாக நம்பலாம். இந்த ரோஜாவின் சிறுவர் பூங்காவில் நம்பிக்கை நட்சத்திரமாக மலரும் பாக்கியத்தை எனக்கு அளித்த திரு. ஆனந்த் அண்ணாவிற்கு எனது நல்லாசிகள்

அன்புடன்
**துஷா.**

# கனவுகள் நிலைக்குமா?

காலை நேரம் சேவல் கூவும் சத்தம் கேட்டு விழித்தெழுந்தான் குமரன். அவன் தனது பாயை உருட்டி ஒரு மூலையில் வைத்து விட்டுப் பற்பொடியையும், துவாயையும் எடுத்துக் கொண்டு, “அம்மா நான் குளக்கரைக்குக் குளிக்கப் போறன்” என்று கூறியபடியே ஓடினான். அங்கு குளக்கரையில் குமரனை எதிர்பார்த்துக் கொண்டும், குளிப்பதற்குத் தயாராகவும் நின்றார்கள் அவனுடைய நண்பர்கள்.

குமரன் குளித்துவிட்டு வீடு திரும்பினான். வீடு திரும்பிய குமரன் காலைச்சாப்பாட்டைச் சாப்பிட்டு விட்டு, பாடசாலை போவதற்குத் தயாரானான். பாடசாலையை நோக்கிப் புறப்பட்ட குமரனும் அவனுடைய நண்பர்களும் வழியில் இருந்த வீட்டுக் கதவு பூட்டப்பட்டிருப்பதைக் கண்டார்கள். உடனே கல் எடுத்து அவ்வீட்டு முற்றத்திலே நின்ற மாமரத்தில் உள்ள மாங்காய்களுக்கு எறியத் தொடங்கினார்கள். ஒன்றுமே விழாத படியால் சலித்து விட்டுச் சென்றுவிட்டார்கள்.

பாடசாலையைச் சென்றடைந்த குமரனும், அவன் நண்பர்களும் பாட-சாலைக்குச் சற்றுத் தாமதமாகச் சென்றுவிட்டதால் ஆளுக்கு இரண்டு அடிகள் வாங்கிவிட்டே பாடங்களைத் தொடங்கினார்கள். பகல் ஒரு மணிக்கு பாடசாலை முடிவு மணி அடித்ததும் குமரன் வீடு திரும்பிப் புத்தகங்களை வைத்து விட்டுத் தனது நண்பர்களை விளையாட்டு மைதானத்தில் சந்தித்-தான். அவர்களோடு கிளித்தட்டும், எல்லேயும் விளையாடிவிட்டு வீடு திரும்பினான். கை, கால் முகம் கழுவி விட்டு குமரன் தனது தாய் தந்தையருடன் தனது பெரியப்பாவைப் பார்க்க போவதற்கு வெளிக்கிட்டுக் கொண்டிருந்தான்.

மாலை ஆறு மணி இருக்கும். சூரியன் மறைந்து இருளத் தொடங்கியது. குமரனிற்கு வானத்தில் விமானம் இரையும்சத்தம் கேட்டது. குமரனும் அவன் பெற்றோர்களும் தங்களது பங்கர் குழிக்குள்போய் ஒளிந்து கொண்டார்கள். வெடிச்சத்தங்கள் சில கேட்டபின் விமான இரைச்சல் நின்றுவிட்டதும் குமரனும் அவன் பெற்றோர்களும் வெளியே வந்தார்கள். அப்போது விமானம் வீசிய குண்டுகளில் குமரனின் பெரியப்பாவும் சிக்கிக் கொண்டதாகச் செய்தி வந்தது.

குமரன் “பெரியப்பா” என்று கதறியபடியே விழித்தெழுந்தான். அவனுடைய பெரியப்பாவும், பெரியம்மாவும் ஓடி வந்தார்கள். அப்போதுதான் அவனிற்கு தான் கண்டது கனவு என்று புரிந்தது. அவன் தனது பெற்றோரை எண்ணிச் சிறிது மனம் கலங்கினான். அப்போது தொலைபேசி மணி அடித்தது, அதில் அவனுடைய தந்தையார் தாங்கள் கொழும்பிற்கு வந்திருப்பதாகவும், அவனைத் திரும்ப தங்களை தொலைபேசியில் அழைக்குமாறும் கூறி விட்டு வைத்து விட்டார்கள்.

பின்பு குமரன் அவர்களுடன் மிக ஆசையோடும், ஆவலோடும் கதைத்தான். அப்போது அவனுடைய பெரியம்மா அவர்களுக்கு “உங்களுக்கு விமானம் குண்டு போடுமோ என அஞ்சித் தூக்கம் வராது, கனடாவில் இருக்கும் எங்களுக்கு உங்கள் நிலைமையைப் பற்றி நினைப்பதாலே தூக்கம் வராது” என்று சிரித்துக் கொண்டே கூறினார்.

தொலைபேசியை வைத்ததும் குமரன் தனது பெற்றோர்களை எத்தனை காலம் கனவினிலே காண்பது என எண்ணிக் கலங்கினான்.

~ பா. ஹரிகரன

# INTERNET

Internet இல் உள்ள சில தேவையான தொடர்புகள் இங்கே தரப்படுகின்றன. Internet இல் தமிழ் மற்றும் செய்தித்தொடர்புகளை இலகுவாக அடைய கீழ்க்காணும் தொடர்புகள் உங்களுக்கு உதவும்.

தமிழீழச் செய்திகள் (தமிழில்). இச்செய்தித்தொகுப்பு விடுதலைப்புலிகளின் லண்டன் சர்வதேச செயலகத்தால் வெளியிடப்படுகிறது.
http://uts.cc.utexas.edu/~janahan/eelam/news

"எரிமலை" சஞ்சிகை
http://www.interlink.no/~cyrinus/erimalai/erimalai.html

Jaffna HomePage
http://alfred.uib.no/People/stud1222/Jaffna.html

யாழ் பிரசைகள் குழு
http://www.lookup.com/Homepages/95725/home.html

CABC (கனேடிய ஆசிய ஒலிபரப்புக் கூட்டுத்தாபனம்). இத் தொடர்பில் நீங்கள் செய்திகளை ஒலி வடிவில் பெறுவதோடு, உலகம் பத்திரிகையையும் காணலாம்.
http://www.cabc.com

Daily news/Observer (பத்திரிகைகள்). இலங்கையிலிருந்து வெளிவரும் தினசரி.
http://www.lanka.net/lakehouse

Reuters news wire. சர்வதேச செய்தி நிறுவனம். இங்கு முக்கிய உலகச்செய்திகளைப் பெற்றுக் கொள்ளலாம்.
http://www.yahoo.com/headlines/international/

Sunday Times (இலங்கை வாரஏடு)
http://www.lancnet.org/suntimes/this/index.html

Tamil's Web by Ossai. ஓசை நிறுவனத்தால் நடாத்தப்படும் இன்ரர் நெற் பக்கம்.
http://www.tamil.org

# "உலகத்தமிழர்கள் எல்லாம் ஒற்றுமையாய் வாழவேண்டும்"

வீடுகளில் தமிழ்தானே பேசிடவேண்டும்
நாடுகளில் நற்றமிழை உயர்த்திடவேண்டும்
ஏடுகளில் தமிழ்புகழ் இருந்திடல்வேண்டும்

உடல்முழுவதும் தமிழ்க் குருதி ஓடிடவேண்டும்
கடல்போலத் தமிழ்புகழ் பரவிடவேண்டும்
உலகளாவிய தமிழ்ப் பண்பு ஓங்கிடவேண்டும்
பந்நாட்டுத் தமிழர்க்கோர் மையம்வேண்டும் - அதை
புகழுகின்ற திறமைவேண்டும்
தம்நாட்டுத் தமிழ்மக்கள் என்ற பெயர்வேண்டும்
பொன்னாட்டுத் தமிழரெனப் புகழ்ந்திடவேண்டும்

உலகமெல்லாம் தமிழ்வெள்ளம் ஓடிடவேண்டும்
உலகளாவிய தமிழ்ப்பண்பு ஓங்கிடவேண்டும்
உயிரான நற்றமிழை உயர்த்திடவேண்டும்
உரிமையுடன் நாமெல்லாம் வாழ்ந்திடவேண்டும்
எந்த நிலையிலும் நற்தமிழை வளர்த்திடவேண்டும்
முன்னிலை வகிப்பதில் முதன்மைவேண்டும்

வெண்ணிலாப்போல் தமிழ்ஒளி உலகில் வீசிடவேண்டும்
தன்னிலை மாறாத் தன்மைவேண்டும்
மானத்தை உயிரெனவே மதித்திடவேண்டும்
தானத்தை மறவாத் தன்மைவேண்டும்
நிதானத்தை இழக்காத நிலைவேண்டும்
சமாதானத்தை சமமாக காத்திடவேண்டும்

பாப்புனைந்து தந்திட்ட வள்ளுவன்வழி நின்றிடவேண்டும்
நாப்புனைந்து தமிழர்மதி பெருக்கிடவேண்டும்
கோப்புகளாய் தமிழர்இனம் கூடிடவேண்டும்
தோப்புகளாய் தமிழர்கள் வாழ்ந்திடல்வேண்டும்

அதியமான் ஔவைக்கு நெல்லிக்கனி தந்ததுபோல
அன்புக்குக் குமணன் தலைக்குவிலை பேசிய தன்மைபோல
அகிலத்தில் அறிவியல் வளர்த்திடல் வேண்டும்
அனைவர்க்கும் ஆன்மீகச் சிந்தனை இருந்திடவேண்டும்

**சிவனேஸ் சுதாகரன்**
மக் மாஸ்டர் பல்கலைக்கழம்

# துறவேல் கோர்

6

தூரத்தில் சாலையில் வாகனங்கள் சஞ்சரிக்கத் தொடங்கி இருந்தன. மணல் பரப்புக்களில் கடல்காற்று சீராக ஊர்ந்து கொண்டிருக்க, ஒரு பறவைகூட இல்லாமல் வானம் வெறிச்சென்று இருந்தது.

"வலப்பக்கம் போக வேண்டாமோ...." சாமியார்தான். பஸ்ஸில் போயிருந்தால் இந்நேரம் போய்ச் சேர்ந்திருக்கலாம். நடந்து மாளவில்லை.

வலப்பக்கம் தனியாகப் பிரிந்த பாதையில் திருப்பினார்கள் அந்தச் சின்னப்பாதையில் ஒரு நாய் கூடவே ஓடிவந்து காலை முகர்ந்தது. ரங்கநாதன் திரும்புகிறபோதுதான் கவனித்தார் சாமியாரின் நிழலே தரையில் படவில்லை.

"உம்ம நிழலைத் தொலைச்சுட்டீரே...."

அவர், முந்திக்கொண்டு முன்னால் ஓடுகிற நாயைப் பார்த்துக் கொண்டே சிரித்தார். அவரும் நின்ற இடத்திலேயே ஓடுகிற வேகத்தில் கால்களை அசைத்து, சலனமில்லாமல் நின்றார்.

"பயித்தியக்காரனய்யா நீர்...." ரங்கநாதன் கடிந்துகொண்டார். "என் மனைவியோடு பேச ஏற்பாடு செய்துதர வேண்டுமென்று கேட்டேனே. என்ன ஆச்சு....?"

"பேசி என்ன செய்யப் போகிறீர். கிழிந்த சிவப்புச் சேலைக்கு இனிமேல் மாற்றுச் சேலை தரமுடியாது...."

"எப்போதும் அடுத்த வேளைச் சாப்பாட்டைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டேயிருந்தாள் பாவம்...."

"அதையும் மாற்ற முடியாது....."
"வேறு என்னதான் முடியும்...."
"இதுதான்...." சாமியார் கையை அசைத்து இரண்டு காகிதக் கோப்பைகளை வரவழைத்தார்.

"பையில் வைத்துக் கொள்ளும். பிரயோசனப்படும். சேவல் மாதிரி...."

'ஆக்டோபஸ்"

"பாதாளக் கரண்டி மாதிரி...." சாமியார் அழுத்தமாகச் சொன்னார்.

"என்னோடு எல்லா வீட்டிற்கும் வர உத்தேசமா...."

"நான் இந்த வீட்டோடயே கழண்டுக்கறேன்...."

தேநீர் குடிக்க வேண்டும் போலிருந்தது ரங்கநாதனுக்கு. முதல் வீட்டில் கிடைத்தால் நன்றாக இருக்கும்.

இன்னும் பத்து இருபது அடிதான்.

அடுத்த இதழில் தொடரும்...



# கனியைச் சுமக்க முடியாமல் காம்பு

சிவதாஸ்
யாழ். மருத்துவபீட மாணவன்

வெறும் கோடுகளும் புள்ளிகளும்
கோலங்களல்ல.....
வெறும் ஏடுகள் மட்டும்
ஞானமாவதில்லை
புத்தகங்களைச் சுமப்பதால்
புத்திஜீவியல்ல....
உயர்சிந்தனையைத் தாங்கினால்
மட்டும்
கல்விமான்கள்

பரீட்சைப் பெறுபேறுகளில்
தம் பிள்ளைகளைத் தேடிடும்
பெற்றோர்கள்
புள்ளிகளில் மட்டும் மதிப்பிடும்
ஆசிரியர்கள்
பல்கலைக்கழக அனுமதியினால்
அந்தஸ்தினை அளந்திடும் சமூகம்
வாழ்க்கையைத் தொலைத்துவிட்ட
அவலம்.

ஓடி நடை பயில முனையும்
குழந்தை
சுமைதாங்கியாகிய அவலம்
ஆடிப் பாடிப் பயில வேண்டிய
நாட்டியம்
அவசரத்தில் அலங்கோலமாகிறது

கனியைச் சுமக்க முடியாத
காம்பு போல்
ஆளுமை சிதைக்கப்பட்டு
ஆர்ப்பாட்டமாக
சோதனையில் சித்தி
விருப்புக்கள் விதைக்கப்படாமல்
விகாரமான விந்தை.

கல்வி
கவிதைகள் போலில்லையே
படிக்காமல்....
பாடித்திரிய
வானவில் போலில்லையே
விழித்திருக்காமல்
ரசித்து விடுவதற்கு.

# என் கூடு வந்த குயில்....

ஒரு சுபவேளையில்
என் தாயார்
மாமியாரானாள்....!
என் பிரமச்சரியம்
பிரியாவிடை பெற்றது....!
ஒரு வலதுகால்
என் வீட்டு
வாசற்படி மிதித்தது....!

அவள் வந்த பிறகு....
குப்பை
கூழங்களுக்கெல்லாம்
கோபமான கோபம்.....!
அவை...
குறை சொல்லிப்
போயின...!
தொங்க விடப்பட்டிருந்த
என் சட்டைகளெல்லாம்
சலவைக்குப்
போயின....!
என்...
மனவீட்டில்கூட
மாறுதல்....!
அங்கு குடியிருந்த
பெண்கள்
கைகாட்டிக் கலைந்து
போனார்கள்...!
பூஜை அறையில்
புதிதாய் ஒரு குத்து
விளக்கு....!
என் வீட்டிலும் கூட.....!

அன்பே...!
நீ என்ன அக்கினியா....?
அழுக்குகளெல்லாம்
அஞ்சுவது எப்படி....?
ஆனால் நீ மட்டும்
எப்போதும்...
இடுப்பில் செருகிய
சேலை
இறக்கப்படாமலே
உறங்கும் வேளைவரை
உழைக்கின்றாய்...!
அடுப்புக்கரி படிந்த
ஓவியமாய்
மெள்ள மெள்ள
உருகும்
மெழுகுவர்த்தியாய்
தேய்பிறை நிலவாய்
தேய்ந்து போகிறாய்....!

என்...
இனிய இயந்திரமே...!
உன் முன்னால் நின்று...
"உழைக்கிறேன்" என்று
அலட்டிக்கொள்ள நான்
அஞ்சுகிறேன்...!
என்னைச் சுமந்து
என் பிள்ளையை
வயிற்றிலே சுமந்து
வீட்டுவேலை சுமந்து
என் வீட்டவரின்
சுடுசொல் சுமந்து
சோராமல் நடக்கும்
என் பத்தினியே....!
உனக்குப் படி
அளப்பதாயின்
என் ஆயுள் போதாது...!

என்....
தாலியைத் தாங்கும்
தங்க நிலவே...!
நான்...
எங்கிருந்தபோதும்
உன் பாதங்களைப்
பார்த்துக்கொண்டிருக்கிே
றன்...!
சமையலறை...
கூடம்...
படுக்கையறை என்று
பரவுகிற
உன் பாதங்களின்
கொலுசு ஒலியோடு
கூடத் திரிகிறது
என் மனசு...!

தென்றலே...!
நீ தீயாக...
தேளின் கொடுக்காக
தலையணை
மந்திரத்தைத்
தவறாமல் ஓதுகிற
பெண்ணாக
வத்திப் பெட்டியாக
வாய்த்திருந்தால்...
என்ன செய்வேன்...?
நான் வீடு வரும்போது
விசும்பலோடு
எதிர்கொண்டால்
வீணாகிப் போயிருக்கும்
என் வாழ்வு...!

என்னை மட்டுமல்ல:
என் குடும்பத்தையும்
காதலிக்கும்
கண்மணிக்கு
என் கோடி
வணக்கங்கள்...!

~ இதயன்



பெயர்: ரமணன் குணசீலன்
பாடசாலை: Albert Campbell C.I
வகுப்பு: ஆண்டு 12

# எழுத்தில் உள்ளவை.....

"எனது தத்துவச் சண்டைகளுக்கு நான் சொல்லிக் கொண்ட சமா-தானங்கள்.
இருபதே வயதான உணர்ச்சிக் கிழவனின் கவிதை நரைகள்
உலகச் சிறைக்குள் அடக்கப்பட்டுக் கொண்டவனின் தந்திரச் சிந்தனைகள்.
உங்களோடு பேசுவதற்காக நான் அனுப்பி வைக்கின்ற ஊமைக் காகித உணர்வுகள்.
இயற்கைக்கப்பால் உண்ட இதய நாளத்தின் இளைய மயக்கங்கள்.
எனது கவலைக் குளத்துக் கண்ணீர்க் குமிழ்கள்...."

ஆம், இலங்கையின் தலையான யாழ் குடாநாட்டிலே கட்டுவன் எனும் குக்கிராமத்தில் உயிர்ப்பால், தாய்ப்பால், தமிழ்ப்பால் இவை மூன்றையும் அருந்தி அடியேன் அக்கிராமச் செம்மண்ணிலே தவழ்ந்து, உணர்வுகள் பல பெற்று, கொந்தளித்து வரும் பல பிரச்சனைகளை எதிர்நோக்கி, இன்று நரைத்தவனுக்குரிய துயரத்தை தோள்களிலே சுமந்து கொண்டு உங்களுடன் பேசுவதிலும் உங்களுக்கு எழுதுவதிலும் பெருமை கொள்கிறேன்.

கலை, இறைவனால் வெவ்வேறு விடயங்களில் எல்லோருக்கும் கிடைத்த உணர்ச்சியின் தூண்டல்கள். அப்படிப்பட்ட பல கலைகளில் விரல்விட்டு எண்ணக்கூடியவைகளில் அடியேன் மூழ்கி எழுந்துள்ளேன். சிலவற்றில் கரைகூடக் கண்டிருக்கின்றேன். பலவற்றை விரக்தியினால் விரும்பி வெறுத்திருக்கிறேன். இவற்றிற்கெல்லாம் காரணம் இளமை. இரணியனுக்கும் பிரகலாதனுடைய வயதிருந்தால் அவன் நரசிம்ம அவதாரத்துடனேயே சண்டை போட்டிருப்பான். அந்தளவிற்கு இளமை மனிதனையே மாற்றுகின்றது.

இவனைப்பொறுத்தவரை விரக்தியினாலேயே பல உணர்ச்சிகள் இவனின் தசை மேகத்தினுள் ஊறியுள்ளன. பூவிலிருந்து மணம் வந்தாலும் பூவின் குணம் வேறு. மணத்தின் குணம் வேறு. இது எவ்வளவிற்கு உண்மையோ அப்படி இவ்வுலக வாழ்க்கையும் வேறு.

கவியரசு வைரமுத்து சொன்னார், கல்லறையின் மௌனங்கள் கவிதைக்குள் வரும் வரைக்கும் புல்முளைத்த மண்மேட்டில் பொருள்விளங்கப் போவதில்லை. எனது உணர்ச்சிக்கு நீர் ஊற்றிய ஆகாயம் இவ்வரிகள். அதேபோல் எனது உணர்ச்சியின் முதற்போகத்தை

முடிவு செய்ததும் சில வரிகளே. அவை எனது சகோதரியினால் தெரியப்படுத்திய "சுமைகள் கூட சுகங்கள்தானே மனித வாழ்விலே, ஒளியும்கூட அழுகைதானே மெழுகின் வாழ்விலே.
இன்னும் பல.......

அன்பை விதைப்பதும், புதுப்பிப்பதும், மனிதர்களை மதிப்பதும், கலையையும் உணர்ச்சிகளையும் வாழவைப்பதுமே இந்நூற்றாண்டின் இவன் பணி.

அதை இவன் செய்யலாம்.

செய்வான்

ஆதாரத்துடன்
இவ்வண்
**ரமணன்**

## இதய வரிகள்..........!

*ஒரு அனாதை வீணையை ஒரு தென்றல் வந்து மீட்டி விட்டுப் போனதைப் போல் நீ போய்விட்டாய். வீணையைத்தானே ரசிப்பார்கள்.*
*ஆனால் வீணையே தன்னை ரசித்தது, நீ மீட்டிய போது மட்டும்தான்.*

*கண்ணீர் எப்படி காயத்தைக் கேள்வி கேட்குமோ, அந்த விதத்தில்தான் மனித நேசம் உருவாகிறது.*

*பெண்மை நாணமற்றுப் போனதால் காதல் மென்மையற்றுப் போகிறது.*
*காதல் ஏக்கமாகுமானால், கண்கள்தான் முதலில் பகையாகும்*

## இதய விசும்பல்கள்

என்னைச் சுற்றி வயல்கள் இருந்தன - ஆனால்
நெல்மணிகள் இருக்கவில்லை........
என்னைச் சுற்றி மரங்கள் இருந்தன - ஆனால்
நிழல்கள் தென்படவில்லை.....
என்னைச் சுற்றி உறவுகள் இருந்தன - ஆனால்
உணர்வுகள் தென்படவில்லை.....
மீசை முளைப்பதற்கு முன்னமே
தலை நரைத்தலுக்குரிய துயரம் என் தோள்களில்......

*குஞ்சாகப் பொரிக்கப்பட்ட பிறகும்*
*முட்டைக்குள் போகத்துடிக்கும் அவஸ்தைகள்.........*
*நிஜங்களுக்குள் சுருங்கிப் போயிருந்த எனக்கு*
*மூச்சுக்கொடுத்து தென்றலாக்கப்பட்டேன்.......*
*இத்திசை மேகத்திற்கு உணர்வுகள் ஊட்டியது*
*மதிப்பிற்குரிய நட்புலக மனிதங்களே......*

## நட்பின் பெருமை

நட்பு என்பது எண்ணிக்கை அடர்த்தியல்ல.
கடலுக்குப் பெருமை கோடிக்கணக்கில்
கொழித்துக்கிடக்கும் நுரைகளால் அல்ல, ஆழத்தில்
ஆங்காங்கே கிடைக்கும் முத்துக்களால் தான் பெருமை.
அதேபோல்தான் மனிதத்தின் பெருமை நட்பினால்
விசாலமாக்கப்படுகிறது.

சூரியன் தன்னை நேசிக்கிறதா என்பது தாமரைக்கு
முக்கியமல்ல. ஆனால் சூரியனை நேசிப்பது
தாமரையின் தர்மம் இதேபோல்தான் மனித நட்பும்
பரிணாமம் பெறவேண்டும்.

ஓர் ஆலமரத்தில் ஏராளமான இலைகள் இருக்கின்றன.
ஒன்று உதிர்ந்து போனால் இன்னொன்று அழுகின்றதா?
இல்லை.... மனிதர்களில் மட்டும் ஒரு அன்பு உதிர்ந்து
விட்டால் மற்ற அன்பு ஏன் அழுகிறது?... ம்..... அது ஒரே
ஆலிலையில் தோன்றிய நரம்புகள்.

**ரமணன்**

## காவியம்

என் காவிய நாயகனே;
அன்று நீ சொன்னாய்
ஏய் பெண்ணே!
நாம் இணைந்தால்
நல்லதோர் காவியம்
படைக்கலாம்
'நமக்கு' என்றாய்!
நீ பிரிந்த
பின்பல்லவா புரிகிறது
நாம் பிரிந்தாலும்
நல்லதோர் காவியம்
படைக்கலாம்
'எனக்கு' என!

---

**து. சாந்தினி**
**கவிதைகள்**

---

## வாழ்வே உனக்காக.....

சுவாசிக்கின்றேன்
உன்மூச்சை,
சுமக்கின்றேன் என்னுயிரை,
நினைக்கின்றேன்
உன்னுறவை,
அடைகின்றேன் நிம்மதியை,
சொல்கின்றேன்
உன்பெயரை,
காண்கின்றேன்
சொர்க்கத்தை,
காதலிக்கின்றேன்
உனைமட்டும்,
கைபிடிப்பாய் எனஎண்ணி,
காத்திருப்பேன் உனக்காக,
மெய்சேர்ப்பாய் எனநம்பி,
வாழ்ந்திடுவேன் அதற்காக,
வாழ்நாட்கள் உள்ளவரை.

# தாய்

டாக்டர்
விக்டர் ஜே. பிகராடோ
குடும்பவைத்தியர்

பழகிவரும் நண்பர்காள்
பணிவாக வேண்டுகிறேன்
அழகு தமிழ் மொழியெடுத்து
அதனினிய நயம் கொடுத்து
இளைய தமிழ் கவிபடிக்க
இங்கு நான் விழைகின்றேன்
நலம் நாடி நிற்கின்றேன்
நல்வார்த்தை நவின்றிடுவீர்

இடைபெருத்தும் நடை தளர்ந்தும்
இன்பமோடெமைச் சுமந்தாள்
உடல் வருத்தும் வலிதாங்கி
உலகினிலே எமை ஈந்தானள்
மடிசுரந்த பாலதனை
மகிழ்வுடனே எமக்களித்தாள்
மடைதிறந்த வெள்ளமன்றோ
மனம்திறந்த தாயுள்ளம்

சுளகு தனில் அரிசியைச்
சுத்தமாய்ப் புடைத்தெடுத்துக்
குழைந்தை நல் சோற்றுடனே
குஞ்சுமீன் கிழங்கிணைத்து
நிலவுதனில் அழகு காட்டி
நித்தமும் நல்லுணவளித்தாள்
தலமதனிலே தனிப்பெருமை
தாயவளே உனதன்றோ

இன்று நான் வளர்ந்து விட்டேன்
இனிமை பல தேடுகின்றேன்
பொன்னென்றும் பொருளென்றும்
பெருஞ்செல்வம் சேர்த்து விட்டேன்
எண்ணிப் பார்ப்பேனா
எனதருமைத் தாயின்று
அன்புக்கு ஏங்குகின்றாள்
அளிப்பதெந்தன் கடனன்றோ......

# ஓ... என் உயிர்க்காதலிக்கு..

ம்... விடுதலை விடிவிற்காக ஒரு நிலவு சூரியனாகி விட்டது.
காதல் பேசிப்... பேசி..... காத்திருந்த அவள் கரங்களில்.... ஆயுதம்.
தென்றலாக வீசியவள் புயலாகவன்றோ சூறாவளிச்சுரம் பாடுகிறாள்.
மரத்துப்போன அவள்... மனம்மட்டும் விடுதலைக்காக துளிர்க்கிறது.
இங்கே..... பிரிந்துபோன.... உறவு.... தேசத்தை எட்டிப்பார்க்கிறது!

ஓ.... என் உயிர்க்காதலிக்கு,

சொந்தமண்ணில் உணர்வுகளை புதைத்துவிட்ட எனக்கு
உன் சன்னக்கடிதம் தான் வெட்கமும் ஒடுக்கமும் தந்தது.
உன் வரவுக்காகக் காத்திருந்த என் சுவாசம் செத்துவிட்டது.
என் கனவுகளில் தட்டுப்பட்டநீ... இன்று கடவுளாகிவிட்டாய்!

சொப்பனங்களில் சொர்க்கமாகிவிட்ட கனடிய வாழ்வை விடுத்து
சன்னங்களில் சரித்திரம் படைக்கப் புறப்பட்ட என்.... காதலியே...?
விடுதலை உணர்வுகள் செத்துப்போய் சுயநலமாகிய எனக்கு
என் தாய் மண்ணின் விசும்பலை கேட்கவைத்துவிட்டாய்!

கனவுகளிலும் கற்பனைகளிலும் மிதந்துவந்த என் ஆத்மாவிற்கு
உன்பிரிவுதான் என் தேசத்தை எட்டிப்பார்க்க வைத்தது.
நான் உயிருக்கஞ்சி கடல்கடந்த தேசத்துரோகி.
நீ... தேசத்திற்கு உன் உயிரை அர்ப்பணித்த என் காதலி.

எம்காதல் சுவடுகள் பதிந்த மண்ணை இழக்கமாட்டோம்
எம் தேசக் காவலர்கள் முன்னே சென்று சரித்திரம் படைப்பார்கள்.
என்றோ ஓர் நாள்.... தேச விடியல் செய்தியுடன்........
என் உயிரும் உன்னைத் தேடிவரும்......!

நோக்கிய இலட்சியங்கள்...

நிரா.



# மதியம் திரும்ப மதியும் திரும்புகிறது

~ குறமகள்

ஒன்ராறியோ வாவிக் கரையில் ஹம்பர் குடா பார்க்கில், வாண வேடிக்கை பார்க்க மக்கள் குழாம் குழுமிக் கொண்டிருக்கிறது.

அன்று கனடாத் தினம்!
நேர் எதிரே ரொறன்ரோ நகரம் இரவு நேரத்தின் மின்னொளியில் குளித்துக்கொண்டிருக்கிறது. ஸ்கைடோம், சி.என்டவர், உயர்மாடி வீடுகள் எங்கும் மீன் குமிழ்கள் மல்லிகை முல்லைக் கொடிகளில் சிரிக்கும் வெண்ணிற மலர்கள் போல,. வர்த்தக நிலையங்களின் ஓடி அணைந்து பலவித அழகுக் கோலங்கள் காட்டும் விளம்பரங்கள், அடிக்கடி நிலவை மறைக்கும் முகில்கள் போல. வானத்துச் சந்திரனின் ஒளி வாவியில் பிரதிபலிக்கின்றதோ?

சிறிது நேர அழகு லயிப்பு அவளுக்கு.



அவள்தான் மைத்ரேயி.

"அன்ரி, தூக்குங்கோ அன்ரி", அடம்பிடிக்கும் அந்த மழலைக் குரல் அவளை இவ்வுலகுக்கு இட்டு வருகிறது. வாரியணைத்துத் தூக்கிக் கொண்டாள் தன் அண்ணன் மகன் சரணயனை.

"அன்ரி இந்த மூன் வேறை மூனோ, அலலாட்டி எங்கடை ஸ்காபரோ மூனோ?" என்கிறான் நான்கு வயது நிரம்பாத சரண்.

"எங்கடை நிலாதான் சரண்யன்" என்றவாறே 'மூன்' சொன்னதற்குச் செல்லக் கோபம் காட்டுகிறாள் மைத்ரேயி.

மகிழ்ச்சியில் கைகொட்டிச் சிரித்த குழந்தை உடனே யோசனையோடு, "அப்ப என்னென்று இஞ்சை வந்தது" என்று கேட்டது.

அவள் திணறுகிறாள். நிலவைப் பிடித்துத் தா என்று கேட்ட இராமனின் நினைவு வருகிறது அவளுக்கு. சொன்னாலும் புரிந்து கொள்ளும் பருவமா?

"அது விமானத்தில் ஏறி வந்தது" என்கிறாள் அவள்.

"அப்ப போகேக்கை எயப்போட்டிலை பாப்பம்"

"சரண் இங்நை வா. அத்தையைத் தொந்தரவு செய்யாதை. அவ இப்ப வஹீதாவின் கணவனுக்கு எவ்வகையான குடும்ப ஆலோசனை கொடுக்கலாம் என யோசித்துக் கொண்டிருப்பா".

அன்ரியைத் தொடர்ந்து அண்ணனும் கூறி ஏதோ பெரும் பகிடி விட்டதாகச் சிரித்துக் கொள்கின்றனர்.

அவனின் புன்முறுவல் அண்ணனுக்குத் தெரியக்கூடிய அளவுக்கு வெளிச்சம் போதாது. வெளிச்சம் போட்டுக் காட்டினாலும் புரிந்தது போலக் காட்டிக்கொள்ள மாட்டான். தங்கை பாசம்தான் கண்ணை மறைக்கிறதே.



மைத்ரேயி எல்லாப் பெண்களையும் போலச் சாதாரணமானவளாகத்தான் பிறந்தாள். குழந்தைப் பருவத்தில் மிகப் புத்திசாலி. இளம்பருவத்தில் தன் பாடசாலையில் மாத்திரமல்ல - யாழ்ப்பாணப் பாடசாலைகளிலேயே முதல்தர மாணவியாகத் திகழ்ந்தாள். வடமாகாண ஆசிரியர் சங்கம் நடத்திய பரீட்சைகளிலும் போட்டிகளிலும் முதலாம் இடத்தைத் தட்டிச் சென்று விடுவாள்.

குமரப் பருவத்தில் எல்லோரையும் போலவே தனிமையில் வானத்தையும் நிலாவையும் மணிக்கணக்காகப் பார்த்துக்கொண்டு, ஒருவித மையலோடு கற்பனைத் தேரில் பறப்பாள். காணுமிடமெல்லாம் அவள் காதலன் (அவன் யாரோ) கைநீட்டி அழைத்தான், அரவணைத்தான். பிறைச் சந்திரனில் இருத்தி ஊஞ்சலாட்டினான். கடற்கரையெல்லாம் கலைத்துப் பிடித்தான். காதல் என்றால் என்னவெனச் சினிமா தந்த அளவு கோலால் அளவு விரியும்.

நிஜஉலகிலோ கல்விப் பிரவாகம். பாடசாலைக் கல்வி, அறிவுப் பசிக்கு அணைகட்டுவதாயில்லை. அதிகாலையில் புலவர் பார்வதிநாத சிவத்திடம் ஓரளவு சங்க நூல்கள் இலக்கியம் கற்றாள். மாலையில் பேராசிரியர் சோமசுந்தரத்திடம் ஷேக்ஸ்பியர், கிற்ஸ் கற்றாள். சனிக்கிழமைகளில் யாழ். நூலகமே கதியெனக் கிடந்தாள். ஞாயிற்றுக்கிழமை பாலசுந்தரக் குருக்களிடம் சமஸ்கிருதம் கற்றாள். இடைக்கிடை தையற் கலை, பின்னற் கலை எல்லாவற்றிலும் ஓரளவு தெரிந்திருக்க வேண்டும் என்பது அவள் சித்தாந்தம். உருத்திராபதி வீட்டில் சங்கீதமும் கற்றாள்.

இருபதாவது வயதிலேயே பேச்சுக்கால்கள் வரத்தொடங்கின. நட்சத்திரப் பொருத்தம் சரிவந்தால் கிரகப் பொருத்தம் மட்டம். செவ்வாய் 12ல் உச்சமாக நிற்கிறதாம். அதைவிட மோசமாக கேது 12ம் இடத்திலே கூடி நிற்கிறார்களாம். நிச்சயம் இரு தாரமாம். இந்தக் கிரகங்கள் தாங்கள் கூடிநின்று கொண்டு மனுஷரை ஏன் பிரித்து விடுவான்?

படிப்பைக் கண்டு ஓடிவந்தோர் பறந்தடித்துச் சென்றனர். அழகைக் கண்டு ஆராதித்தோர் அசங்கிடாமல் நழுவினர். கற்பனை இராச்சியத்தின் வசந்த வாழ்வு 28 வயதுக்குள்ளேயே அவளை விட்டு நீங்கிவிட்டது. இருதாரத் தடைக்கல் வாழ்வின் அல்லது மனிதரின் பொய்மையைப் புகன்று நிற்கவே, அறிவுலக நண்பர்களோடு அரட்டை அடிப்பதையும் குறைத்துக் கொண்டாள்.

முழுமையான கணக்காய்வாளராகத் தொழில் பார்த்துக்கொண்டே திருப்தி நிலைக்கு வந்துவிட்ட மைத்ரேயி ஆத்மீக நெறியில் அறிவைப் பெருக்க விழைந்தாள். மாஸ்லோவின் தேவைக் கொள்கையின் உச்சநிலை தன்னைத் தானே அறிதலும் பிறருக்காக வாழ்தலும். இந்தநிலை சிறுவயதிலேயே வந்துவிட்டது. வேதஉபநிடதங்கள், சங்கரபாஷ்யம், கிருஷ்ணமூர்த்தி, சத்யசாயி, பகவத் கீதை கருத்துக்களை உள்வாங்கி ஏற்கனவே அறிந்திருந்த விஞ்ஞானிகள் - அவர்களது கொள்கைகளுடன் ஒப்பிட்டு ஆராய்வாள்.

சிறு வயதுக்குள்ளேயே ஒரு பூரண வாழ்வை அடைந்துவிட்ட மைத்ரேயி 75-80 வயதில் கூடத் தம் கணிப்புத் தேவை நிறைவு பெறாது நாணம் சிறிதுமின்றிப் பிறர்பின் ஓடி வழிந்து மேடை கேட்பவர் போலல்லாது, தன்னிறைவு பெற்று உலக சமுதாயத்தை ஒரே தன்மையுடன் பார்க்கும் உயர்நிலைக்கு உயர்ந்து விட்டாள்.

கனடாவுக்கு வந்த அண்ணன் பரம்சோதி தங்கைக்கு நல்வாழ்வு கிடைக்கக்கூடிய சுயமான சூழ்நிலை



ஒன்றைக் கண்டான். இலங்கையிலும் இலண்டனிலும் பெற்ற கல்விச் சான்றிதழ்களுடன் இருக்கும் தங்கைக்கு இனித் தேவையானது இல்வாழ்க்கைதான் எனத் தங்கையைக் கனடாவுக்கு அழைத்தான்.

தமிழீழச் சிந்தனை ஒரு புறம், பெண்களுக்கு இன ரீதியாகவும் சாதி ரீதியாகவும் பாலியல் ரீதியாகவும் இழைக்கப்படும் அநீதிகளைக் கண்டு கொதிப்பது மறுபுறம். அங்கிருந்து எந்தச் செயலிலும் செய்ய முடியாத நிலை. ஒரு ஜனநாயக நாட்டுக்குச் சென்றால் அங்கிருந்தே பல பங்களிப்புகளைச் செய்யலாம் என

வந்தவளுக்கு பெண்கள் அமைப்பு ஒன்றின் நிர்வாக இயக்குனர் பதவி கிடைத்தது. பல்லினப் பெண்களுடன் பழகும் வாய்ப்பும் கிடைத்தது. விவேகானந்தரைப் போலக் கிழக்கையும் மேற்கையும் இந்துமதம் மூலம் இணைக்கும் பேறும் கிடைத்தது.

அண்ணாவின் குழந்தைகள் மாத்திரமல்ல, சிறுவர் அடைக்கல விடுதிக் குழந்தைகளும், அவளது குழந்தைகள் தான். உயர்ந்த எண்ணங்களும் சேவை மனப்பான்மையும் நிறைந்த அவளுக்கு செக்சும் காதலும் இரண்டாம் பட்சமாகிவிட்டன. ஒரு நாளின் 24 மணிநேரமும் அவளுக்குப் போதாமல் இருக்கும்போது கற்பனைகளை வளர்த்துக் கொள்ளவோ குடும்பம் பற்றிச் சிந்திக்கவோ அவளுக்கு நேரமில்லை. சமுகசேவையே தாரக மந்திரம் அதில் பெறும் மனநிறைவே அவளை ஒரு பூரண மனுஷியாக்கி விட்டது.

அன்றொருநாள் ஈழத்தின் இறைமை பற்றி கனடிய அமைச்சர்கள் குழுவுடன் கலந்துரையாடச் சென்ற குழுவுடன் அவளும் சென்றிருந்தாள். புதினங்களை அண்ணனிடம் பகிர்ந்து கொள்ள ஸ்காபரோ சென்றபோது, அங்கே கதைத்துக் கொண்டிருந்த இளைஞனைக் கண்டதும் மலர்ந்து போனாள்.
"தேவசேனன் நீரா? எந்தப் புத்துக்குள்ளிருந்து புறப்பட்டீர்?"
"பேந்தென்ன நீங்கள் மறக்கவில்லை. 14,15 வயதில் கண்டது. எப்படிக் கண்டு பிடித்தீங்கள்?"
"வருடங்கள் பறக்கப் பறக்க எனக்குத் தெரிந்த தேவசேனனும் மனதுள் வளர்ந்துகொண்டே போனான். கன்னத்தில் நரை தோன்றியிருக்கும் எனவும் நினைத்தேன்" - சினேகபூர்வமாக அற்புதமாகச் சிரிக்கின்றாள். பரஞ்சோதியைப் பார்க்கிறான். அவரது கண்களிலும் ஏதோ புரிந்து விட்டதான உணர்வு.



தேவசேனன் பளைப்பரியாரி சின்னத்தம்பியின் மகன். இவர்கள் வீட்டுக்குச் சமீபத்தில் இருப்பவர்கள். இவள் அம்மாவின் நோய்களுக்கு வீட்டுக்கு வந்து படியில் இருந்துகொண்டு மணிக்கட்டில் பட்டுத்துளி போட்டு நாடி பார்ப்பவரில் தேவசேனன் இவளுக்கு இரண்டு வகுப்பு முதலில் படித்தவன். தந்தையைப் போல நல்ல பண்பும் பழக்க வழக்கங்களும் கொண்டவன். முதலாம் பிள்ளையாக வருவதற்குக் கணிதம் கணக்கு

விட்டுக்கொண்டிருந்தது. அவளோ கணக்கில் புலி. ஹோல் அன்ட் ஸ்ரீபன்ஸன் புத்தகங்களில் தனது வகுப்புத் தரத்துக்கு மேலான கணக்குகளையும் செய்து கரை கண்டவள்.

பரஸ்பரம் ஒருவிதமான நட்பும் மரியாதையும் கொண்டிருந்த அந்தக் குடும்பங்களுள் இச்சிறு பையன் வந்து அப்பெண்ணிடம் கணிதம் கற்றுக்கொள்வதை யாரும் தடுக்கவில்லை. ஆனால் அவன் கீழ்ப்படியில் இருக்க வேண்டும். இவள் வராந்தாவிலிருந்து படிக்க வேண்டும் என்பது பாட்டியின் கட்டளை. குழந்தைகள் ஆனாலும் அவர்கள் தத்தம் எல்லைகளை உணரவைக்கப்பட்டவர்கள்.

தேவசேனன் 1969ம் ஆண்டு ஏழாம் ஆண்டு ஜாதிக நவோதய புலமைப் பரிசில் பெற்ற நாட்களில், அனது கம்பீரமும் கெட்டித்தனமும் பொ-றாமையை விதைத்தது. ஊர் மாணவர்களால் சிறுப்பினைப்படுத்தப்பட்ட வேளை அவனது ஆளுமைக்குப் பங்கம் ஏற்படுவதைக் கண்ட பரியாரியார்அவனை சென் ஜோன்ஸ் பாடசாலையில் சேர்த்து விட்டார். பத்தாம் வகுப்புப் பரீட்சையில் மைத்ரேயி விளக்கிய பைதகரஸ் தியரத்தின் அப்பியாசம் ஒன்றும், சரக்கு முதல் பயிற்சி ஒன்றும் இலக்கம் மாற்றி வந்தபோது பூரித்து விட்டான்.

கொழும்பில் லிகிதராக இருந்த அவனது அத்தானுடன் அனுப்பி றோயல் கல்லூரியில் விஞ்ஞான வகுப்பில் சேர்க்க ஆயத்தங்கள் நடந்தபோது கணிதத்தில் அதிவிசேட சித்தியுடன் திறமைச் சித்திகள் எடுத்திருந்தான்.

"அட மொக்கா! உனக்குத் தந்தாங்களே" என நையாண்டி செய்து "இனிக் கணிதமும் தேவையில்லை. மைத்ரேயியும் தேவையில்லை" எனத் தன் பிரிவாற்றாமையைச் சிரித்துச் சிரித்தே கூறிய இன்னும் பருவத்துக்கு வராத அப்பெண்ணின் உணர்ச்சி வதனம் அவனால் இன்றும் மறக்க முடியவில்லை.

பல வருடங்களின் பின் அமெரிக்காவில் உயர் பதவியொன்றில் அமர்ந்திருந்த தேவசேனன் விடுமுறைக்குக் கனடாவில் வந்து, றோயல் கல்லூரி பழைய மாணவர் சங்கத்துக்குச் சென்றிருந்தபோது பரஞ்சோதியைக் கண்டு பேருவகை கொண்டான். அதன் விளைவே அவன் வருகை.

இப்போதெல்லாம் இவர்களைப் பார்ப்பதற்காக அடிக்கடி வந்து போகிறார். அதோ, அண்ணனின் மூத்தவன் சயனுடன் உலாத்தி உலாத்தி அவன் பாடசாலைப் பகிடிகளையும் அதன் அர்த்தங்களையும் கேட்டுக் கேட்டு வியந்து சிரிக்கிறார். அந்த எட்டு வயதில் அவன்கூறும் பேஸ் போல், ஹொக்கி விளையாட்டுகள் பற்றியும், விண்வெளி பற்றிய விடயங்களையும் கேட்டு அதிசயிக்கின்றனர். இன்று இவர்களுக்கு கவல் தெருவிலிருக்கும் அவள் வீட்டில்தான் சாப்பாடு.

அண்ணன் பரஞ்சோதி ஒரு கனடியனாக மாறிவிட்டான். தங்கை விடயத்தில் தான் ஒரு கனடியன் என்பதை நிரூபிக்கவும் தயாராகிவிட்டான்.

அண்ணனின் நெருக்கமும், தைரியம் ஊட்டும் கதைகளும்,


GASA Restaurant

தேவசேனனுக்கும் மைத்ரேயியுக்கும் புரிந்து போகிறது. ஆனால் அவர்கள் என்றும்போல கனடாவானதால் சிறிது நெருக்கமாகப் பழகி நட்புப் பாராட்ட வருகின்றனர். பரஞ்சோதிக்கோ உலக வாழ்வு என்பது இல்லற வாழ்வுதான். விவாகம் ஒன்றே மனித வாழ்வின் ஒரே குறிக்கோள். தங்கைக்கு விவாகமாகும் வரை தனக்கு ஏதோ பெருஞ்சுமை இருப்பதான உணர்வு.

ஆகவே அன்பைக் கொட்டி இளக வைக்கிறார். சமூகசேவை மீது கிண்டலடிக்கிறார் நோய் நொடி வந்தால் அத்தனை குடும்பங்களும் தலைமாட்டிலே நின்று தாங்கு தாங்கெனத் தாங்கப்போகுதுகள் என நையாண்டி செய்கிறார்.

இத்தடவை அண்ணன் அண்ணிக்குப் பதில் சொல்லியாக வேண்டும். தேவசேனனுக்கும் தான். ஓ! தேவசேனா, உன் அன்பை மதிக்கன்றேன். ஆனால், கணவன்-மனைவியெனக் கற்பனை பண்ணக்கூட முடியவில்லையே! சிறுவயதில் படித்துவிட்டு இரு படி இறக்கமா? சொந்த அண்ணனாக, நண்பனாக, உயிர்த் தோழனாக நினைக்க முடிகிறது. ஆனால்.. ஆனால்.. மைத்ரேயி உன் உடல் உணர்வுகள் செத்து விட்டனவா? இல்லை! கணவன் என்றால் வயதில் கூடியவன் தகுதிகளில் மிகுந்தவன் - உயர்ந்தவன். இது சமூகம் கற்பித்த பாடம். சீர்திருத்தம் பேசினாலும் பால்ய வயதில் பதிந்து விட்ட பாடம். இரண்டு படிகள் கீழேயிருந்த மாணவனாகக் கணிதம் படித்த, மதிப்பின்றி 'டேய்' என்று உரிமையோடு அழைக்கப்பட்டவன்.

இக்கரையில் இருந்து யாரோ அவிட்டுவாணம் விடுகிறார்கள்.



ஒளிப்பந்து ஒன்று பிரகாசமாய் மேலே கிளம்புகிறது திடீரென வெடித்து நிறம் நிறமாக மலர்ந்து பின்னர் கரித்துகள்களாக விழுகிறது. திடீரென அவளது மனம் துன்புறுத்தப்பட்ட பெண்களின் நினைவுக்கு வருகிறது. இன்று இவர்கள் மத்தாப்பூ. நாளை அவர்கள் அதிகார ஆணவம் ஒழிந்த கரித்துகள்கள். பெண்ணையும் ஓர் உயிரென மதியாது சுயமாகச் சிந்திக்கவும், முடிவெடுக்கவும் இடங்கொடாது கைவரிசை காட்டிப் பெண்கள் தஞ்ச நிலையங்களையும், சிறுவர் அடைக்கல வீடுகளையும் நிரம்பி வழியச் செய்பவர்கள். தமிழர் மாத்திரிமல்ல, இவர்களைவிட மோசமான பல்லினக்

கலாசாரத்தினரும் தான். இவர்களை உணரவைக்க திருமதி. தேவசேனனால் முடியுமா?

மறுநாள் மீன் தொட்டியருகே நிற்கிறாள் அவள். அண்ணனும் அண்ணியும் அவள் வாயையே எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். துடிப்பு மிகுந்த பொன்னிற மீனொன்றை வெளியே தூக்குகிறாள். அது துடிக்கிறது.
“என்ன விசர் வேலை செய்யிறாய்; வீடு கீழை”, அண்ணா.
“யோசனைக் கடுமையிலை செய்யிறது தெரியேல்லையாக்கும்”, அண்ணி.
“அண்ணா! 36 வயது வரை நான் சாதித்தது அனேகம். இனிச் சாதிக்கப் போவதும் ஏராளம். பலருககும் பறை தட்டிப் பேர் புகழைச் சம்பாதிக்கவில்லை. பாதிக்கப்பட்டவர்களே அறிவார்கள். மீனுக்கு அச்சூழல் பழக்கப்பட்டது மாதிரித்தான் எனக்கும் இந்த வாழ்க்கை பிடித்து விட்டது.

அண்ணி குறுக்கிடுகின்றாள். “நிம்மதியும. திருப்தியும் இருக்குதென்று நினைக்கிறாயா? தேவசேனன் இவற்றுக்கெல்லாம் மாறுபட்டவனில்லையே.”.
நிம்மதி, திருப்தி என்பதோடு மனநிறைவைத் தருகின்ற பூரணமான என்னும் அடைமொழிகளையும் சேர்த்துக் கொள்ளுங்கள். அண்ணி உங்கள் வாழ்க்கை பூரணமானதா? அப்படியாயின் அண்ணன் இல்லாத நேரத்தில் காலில் சலங்கை கட்டி அறைக்குள் ஏன் ஆடுகிறீர்கள். 20 வயதில் மேடையால் இறங்கிய காலத்தில் ஓய்ந்துபோன ஆட்டம், குழந்தை குட்டி வீடுவாசல் செல்வம் நிறைந்த பூரண வாழ்வில் ஏன் இந்த ஏக்கம்? எப்போ அண்ணா வெளியே போவார் எனக் காத்திருக்கிறீர்களே”.

அண்ணா அதிசயத்துடன் அண்ணியைப் பார்க்கிறான். தேவனேசனின் வருகை மௌன-மாக்குகின்றது. பரஞ்சோதியின் நிலைமையைப் புரிந்து கொண்டு புன்முறுவல் செய்கிறான். எனக்கு முன்பே தெரியுமே என்ற அர்த்தத்தில்.

“நாளைக்கு ‘இன்டிபென்டன்ற் டே” படத்துக்கு டிக்கட் கிடைத்திருக்கு. வாறீங்களா?

டயறியைப் புரட்டுகிறாள் மைத்ரேயி.

டிக்ஸி அன்ட் புளோர் அயலவர் சேவை நிலையத்தின் சிறுவர் தின விழா இருந்தது. அது ஒத்திவைக்கப்பட்டிருக்கு. அப்ப போகலாம்” என்கிறாள். ஒரு பாரம் நீங்கிய நிம்மதி அவளுக்கு.

அவள் தனித்துவமானவள். நாதியற்றவர்களுக்குச் சேவை செய்வாள். சேவையிற் பூரண நிலை பெறுவாள்.





# தாய்மொழி காப்போம்! தாயகம் மீட்போம்!

**T.K. பரமேஸ்வரன்**
ஆசிரியர் 'ஈழநாடு' (கனடா)

என் இனிய சொந்தங்களே! இதோ உங்களை எம் அன்னை பூமியாம் தமிழீழம் நோக்கி அழைக்கின்றோம்.

தமிழீழ மண்ணிலே கால்பதித்து அதன் வனப்புகளையும் வளமான பகுதிகளையும் சுற்றிப் பார்க்கின்ற சுற்றுலாவுக்கு வானூர்ந்து செல்ல உங்களை அழைக்கவில்லை.

மாறாக உம் சிந்தனைச் சிறகுகளை அகல விரித்து எம் தாயக பூமியில் நடக்கும் அன்றாட நிகழ்வுகளை மனதிலே பதித்திட பறந்து வா என்று அழைக்கின்றேன்.

தமிழீழம் யுத்த சன்னத பூமியாக உள்ளது.

எமது வரலாற்று எதிரி எமது மக்கள் மீது போர் தொடுத்து நிற்கின்றான்.

தாயக பூமியின் இரத்த ஆறு வற்றாத ஜீவநதியாகப் பாய்ந்தோடிக்கொண்டிருக்கின்றது.

தமிழீழத்தின் வடக்கே பருத்தித்துறையில் இருந்து தமிழீழத்தின் தென்கோடியாம் பொத்துவில் வரை தமிழர்களின் மரணஓலம் கேட்கிறது.

தினந்தோறும் எம் மக்கள் எதிரியின் கொடுரங்களால் செத்து மடிந்து கொண்டிருக்கின்றார்கள்.

காக்கியுடையணிந்த சிங்கள ஓநாய்கள் இரத்த வெறிகொண்டு எமது மக்களை வேட்டையாடித் திரிகின்றன.

சுற்றி வளைக்கப்பட்டு கைதானவர்கள் காணாமல் போகின்றார்கள். பாலியல் வன்முறைக்கு ஆளான நமது சகோதரிகள் இரத்தக்கண்ணீர் வடிக்கின்றார்கள்.

அக்கினிக் குண்டுகளை வீசி எம் அன்னை பூமியாம் தமிழீழ மண்ணை சுடுகாடாக்குவதற்கு எமது வான்பரப்பில் தினம் தினம் விமானக் கழுகுகள் வட்டமிடுகின்றன.

வீடுகளின் மீதும் - தஞ்சமடைந்த தேவாலயங்கள் மீதும் ஆண்டவன் குடிகொள்ளும் ஆலயங்கள் மீதும் விழும் குண்டுகளால் கருகிப்போன எமது தங்கையர், தம்பியர், தாய்மார்கள், தந்தையர்கள் எத்தனைபேர்.

என் இனிய சொந்தங்களே! நீங்கள் இதையெல்லாம் எண்ணிப் பார்த்தீர்களா? இன்னும் ஏன் விழித்துக் கொள்ளவில்லை?

சிங்கள தேசம் இன எழுச்சி கொண்டு தமிழினத்திற்கு எதிராக அணிதிரண்டு நிற்கின்றது.

வர்க்க வேறுபாடின்றி, சாதி வேறுபாடின்றி, மத வேறுபாடின்றி, கட்சி வேறுபாடின்றி, கருத்து வேறுபாடின்றி சிங்கள இனம் ஈழத் தமிழனது விடுதலைப் போராட்டத்தையும், அந்தப் போராட்டத்தை கிஞ்சித்தும் தங்குமடங்களோ அன்றி தடைகளோ இன்றி முன்னெடுத்துச் செல்லும் போராட்ட முதன்மைச் சக்தியாம் எம்

*வீரமறவர் அணிவகுத்து நிற்கும் விடுதலைப்புலிகள் இயக்கத்தையும் வேரோடு பிடுங்கி எறிய ஒன்று திரண்டு போர்க்கோலம் பூண்டு நிற்கின்றது.*

*தமிழர்களுக்கு எதிரான யுத்தத்தில் களம் குதிக்க சிங்கள இளைஞர்களைத் திரட்ட சிங்கள அரசு முனைந்து நிற்கின்றது. அது முடியாது போனால் 'கட்டாய இராணுவ சேவை' என்ற போர்வையில் தமிழர்களை அழித்தொழிக்கக் கட்டாயம் சிங்கள இளைஞர்கள் களம் ஏகியே தீரவேண்டும் என்ற நிலையை உருவாக்க எதிரி சிந்தித்துக் கொண்டிருக்கின்றான்.*

*சிங்களத்துச் சண்டியன்களை போர்க்களத்திலே புறமுதுகு காட்டி ஓடவைக்க புறநானூறு படைக்கின்ற புது நானூற்று வீரர்களாக உன் தம்பிமார், தங்கைமார் தனித்து நின்று களத்தில் புலியாக - கடற்புலியாக - கரும்புலியாக போராடுகின்றார்கள்.*

*எதற்காக?*

*உங்கள் எதிர்காலச் சந்ததி சுதந்திர மனிதர்களாக வாழ்வதற்காக! உங்கள் தாய்மண்ணாம் தமிழீழத்தைப் பாதுகாக்க!*

*ஆனால் நீங்கள் இன்னும் ஏன் விழித்துக் கொள்ளவில்லை?*

*அந்நிய தேசத்து அகதி வாழ்வின் சுகம் போதுமென்று நினைக்கின்றீர்களா? எத்தனை நாளைக்கு இந்த இழிவு வாழ்வு?*

*தாய்மொழியாம் தமிழை மறந்து - தமிழ்பேச வராது என்று அடிமைத்தனப் பெருமை பேசி - நடை உடை பாவனைகளை மாற்றி - கலை கலாசாரத்தை மறந்து வாழ்ந்தால் போதுமென்று நினைக்கின்றாயா?*

*கண்ணை விற்றுச் சித்திரம் வாங்கினால் கைகொட்டி மாற்றான் சிரிக்க மாட்டானா? சிந்தித்துப்பாருங்கள் என் சொந்தங்களே!*

*எம் தாய்மொழியின் மகத்துவத்தை எண்ணிப்பாருங்கள்! கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே முன்தோன்றிய ஓர் இலக்கிய நயமும் இலக்கணச் செறிவும் கொண்ட உன்னத மொழி.*

*தன் மொழியின் சிறப்புக்களை தமிழன் உணரவில்லை. ஆனால் அந்நிய தேசத்து அறிஞர்கள் பலர் உணர்ந்தார்கள். அதற்கு அடிமையானார்கள்.*

*இதோ பாருங்கள்!*

*ஜோசப் பொஸ்கி என்ற இத்தாலிய நாட்டைச் சேர்ந்த கிறிஸ்தவ மத போதகர் தாம் வந்த வேலையைக் கூட ஒதுக்கி வைத்துவிட்டு தமிழகத்திலே தங்கி தமிழின் இனிமையில் தன்னை இழந்து தீஞ்சுவை ததும்பும் தேம்பாவணியைப் பாடி பரம்பரை மத சம்பிராயத்திற்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டு தமது பெயரையே வீரமாமுனிவர் என மாற்றி ஒரு தமிழ் மகனாக - தமிழ்த்தாயின் தவப்புதல்வனாக வாழ்ந்து மறைந்தார். ஆனால் தமிழைச் சுவைக்கும் கலைஞர்கள், அறிஞர்கள், அறிவார்ந்தவர்கள் உள்ளங்களில், காவியங்களில் இன்னமும் வாழ்ந்து கொண்டிருக்கின்றார்.*

*லண்டன் மாநகரத்து தேம்ஸ் நதித் தீரத்தில் இருந்து மதம் பரப்ப வந்த போப் எனும் பாதிரியாரை கன்னித் தமிழ் மங்கை கட்டியணைத்துக் கொண்டாள்.*

புனித பைபிளைத் தமிழனுக்கு உபதேசிக்க வந்தஜி.யு.போப் திருக்குறளைப்பல மொழிகளில் மொழிபெயர்த்து ஐரோப்பியர்களுக்கு வள்ளுவத்தை வாழ்நாள் எல்லாம் போதித்து ஜி.யு.போப் 'ஓர் தமிழ் மாணாக்கன் இங்கே தூங்குகின்றான்' எனப் பெருமையுடன் பொறிக்கப்பட்ட கல்லறையில் லண்டன் மாநகரத்தில் உறங்குகின்றார்.

எத்தனையோ இன மக்களை ஆங்கிலம் பேசும் இனத்தவனாக மாற்றிய ஆங்கிலேயர்கள் 200 ஆண்டுகாலம் ஈழத்தமிழகத்தையும் அடிமை கொண்டு ஆதிக்கம் செலுத்தினார்கள்.

200ஆண்டுகால ஆங்கிலேயனின் ஆட்சி அதிகாரத்திற்குத் தமிழன் அடிமையானானே தவிர தமிழ் அடிமையாகவில்லை. அழியவில்லை. இளமை குன்றவில்லை.

கடல் கொண்டும் அழியாத கன்னித் தமிழ் அல்லவா உம் தாய்மொழி. தாய்மொழியின் மகத்துவம் புரியாமல் நாம் வாழலாமா?

எம் எதிர்காலச் சந்ததி தமிழ் தெரியாத தமிழனாக வாழத்தான் வேண்டுமா? இன்று உன் குழந்தை பேசுகின்ற அழகான ஆங்கில உச்சரிப்பு உனக்கு ஆனந்தமூட்டலாம் பரவசப்படுத்தலாம்.

ஆனால்!
நாளை இந்தக் குழந்தை ஆங்கில மொழியிலே தமிழின் பெருமை பற்றி - தமிழனின் வீரமிகு போராட்டத்தைப் பற்றி ஏன்? தன் தந்தையும் தாயும் பிறந்த மண்ணிலே நடைபெற்ற விடுதலைப் போராட்டத்தைப் பற்றி படிக்கின்ற ஒரு காலம் உருவாகியே தீரும். அப்போது உன் குழந்தைகள் உன்னைப் பாராட்ட மாட்டார்கள். இவ்வளவு மகத்துவம் நிறைந்த ஒரு மொழியைச் சொல்லித் தராதவர்கள் என்று உன் முகத்திலே காறி உமிழ்கின்ற காலம் ஒன்று காத்திருக்கின்றது என்பதை மறந்து விடாதே.

எனவே இன்னும் காலம் கடந்து விடவில்லை. உன் மழலைகளை தமிழிலே பேசப்பழக்கு. தமிழின் மகத்துவத்தைப் பற்றி எடுத்துக்கூறு. 'ஓர் இனத்தின் முகமும் முகவரியும், மொழியும் தாயக மண்ணுமே' என்ற உண்மைத் தத்துவத்தை நினைவிலே நிறுத்திக் கொள்.

இவைகளை மட்டும் செய்து கொண்டு அந்நிய தேசத்திலே ஆனந்தமாக வாழலாம் என்று எண்ணாதே. அந்நிய தேசத்து மண்ணில் இருந்து என்றோ ஒருநாள் அகன்றேதான் தீரவேண்டும்.

எங்கே அகன்று போகப் போகின்றாய்? இன்னொரு அந்நிய மண்ணுக்கா? அங்கே உனக்குப் பாலாறும் தேனாறுமா ஓடப்போகின்றது?

அங்கும் நீ பஞ்சப் பரதேசிதான்.

ஆனால் என் சொந்தங்களே வாருங்கள்! என் மடியிலே வந்து படுத்துறங்குங்கள்! என்று வரவேற்க இந்தப் பூமிப் பந்தில் ஓர் நாடு இருக்கத்தான் போகின்றது.

ஆம்! அதுதான் உன் தாயக பூமியாம் சுதந்திரத்தமிழீழம்!

அந்த புண்ணிய பூமியை உருவாக்கத்தான் உன் தம்பிமார்கள், தங்கைமார்கள் தனித்துக் களமாடி வருகின்றார்கள்.

அவர்களுக்கு நீ என்ன பங்களிப்பைச் செய்தாய்? உன் வரலாற்றுக் கடமையை - தேவையான இந்த

நேரத்தில் செய்தாயா?

என் இனிய சொந்தங்களே! எம்மைப்போல்தான்- எம்மொழிபோல்தான் பழம்பெரும் மொழியான ஈபுறு மொழிபேசிய யூத இனம் தங்களுக்கென்று நாடின்றி உலகின் பல்வேறு நாடுகளில் சிதறிச் சின்னாபின்னப்பட்டு அந்த நாட்டுக் கலை கலாசாரத்தைப் பேணி அந்த நாட்டுப் பெண்களை மணந்து, அந்த நாட்டு ஆடவனைக் கரம்பிடித்து வாழ்ந்து அந்த நாட்டவர்களாகிவிட்ட யூத இனம் ஒரு கட்டத்தில்தான் சிந்திக்கத் தொடங்கியது. நாம் ஒரு பழம்பெரும் இனமாயிற்றே. எமது தாய்மொழியாம் ஈபுறு ஒரு பழம்பெரும் மொழியாயிற்றே. நாம் ஏன் அடிமையாக வாழவேண்டும்? எமது ஆற்றலையும் அறிவையும் ஏன் மற்றவர்களுக்கு வழங்க வேண்டும்? என்று சிந்தித்து சகாராப்பாலைவனப் பகுதியிலே பொலித்தீன் பைகளிலே தண்ணீரோடு சென்று குடியேறி இஸ்ரேல் என்ற ஒரு நாட்டை உருவாக்கியபோது உலகத்திலே வாழ்ந்த யூதன் அவன் கோடீஸ்வரனாக இருந்தாலென்ன? பணக்காரனாக இருந்தாலென்ன? பாட்டாளி தொழிலாளியாக இருந்தாலென்ன? அவன் தன்னாலான பங்களிப்பை உரிய நேரத்தில் செய்த காரணத்தினால்தான் இன்று இஸ்ரேல் என்ற ஒரு நாடு பசுமைப் புரட்சி செய்யும் ஒரு நாடாக மட்டுமல்ல உலக வல்லரசுகளுக்கெல்லாம் அடிபணிய மறுக்கின்ற ஒருநாடாக வல்லமை பொருந்திய நாடாக விளங்குகின்றது.

என் இனிய சொந்தங்களே! இஸ்ரேல் என்ற ஒரு நாடு உருவாகுகின்றபோது உலகெங்கனும் வாழ்ந்த யூத இனம் ஒன்றுபட்டு தன்னாலான நிதியுதவி செய்தது போல நாமும் எமது தாயக விடுதலைப் போராட்டத்திற்கு எம் பங்களிப்பைச் செய்ய வேண்டிய வரலாற்றுக் கட்டாயத்தில் நிற்கின்றோம்.

சுதந்திரம் எமது பிறப்புரிமை. அதைத் தடுக்கவோ அதற்கு ஒத்துழைப்பு வழங்கக் கூடாது என்று கட்டளையிடுவதற்கோ யாருக்கும் உரிமை கிடையாது.

இலங்கைத் தீவிலே நாம் உருவாக்கப்போகின்ற தமிழீழம் தனியே ஈழத் தமிழனுக்காக உருவாகப்போகின்ற தமிழீழம் அல்ல.

அயலிலே இருபது மைல்களுக்கப்பால் இருக்கின்ற நாலரைக்கோடி தமிழர்களுக்குமாக உருவாகப்போகின்ற நாடல்ல.

உலகில் வாழுகின்ற அத்தனை தமிழனுக்குமாக உருவாகப்போகின்ற நாடு.

எங்கெங்கு தமிழன்
நசுக்கப்படுகின்றனோ,
துன்புறுத்தப்படுகின்றானோ
அங்கெல்லாம் ஓங்கிக்
குரல்கொடுக்கின்ற ஒரு நாடாகத்தான்,
அமையப்போகும் தமிழீழம் இருக்கும்.

எனவே என் சொந்தங்களே! ஏக்கம் தவிர்! சோம்பல் முறித்தெறி! உணர்வு பெற்ற மனிதனாக - ஒளி படைத்த கண்கொண்டவனாக விழித்தெழு!

தமிழ்மொழியாம் தாய்மொழி
காப்போம்!
தாயகம் மீட்போம்!



# இது எங்கள் தமிழீழம்!

தீவகம் இராஜலிங்கம்
ஆசிரியர் 'நம்நாடு'



தமிழீழ தாயகம் நாங்கள் செய்வோம் ஒரு
தார்மீகம் தன்னிலே பூக்கள் செய்வோம்
அமிழ்தெனும் தமிழிலே ஆட்சிசெய்வோம் தமிழ்
ஆலயம் என்று சொல்ல வைப்போம்!

செந்நெல்வளரு மிசை கொடுப்போம் சிந்து
சிந்து மிசையினில் களை எடுப்போம்
இன்னல் சுமந்ததெம் மண்ணில்ஓர் மானிடன்
இல்லைப்பசி என்று சொல்ல வைப்போம்!

சாதிசமத்துவ நீதி சொல்வோம் மண்ணில்
பேதத்தின் மானிடர் வீதி கொல்வோம்
கூதியெனும் தமிழ் காட்டித் கொடுத்திடும்
கொள்கை யிலைஎன்று சேதி சொல்வோம்!

ஏழை எளியவர்காறி உமிழ்பவர்
நூறில் ஒருவர்தான் தானும் இல்லை
வாழ்வுவரும் தமிழ் ஈழமா மண்ணிலே
வைகையாய் வந்தெழும் பொது வுடமை!

எங்கள் நிலமது எங்கள் மொழியது
எங்கும் இசையது எங்கள் அறம்
பொங்கும் புயத்தினில் தங்கும் மறவர்கள்
தங்கும் பொழிலது தமிழ் ஈழம்!

# விமர்சனங்கள் பலவிதம்

ஆர். என். லோகேந்திரலிங்கம்
ஆசிரியர் 'உதயன்'

ஒரு கலைப் படைப்பு, ஒரு கட்டுரை, ஒரு கதை, அல்லது கவிதை ஒன்று, ஏன் ஒரு மனிதன்கூட .... இவ்வாறான அனைத்துத் தலைப்புகளும் விமர்சனங்களுக்கு உள்ளாவது தவிர்க்க முடியாதவையாகிவிட்டன. விமர்சனம் என்பது ஒரு பார்வையிலிருந்து வேகமாகப் புறப்படுகின்ற வீச்சு என்று கூறிவிடலாம். எனினும் எதையும் பார்க்காமல், வாசிக்காமல் செய்யப்படுகின்ற விமர்சனங்கள் அதன் நோக்கத்தை எளிதில் புரியச் செய்து விடுகின்றன.

நேசம், பற்று, ஆவல், அக்கறை ஆகியன படைப்பொன்றைப் பற்றியோ, அல்லது தமிழனைப் பற்றியோ, அல்லது தனிமனிதனைப் பற்றியோ வைக்கப்படுகின்ற விமர்சனத்திற்கு ஆரோக்கியமான மருந்தாகி விடுகின்றன. இதற்கு எதிர்மாறாக, பொறாமை, பொய், தனிப்பட்ட காழ்ப்புணர்ச்சிகள் ஆகியவற்றைப் பக்கத்துணைக்கு அழைத்துக்கொண்டு செய்யப்படுகின்ற விமர்சனங்கள் பாதாளத்தில் தள்ளிவிடக் கூடியதானவையாகவும் இருக்கின்றன.

படைப்பாளிகளோடு சேர்த்துப் படைப்புகளை நோக்கும் மனோபாவம் அனேகமானோர்க்கு உள்ளது. ஆற்றாமையினால் சிலர் கூறுவதுண்டு. "படைப்பாளியையும், படைப்பையும் சேர்த்துப் பார்க்கக் கூடாது. படைப்பு வேறு, படைப்பாளி வேறு" என்றெல்லாம் அவர்கள் சத்தமிடுவதுண்டு. இவ்வாறான கோஷங்களுக்குப் பின்னால் ஏதோ 'ஒன்று' மறைந்திருப்பதை வாசகர்கள் உணர்ந்து கொள்ளத் தவறுவதில்லை.

இன்னோர் வகையானவர்களும் எம்மத்தியில் உள்ளார்கள். எதைப்பற்றிய விமர்சனத்தைக் கேட்டாலும் "பரவாயில்லை", "சும்மா பார்க்கலாம்" என ஏதாவது ஒன்றைக் கூறிவிட்டு எழுந்து போய்விடுகின்ற அல்லது மறைந்துபோய் விடுகின்ற தன்மைகொண்டவர்கள். இவ்வாறான போக்குக் கொண்டவர்களின் தன்மைக்கு எது காரணமாக இருக்கும் என்பதை ஆராய்ந்து பார்த்தால் ஒன்றில் போதிய ஆர்வமில்லாமல் இருப்பார்கள்; அல்லது, விமர்சிக்கின்ற பணிக்குத் தேவையான குறைந்த பட்ச அறிவுத்திறன் இல்லாதவர்களாக இருப்பார்கள். இதிலிருந்து நாம் உணரக்கூடியது என்னவென்றால், ஒரு கலைப் படைப்பையோ அன்றி கட்டுரைப் பாங்கான விடயங்களையோ நாம் விமர்சிப்பதற்கு ஓரளவு அறிவுத் திறனும் இருக்க வேண்டியது அவசியம் என்பதே.

விமர்சனத்துறை என்பது சாதாரண-மானது அல்ல. இதை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும். விஞ்ஞானத்தைப் போல, அல்லது புவியியல் சாஸ்திரத்தைப்போல விமர்சனத் துறையும் நாம் ஆழ்ந்து கற்றுக் கொள்ள வேண்டிய விடயங்களைக் கொண்டதாகும். மேல்நாட்டுப் பல்கலைக் கழகங்களில் விமர்சனத்துறையை ஒரு பாடமாகவே

கற்பிக்கின்றார்கள். ஒரு சிறந்த விமர்சகர் ஆவதற்குத் தேவையான அறிவுத்திறன், பக்குவம், நேர்மைமிக்க சுபாவம் ஆகியவற்றைப் போதிக்கும் வகையில் பல்கலைக் கழகப் பாடத் திட்டங்கள் அமைகின்றன.

எழுத்து வடிவங்களைப் படிப்பவர்களில் பலர் ரசிகத்தன்மை கொண்டவர்களாக இருக்கின்றார்கள். இவர்களது நோக்கமெல்லாம் கலையார்வம் மிக்க தமது பசிக்குத் தீனி போட வேண்டுமென்பதே. பிறருக்கு விமர்சனத்தைத் தெரிவிப்பதற்கு இவ்வாறானவர்கள் எண்ணித் துணிவதில்லை. ஆனால் இன்னோர் வகையானவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் மற்றவர் படைப்புகளையும், படைப்பாளிகளையும் 'புசிப்பதற்காகவே' படிக்கின்றார்கள். இவர்களது வாசிப்பு 'நுனிப்புல் மேயும்" தன்மையைக் கொண்டதாகவும் சில வேளைகளில் காணப்படுகின்றது. இவ்வாறானவர்கள் இறுதியில் தாங்கள் பசியாறுவதில்லை. ஆனால் அவ்வாறு ஆகிவிட்டதாக எண்ணிக் கொள்வதுண்டு. அத்துடன், தம்மை ஒத்த சிலரோடு பேசிப்பேசியே திருப்திப்படுவார்கள்.

ஒரு படைப்பாளியின் ஆக்கம் அல்லது இலக்கியம் ஏற்படுத்தும் நம்பிக்கையை அவர் தன்மீதும் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். இவ்வாறான எண்ணம் கொண்டவர்களினால் "புசிக்கும் தன்மை" கொண்ட விமர்சகர்கள் வீழ்த்தப்பட்டு விடுவார்கள். அவர்கள் நோக்கம் நிறைவேறாமல் போகவே அவர்களது செயலாக்கம் இடைநிறுத்தம் செய்யப்பட்டுவிடும்.

எம்மத்தியில் இன்னொரு வகையான-வர்களும் உள்ளனர். அவர்கள் எதை எதிர்பார்க்கிறார்களெனில் தமது படைப்புகள், தமது ஆக்கங்கள் ஆகியவற்றை "உயர்ந்தது", "சிறந்தது", "தரமானது" என்று எழுதுகின்ற அல்லது பேசுகின்றவர்களையே சிறந்த விமர்சகர் என்று புகழாரம் சூட்டுவதில் கவனமாக இருப்பார்கள். தம் படைப்புகளின் உண்மையான விமர்சனங்களை இவர்கள் ஏற்றுக்கொள்வதில்லை. குறைகள் சுட்டிக்காட்டப்பட்டால், சுட்டிக்காட்டும் விமர்சகர் அவர்களது எதிரியாகின்றார். இது ஆரோக்கியமான இலக்கிய வளர்ச்சி அல்ல.

சில வாசகர்கள் ஒரு படைப்பினை வாசிப்பதிலும் பார்க்க அது தொடர்பாக எழுதப்படும் விமர்சனங்களை ஆர்வத்தோடு படிப்பார்கள். அதுவும் தமக்குப் பிடித்தமான விமர்சகர்கள் எழுதுகின்றவைகளை அவர்கள் தேடித்தேடி வாசிப்பார்கள். அவற்றைப் படித்துவிட்டே அவர்கள் சிலவேளை குறிப்பிட்ட படைப்பை வாசிப்பதுமுண்டு.

கர்நாடக இசை தொடர்பாக தமிழ்நாட்டில் ஒரு எதிர்பார்ப்பு இருந்து வந்தது. அங்குள்ள இசைக்கலைஞர்கள் தங்கள் கச்சேரிக்கு இசைமேதை சுப்புடு அவர்கள் வருகின்றாரா என்பதை ஆவலோடு எதிர்பார்ப்பார்கள். ஏனென்றால் சுப்புடுவினுடைய விமர்சனத்தினால் கிடைக்கின்ற அங்கீகாரம் தமது இசை வளத்துக்குக் கிடைக்கின்ற ஒரு பாராட்டு என அவர்கள் எண்ணிக்கொள்வதே.

இதைப் போலவே எமது தமிழிலக்கிய உலகிலும், சில விமர்சகப்

பெருந்தகைகளின் பார்வை தமது படைப்புகள் மீது படவேண்டும் என்று எமது படைப்பாளிகளில் பலரும் எதிர்பார்ப்பதுண்டு. ஒரு நூலை வெளியிடுகின்றபோது அதற்கான முன்னுரையைப் பெறும் பழக்கம் எம்மிடையேயுண்டு. நாம் விரும்பும் விமர்சகர் முன்னுரையை எழுதுவதற்குச் சம்மதித்து விட்டால் அது தமது படைப்புக்குக் கிடைத்த அங்கீகாரமென படைப்பாளி நினைத்துவிடலாம். அத்துடன், படைப்புகள் தொடர்பான விமர்சனத்தையே குறிப்பிட்ட விமர்சகன் தனது முன்னுரையில் உள்ளடக்கி விடுவதுண்டு.

இன்னொரு வகையானவர்களும் எம்மத்தியிலுள்ளனர். ஒரு ஆக்கம், அல்லது இலக்கியம், அல்லது மேடைநிகழ்ச்சி தொடர்பான விமர்சனத்தை எழுதிவிடுவார்கள். எனினும் தமது சொந்தப் பெயரையோ, எல்லோருக்கும் தெரிந்த புனையெரையோ பயன்படுத்துவ தில்லை. இன்னொருவர் பெயருக்குள் மறைந்திருந்து வேடிக்கை பார்ப்பார்கள். (தங்களது விடயங்களைத் தாங்களே ஆகா, ஓகோ என்று பாராட்டி எழுதிப் பத்திரிகைகளிடம் கொடுத்துப் பிரசுரிக்கச் செய்து, அதனால் தங்களது முதுகுகளைத் தாங்களே சொறியும் பிரமுகர்களும் இருக்கின்றனர்). இவ்வாறான விமர்சனங்களில் பிரபல்யமானவர்களின் பெயர்களையும் சேர்த்துக் கொள்வர். இவர்கள் "கோழைகள் அல்லது பேடிகள்". இவர்களின் விமர்சனங்களினால் பல விபரீதங்கள்கூட ஏற்படுவதுண்டு.

மொத்தத்தில் விமர்சனங்கள் பலவிதம். விஞ்ஞாபூர்வமான விமர்சனத்தை எப்படி வைப்பது என்பதைத் தெரிந்துகொள்ளாத வகையில் எம்மவர்கள் விமர்சனத்துறையில் முத்திரை பதிக்க முடியாது. உண்மையான விமர்சனத்தை எழுதுபவர்களும், அதை ஏற்றுக் கொள்பவர்களும் எமது இலக்கியப் பரப்பில் தோன்ற வேண்டும். அப்போதுதான் ஆரோக்கியமான இலக்கிய வளர்ச்சியுடன், தரமான படைப்பாளிகளும், படைப்புகளும் எம்மிடத்தில் தோன்றமுடியும்.



## மனிதா - நீ....

எதை எதையோ
சாதிக்க நினைக்கின்றாய்
சந்தோஷமே......
சந்திரனில்
மனிதனை
வாழவைக்க
எத்தனை கோடிகளை
செலவு செய்கிறாய்?
இந்த பூமி கிரகத்தில்
தினமும் பசியால்
உயிர்விடும்
மனிதனை
மறந்தே போகிறாய்....
மேலும்
ஒருவேளை - நீ
உன் முயற்சியில்
வெற்றி கண்டால்!.....
தயவு செய்து
துப்பாக்கிகளையும்
வெடிகுண்டுகளையும்
அங்கு கொண்டு
சென்றுவிடாதே......

~ எஸ். லிங்கேஸ்

# வரலாற்றுப் பாதையில் தமிழிசைச் சுவடுகள்

தமிழினி

"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்து முன்தோன்றிய மூத்த தமிழ்" என்று தமிழ் மொழியைச் சொன்னார்கள். ஆனால், மனிதன் மொழியைத் தெரிந்து கொள்வதற்கு முன்னால், அவன் புரிந்து கொண்ட ஓசை, இசை, காற்று, வானம், தீ, கடல், அலை, மரஞ்செடிகள் திசை எங்கினும் ஓசை, ஓசை ஓசைகள். ஒலியிலே முட்டிச் செல்லும் ஓசைகளா இவை. இல்லை. மெல்ல மெல்ல இதயத்தை ஊடறுத்து உணர்வுகளைக் கிளர்ந்து கிளர்ந்து பாட்டாய், பண்ணாய், பல வடிவாய் பரிணமித்து இசை என்றாகி விட்ட இன்ப சாகரம் அல்லவா இவை!

மொழியைப் புரிந்து கொள்ளும் பருவமற்ற குழந்தை கூட இசைகேட்டு என்ன இலாவகமாய்த் தூங்கி விடுகின்றது. மகுடிக்கு மண்டியிடும் பாம்பைப் போல, அந்த சப்த ஸ்வரங்களுக்கு, எங்கள் சப்த நாடிகள் அத்தனையும் சரணடைந்து போகின்றதே. இந்த விந்தை எந்த விஞ்ஞானத்தில் இருக்கின்றது?

இத்தகு இசையின் அடிச்சுவடுகளை, வரலாற்று நோக்கில் நாம் சற்று ஆராய்ந்து பார்ப்போம்.

பண்பட்ட எல்லா இனங்களும் தத் தம் மரபுகளுக்கேற்ப அமைந்த இசையினை தமக்கெனக் கொண்டுள்ளன. காடுவாழ் வேடர்களும், நாடோடிகளும் கூட, தமக்கென தனி இசை மரபுகளைக் கொண்டுள்ளனர்.

பழமைச் சிறப்பு மிக்க எம் இனத்தின் இசை மரபும் சாலப் பழமை உடையதாகும். தமிழில் 'இசை' என்பதன் பொருள் 'அனைத்துயிர்களையும் வசப்படுத்துவது' என்பதாகும். பண்டைத் தமிழர் மிடற்றிசை எனப்படும் குரலிசையிலும், கருவி இசையிலும் மேம்பட்டிருந்தனர் என்பதற்கு வரலாற்று நூல்கள் சான்று பகர்கின்றன.

தொல்காப்பியம் எனப்படும் பழம்பெரும் இலக்கண நூல் பின்வரும் நூற்பாவால் யாழ்பற்றிச் சொல்கின்றது:

"அள பிறந்துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உள வென மொழிப இசையொடு சிவணிய
யாழின் மறைய என் மனார் புலவர்"

பண்டைத் தமிழரின் மிகப் பிரதான இசைக் கருவியாக 'யாழ்' விளங்கியதை இதன் மூலம் உணரலாம்.

சங்க இலக்கியங்களில் இசைக் கருவிகள், பண்கள், இசைவாணர்கள் பற்றிய எண்ணற்ற

செய்திகள் இடம் பெறுகின்றன. அகநானூறு என்ற இலக்கியத்தில் அழகான ஒரு பாடல் இடம் பெறுகிறது.

"ஒலியில் வார் மயிர் ஊரினள் கொடிச்சி
பெருவரை மருங்கில் குறிஞ்சி பாடக்
குரலும் கொள்ளாது நிலையிலும் பெயரது
படா அப் பைங்கண் பாடுபெற்று ஒய்யென
மறம் புகல் மழகளிறு உறங்கும்"

குறப் பெண் ஒருத்தி பாடிய குறிஞ்சிப் பண்ணால், மலைச் சாரலில் உள்ள தினைப்புனத்தில் யானையொன்று தினையுண்ண மறந்து நின்றதாம்.

"வில் யாழ் இசைக்கும் விரல் எறி குறிஞ்சி" என்று பெரும் பாணாற்றுப்படை என்ற இலக்கியம் கூறுவதிலிருந்து, வில் யாழில் குறிஞ்சிப்பண் இசைக்கப்பட்டது என்பது தெரிகின்றது.

பாணர்கள் எனப்படும் இசைக்கலைஞர்கள் பற்றிய செய்திகளையும் இந்த இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகின்றது. "பண்" எனப்படும் இசையைப் பாடியவர்கள் அக்காலத்தில் பாணர்கள் எனப்பட்டனர். மன்னர்களும், வள்ளல்களும் இந்த பாணர்களைப் பாராட்டி மகிழ்ந் திருக்கின்றனர். வள்ளல்களிடம் பரிசு பெற்றுவரும் பாணர்கள், வேறு பாணர்களையும் அந்த வள்ளல்களை நாடிச் செல்லுமாறு ஆற்றுப்படுத்தினர். இவ்வாறு ஆற்றுப்படுத்துவதாக அமைந்த இலக்கியங்களே ஆற்றுப்படை இலக்கியங்கள். இந்த இலக்கியங்கள் இவர்கள் வாழ்க்கை முறையை விளக்கமாகக் கூறுகின்றன.

சங்ககால இசைக் கருவிகளில் தலைமையானது 'யாழ்' ஆகும். இவை சீறி யாழ், பேரி யாழ் என இரு வகைப்படும். 21 நரம்புகளைக் கொண்டது பேரி யாழ் என பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது. இவற்றை விடவும் முழவு, ஆகுளி, பாண்டில், கோடு, தூம்பு, குழல், தட்டை, எல்லரி, பதலை, போன்ற கருவிகளும் இருந்ததாக மலைபடுகடாம் என்ற இலக்கியம் கூறுகின்றது.

அக்காலத்தில் முதுநாரை, முதுகுருகு, பெருநாரை, பெருங்குருகு, பஞ்ச பாரதீயம் முதலிய இசை நூல்கள் இருந்ததாகவும், அடியார்க்கு நல்லார் என்ற உரை ஆசிரியர் குறிப்பிடுகின்றார். 'இசை நுணுக்கம்' என்ற நூல் பாண்டிய இளவரசன் ஒருவனாலும், 'குலோத்துங்கன் இசைநூல்' என ஒன்று குலோத்துங்க சோழனாலும் எழுதப்பட்டதெனக் கூறுவர். விபுலானந்தரின் யாழ் நூலும், ஆபிரகாம் பண்டிதரின் சங்கீத ரத்னாகரமும் குறிப்பிடத்தக்க இசை நூல்களாகும்.

சிலப்பதிகாரம் என்ற இலக்கியத்தை தமிழ்க் கலைக்களஞ்சியம் என்றால் மிகையாகாது. அதில் வரும் அரங்கேறு காதை தமிழிசையின் பல்வேறு சிறப்புக்களை அறியத்தருகின்றது. இசையாசிரியன், யாழாசிரியன், குழலாசிரியன் ஆகியோரது இலக்கணங்கள் அருமையாக இந்நூலில் கூறப்பட்டுள்ளது. இன்று

சப்த ஸ்வரங்கள் எனப்படுகின்ற ஏழிசையை குரல், துத்தம், கைக்கிளை, இளி, உழை, விளரி, தாரம் என அக்காலத்தில் குறிப்பிட்டனர். இவற்றிலிருந்து 103 பண்கள் தோன்றின என்றும், 12,000 ஆதியிசை இருந்ததாகவும் அடியார்க்கு நல்லார் எழுதியிருக்கின்றார்.

இன்று 'ஆலாபனை' என்று அழைக்கப்படுவதை பண்டைய காலத்தில் "ஆளத்தி' என்றழைத்தனர். மகரவொற்றுடன் கூடிய குற்றெழுத்துக்களாலும், தென்னா தெனா போன்ற அசைகளாலும் ஆளத்தி செய்யப்பட்டது. சுருதி; அலகு, மாத்திரை எனப்பட்டது. ஸ்வரம்; நரம்பு எனப்பட்டது. ஸ்வர வரிசைகள்; கோவை எனப்பட்டது. ஆயப்பாலை, சதுரப்பாலை, வட்டப்பாலை, திரிகோணப்பாலை என கோவை நால்வகைப்பட்டதாக இருந்தது.

பல்லவர் காலத்தில் (கி.பி 600-900) இசைக்கலை மிக நல்ல வளர்ச்சி கண்டிருந்தது. முதலாம் மகேந்திரன், இராசசிம்மன் போன்ற மன்னர்கள் இசை அறிஞர்களாக விளங்கினர். ஆழ்வார்களும், நாயன்மார்களும் பண்ணிசைப்புலவர்களாகத் திகழ்ந்தனர். இவர்களது பக்தி இயக்கத்தால் தமிழிசை வளர்ச்சியின் உயர்நிலை எய்தியது. மகேந்திர பல்லவன் 'சங்கீரணம்' என்ற தாளத்தைக் கண்டறிந்ததால் அவன் "சங்கீரண சாதி" என்றழைக்கப்பட்டான்.

சோழர் காலத்து நூல்களான கம்பராமாயணத்திலும், பெரியபுராணத்திலும் இசை பற்றி வரும் செய்திகள் பலவாகும். ஆனாய நாயனார் புராணம் எனும் நூல் இசைத் தமிழ்க் கருவூலமாக விளங்குகின்றது. ஆனாய நாயனார் இசை கேட்டு மரங்களும், மலையருவிகளும், கடலும், இடியும், முகிலும் கூட அசைவற்று நின்றன என்று சேக்கிழார் கூறுகின்றார். சீவக சிந்தாமணியிலும் இசை பற்றிய சிறப்புக் குறிப்புகள் காணப்படுகின்றன. இசை பாடுகின்றபோது ஏற்படக் கூடாத குற்றங்களாக: புருவம் உயர்த்தல், கண் ஆடல், மிடறு வீங்கல், பல் தோன்றல் என்பவற்றைச் சிந்தாமணி குறிப்பிடுகின்றது.

பிற்காலத்தில் சோழரும், பாண்டியரும் வீழ்ச்சியுற, நாடு அயலவர்க்கு அடிமையாயிற்று. நாயக்க மன்னர் இடை புகுந்து ஆட்சியைக் கைப்பற்றினர். தொடர்ந்து இசை வாணர்கள் பேணுவாரற்றனர். அத்தோடு தெலுங்கிசை மெல்ல நுழைந்தது. இந்நிலையிலும் குற்றாலக் குறவஞ்சி, முக்கூடற் பள்ளு, திருப்புகழ் போன்ற இசை நயம் கொண்ட தமிழ் நூல்கள் எழுந்தன.

நாயக்க மன்னர் காலத்தில் நுழைந்த கீர்த்தனைகளைப் பின்பற்றித் தமிழிலும் பல பாடல்கள் எழுந்தன. சீர்காழி அருணாசலக் கவிராயரின் இராம நாடக கீர்த்தனை, கோபால கிருஷ்ண பாரதியாரின் நந்தனார் கீர்த்தனையும் புகழ் மிக்கனவாகும்.

இந்த நூற்றாண்டின் இசை வளர்ச்சியின் முக்கிய நிகழ்வாக தமிழ் இசைச்சங்கம் தோற்றம் பெற்றதைக் கூறலாம். 1940ஆம் ஆண்டு அண்ணாமலைச் செட்டியார் அவர்களின் பெரு முயற்சியால் இச் சங்கம் உருவானது. அன்று உருவான இச்சங்கம் இன்றுவரை இசை ஆராய்ச்சிகள், இசை நிகழ்ச்சிகள் என்பவற்றை ஆண்டு தோறும் நடத்தி வருகின்றது. இன்று வழங்கும் கர்நாடகஇசை, பெயர்மாற்றம் பெற்ற தமிழிசையென இச்சங்கத்தினர் கண்டறிந்துள்ளனர்.

இன்றைய தமிழிசை வாணர்களாக மதுரை சோமசுந்தரம், நாதஸ்வர வேந்தர் இராசரத்தினம், காரைக் குறிச்சி அருணாசலம், வேதவாரணியம் வேத மூர்த்தி, வீரசாமிப்பிள்ளை, குளக்கரைப் பிச்சையா, நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன், சேக்கு சின்ன மௌலானா சாகேப் போன்றோரைக் குறிப்பிடலாம்.

இன்று நாடக மேடையும், இசை அரங்கங்களும், திரைப்படமும் இசைக்கலையை வளர்த்து வருகின்றன. இன்று மெல்லிசை மேலோங்கி, செல்வாக்குப்பெற்று வருகின்றது. மெல்லிசையிலும் இனிமையுண்டு, எனினும் முறையான தமிழிசையை அழியாமல் பேணுவது நம் எல்லோரினதும் கடமையாகும்.



# நாட்டியம்

சகுந்தலா மோகன்
ஆசிரியர்
நிர்த்தியா நாட்டிய மன்றம்

பாரத கலாசாரத்தின் சூடாமணியாக ஒளி வீசுவது நாட்டியக் கலை. இது காலத் தால் மூத்ததும், இளமை குன்றாத சிறப்புத் தன்மையும வாய்ந்தது. சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளாக நம் நாடெங்கும் பரவிக்கிடக்கும் இந்தப் பழம்பெரும் கலைக்கு பரதர் என்னும் முனிவர் இலக்கணம் வகுத்துள்ளார். நாட்டியம் என்பதற்கு 'நட்' சமஸ்கிருத மூலச் சொல்லாகும். 'நட்' என்றால் சிலர் நடனம் என்றும், இன்னும் சிலர் 'நாடகம்' என்றும் பொருள் கொள்வர். இந்த மூலச் சொல் இவ்விரு கலைகளையும் குறிக்கும். ஏனென்றால் பண்டைய பாரதத்தின் நாடகம், நடனத்தை ஒரு அங்கமாகக் கொண்டிருந்தது.

அபிநயம் என்பது கதையையும், கருத்துக்களையும், பாத்திரங்களின் குணசித்திரங்களையும், கதையில் வரும் சூழ்நிலைகளையும் ரசிகர்கள் புரிந்து கொண்டு மகிழுமாறு செய்வதே நாட்டியத்தின் குறிக்கோள். ரசிகர்கள் மகிழ வேண்டுமென்றால், அவர்கள் புரிந்து கொள்ள வேண்டும். அவர்கள் புரிந்து கொள்ளவேண்டுமென்றால் கருத்துக்களும் உணர்ச்சிகளும் சரியான முறையில் வெளிப்படுத்தப்பட வேண்டும். கருத்துக்களை வெளிப்படுத்தும் கலைதான் அபிநயம். இது நான்கு பிரிவுகளைக் கொண்டது.

1. ஆங்கிக அபிநயம்
2. வாசிக அபிநயம்
3. ஆஹார்ய அபிநயம்
4. சாத்விக அபிநயம்

ஆங்கிக அபிநயம்: உடலின் உறுப்புக்களால் வெளிப்படுத்துவது.
வாசிக அபிநயம்: சொற்களால் உணர்த்துவது.
ஆஹார்ய அபிநயம்: உடை, ஒப்பனை, காட்சி அமைப்பு ஆகிய புறப்பொருள்களால் உணர்த்துவது.
சாத்விக அபிநயம்: அகத்தின் அமைதியையும், கொந்தளிப்புகளையும் முகத்தாலும், மெய் சிலிர்த்தல் போன்ற உடலில் காணப்படும் உள்ளுணர்வின் பிரதி பலிப்புகளாலும் புலப்படுத்துவது.

பரதரின் நாட்டியம் இந்த நான்கு அபிநயங்களையும் கொண்டது.

## ஸ்தானம்

ஸ்தானம் என்பது அங்கங்கள் அசைவற்று ஒரு நிலையிலிருப்பது என்பதாகும். அடவுகள் ஆடப்படும்போது நின்ற நிலை, பாதி நிலை, அமர்ந்த நிலை, முழுமையாக அமர்ந்த நிலை போன்ற நிலைகளில் ஆடப்படுகின்றன அல்லவா? ஆகவே இவற்றிற்கும் ஸ்தானங்களே ஆதாரமாகின்றன.

## நடன வகைகள்

பாரதத்தின் சரித்திரம் ஒரு உயர்ந்த கலாசாரத்தை பிரதி பலிக்கிறது. இதை ஆழ்ந்து பார்க்கையில் பல வேறுபட்ட பண்பாடுகள், மொழிகள், பழக்க வழக்கங்கள், கலைகள்

போன்ற வேற்றுமைகளிலும் ஒற்றுமையைக் காணலாம். நம் நாட்டில், சரி அரங்க கலைகளான இசை, நடனம், நாடகம் ஆகியவை பிரத்யேகமான இடத்தைப் பெறுகின்றன. கீழே ஒருசில நடனவகைகளின் பெயர்களைக் காணலாம்.

பரதநாட்டியம்
மோகினி ஆட்டம்
ஓரிஸி (ஒடிஸி)
கதக்
மணிபுரி
கதகளி
குச்சுபுடி

## அடவு

அடவு என்பது ஆடலின் ஒரு பகுதியைக் குறிக்கும். இது நடனத்தின் ஓர் அளவை என்றுகூடச் சொல்லலாம். அடவுகள் ஆடும்போதும் பயிற்சி பெறும்போதும் சில பொதுவிதிகளை மனதில் கொள்ளுதல் அவசியம்.

1. குருமுகமாக அடவுகளைப் பயில வேண்டும்.
2. பயிலும் போது ஒரு நிலைக் கண்ணாடி முன் பயின்றால் தன் தவறுகளைத் தானே திருத்திக் கொள்ள உதவியாக இருக்கும்
3. அடவுகளை அங்க சுத்தத்தோடு மூன்று காலமேனும் பயிற்சி செய்ய வேண்டும்.
4. அடவுகளைப் பயிலாமல் அலாரிப்பு, ஜதீஸ்வரம் என்று கற்றுக் கொண்டே போனால் அத்திவாரமற்ற வீடு போல தளர்ந்துவிடும்.
5. பொறுமை மிக மிக அவசியம். ஆசிரியரிடம் பயிலும் போது 'தனக்கு பொறுமை இல்லை திரும்ப திரும்ப இதை ஆடுவதற்கு' என்று சொல்லக்கூடாது. இவ்வாறான எண்ணம் அத்திவாரமில்லாத வீட்டுக்குச் சமனாகும்.

"யதோ ஹஸ்தஸ் ததோ திருஷ்டி
யதோ திருஷ்டிஸ் ததோ மனஹ
யதோ மனஸ் ததோ பாவாஹ
யதோ பாவஹஸ் ததோ ரஸஹ

அதாவது,

கை வழி நயனம் செல்ல
கண்விழி மனம் செல்ல
மனம் வழி உணர்ச்சி செல்ல
அதனின்று சுவை பிறக்கும்

●●●●●●



# பரடைஸ் அச்சகம்

உங்களுக்குத் தேவையான
அனைத்து அச்சடிப்புத்
தேவைகளுக்கும் நீங்கள்
நாடவேண்டிய ஒரே இடம்

குறைந்த விலை
நிறைந்த தரம்

வாழ்த்துக்கள்!
வாழ்த்துக்கள்!!
வாழ்த்துக்கள்!!!

## Paradise Print Plus

1231 Ellesmere Rd., Unit. 201
Scarborough, ON
Tel: 416-288-6449
Fax: 416-288-0595

# நலிந்து வரும் நாடக உத்திகள்

'தமிழன் வழிகாட்டி' செந்தி

நாடகம் என்பது நிகழ்த்திக் காட்டப்படுவது. அது நிகழ்த்திக் காட்டப்படும் இடமே அரங்கு. அரங்கின்றி நாடகம் இல்லை. *Theatre* ஐ அரங்கம் எனக் கூறுவார்கள். கிரேக்க மொழிச் சொல்லான தியேட்டர் என்றால் பார்த்தல். பார்க்குமிடம் என்று சொல்லப்படுகிறது. இன்று தியேட்டருக்குள் நாட்டியநாடகம், நாட்டுக்கூத்து, கதாகாலட்சேபம், நாடகம் போன்ற பல பிரிவுகள் அடங்குகின்றன. எனவே நாடகம் பண்டு தொட்டு இருந்துவரும் நிரந்தரமானதொன்றல்ல. காலப்போக்கில் தமிழரிடம் வந்து சேர்ந்த ஓர் கலைவடிவமே.

நாடகம் என்ற சொல் தமிழ்ச் சொல் அல்ல. 'நட்' என்பது, போலச் செய்தல் என சமஸ்கிருத மொழியில் பொருள்படும். தமிழர்களிடையே நாடகம் என்பது கூத்து என்றே அழைக்கப்பட்டு வந்திருக்கின்றது. சிவபுராணத்தில் "தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே" என மாணிக்கவாசகர் சிவபிரானைப் பாடுவது இங்கு நினைவு கூரத்தக்கது. ஆனால் சங்கமருவிய கால இலக்கியங்களில் நாடகம் என்ற சொல்லே வழக்கில் இருந்து வந்துள்ளது.

கல்லாதோர் மத்தியில் கூத்து என்ற சொல்லும் படித்தோர் மத்தியில் நாடகம் என்ற சொல்லும் நடைமுறையிலிருந்து வந்திருக்கின்றது. ஆடல், பாடலை மையமாகக் கொண்ட கூத்துக்கள் யாழ்ப்பாணத்திலும், மட்டக்களப்பிலும் வடமோடி, தென்மோடி கூத்துக்கள் எனவும், மன்னாரில் வடபாங்கு, தென்பாங்கு வாசாப்புக் கூத்துக்கள் எனவும், சிலாபத்தில் வடமோடிக் கூத்தெனவும், முல்லைத்தீவில் தென்மோடிக் கூத்துக்களும் நடைமுறையில் இருந்து வந்துள்ளன. இவை சமய உணர்வு, சாதியமைப்பு, நிலமானிய அமைப்பு போன்றவற்றினால் வளம் பெற்றன. கல்வி, அனுபவம் போன்றவற்றால் மேம்பட்ட எமது மக்களிற்கு மேல்நாட்டு நாடகக் கவர்ச்சி ஏற்பட்டது.

இதன் சான்றாக யாழ்ப்பாணத்தில் கொட்டடியில் கொட்டடி கறுத்தார் என்பவரும் யாழ். மனோகரா தியேட்டர் வளவில் புத்துவாட்டி சின்னத்தம்பி என்பவரும், வின்ஷர் தியேட்டர் வளவில் துரைராசா என்பவரும் 1910 காலப்பகுதிகளில் தமிழ் நாட்டு நாடக சபைகளை அழைத்து நாடகம் நடத்தி உள்ளனர். இவ்விடங்கள் பிற்காலத்தில் சினிமா தியேட்டர்களாக மாறியதிலிருந்து நாடக வளர்ச்சியைச் சினிமா எவ்வளவு பாதித்துள்ளது என்பதையும் காண முடிகிறது.

சினிமா வளர்ச்சியால் நடிகர்களின் நடிப்பின் முக்கியத்துவம் மேடையிலிருந்து போய், காட்சிகள் பிரதான இடத்தை பெற்றன.

இத்தோடு நிஜமான இசைக்கருவிகளால் பின்னணி இசை வழங்கிய நிலையும் மாறியுள்ளதும் இங்கு கவனிக்கத்தக்கது. புறஜக்டர்கள் மூலம் பின்னணி காட்சிகளை ஆக்குதல், நாடக மேடையின் பின்புறத்தில் நாடகத்திற்கு முன் எழுத்துக்களில் நாடக நடிகர்களின் பெயரை விழுத்துதல் போன்ற சினிமா உத்திகளை கையாண்டு வருகின்றனர்.

நாடகம் பெற்ற குழந்தைதான் சினிமா. பழையன கழிந்து புதியன புகுதலாக இருக்கலாம். ஆனால் நாடகத்தில் எப்பொழுதும் தனித்துவம் பேணப்பட வேண்டும். நாடகமே உலகம். நாளை நடக்கின்ற நாடகங்களை நல்லவையாக்குவோம்.



# அவதியுறும் அகதிகள்

~ சிவா சின்னத்தம்பி

நாமிருக்கும் நிலமைதனை நாமறிவோம்
நம் மண்ணிருக்கும் நிலமைதனை யாரறிவார்
காரிருக்கும் கல்வீடிருக்கும் கனடாவில்
கையில் போன் இருக்கும் கிறடிட்காட் இருக்கும்
கொழும்புவரை போய்வர பாஸ்போட் இருக்கும்
வாய் நிறையக் கம் இருக்கும்
வாயார உண்பதற்கு வழி இருக்கும்
வீடுகளில் ஆப்பிள் நிறைந்திருக்கும்
வீணாகி அவை வீசி எறிந்திருப்பம்
கேக் கூட கசப்பாகி காபேச்சுகள் உம் போயிருக்கும்
காலம் கடந்த உணவுகளாய்
காக்காக்களும் கரைந்துண்ணாக் காரணத்தால்
கனடாவில் ஏராளம் உணவுவகை என்றென்றும்
அநியாயமாய் போயிருக்கும் அத்தோடு
வாராந்தப் பத்திரிகை தினம் ஒன்று வந்திருக்கும்
வீரகேசரியையும் மிஞ்சிவிட்ட வடிவிருக்கும்
ஒசியிலும் பார்ப்பதற்கு ஏராளம் ஒளிவடிவில் வந்திருக்கும்
ஒரு நாள் பிந்தினால் அவ்வளவும் றீசைக்கிள் உம் போயிருக்கும்
எழுந்தமானச் செய்தி அதில் எவ்வளவோ வந்திருக்கும்
எம் மண்ணில் பிரச்சனை உள்ளவரை
இவை வாழ்வும் உச்சமுற்றிருக்கும்

வானொலியும் விண்ணலையில் விளம்பரங்கள் தந்திசைக்கும்
வார்த்தைக்கு வார்த்தை வக்கரிப்பும் நிறைந்திருக்கும்
ஆத்தையுமே இவைகளை நம்பிவிட்டு அடிபாடும் பிடித்திருக்கும்
எங்க சூத்தை என்ன வென்று எல்லோருக்கும் தெரிந்திருக்கும்

ஆனால நம் தாய் இருக்கும் தேசமதில் பாய் இருக்கும்
அதுவும் கொஞ்சம் கிளிந்திருக்கும்- அதிலும்
படுத்து எழுந்திருக்க முடியாத நிலை இருக்கும்
சேயிருக்கும்- சேயையும் தாய்சென்று
பார்க்க முடியாத சூழ் நிலை இருக்கும்

வாயும் தன் வேலையை இழந்திருக்கும்
வாயாரச் சாப்பிட்டே கன நாளிருக்கும்
நோய் இருக்கும் நோய் தீர்க்க
நல் மருந்து வகை இல்லாத நிலை இருக்கும்
நாய் இங்கிருக்கும் நிலமையிலும் அங்கே
நம்ம சனம் மிக மோசம் உற்றிருக்கும்



போர் நடக்கும் புனித மண்ணில்
பாமர மக்கள் புரிந்து கொள்ள முடியாத நிலை இருக்கும்
எவர் தலைக்கும் ஷெல் அடி விழுமென்ற பயமிருக்கும்
அகதிகளாய் ஊர் சனங்களெல்லாம்
ஆங்காங்கு அவதி உற்றிருக்கும்- இவர்கள்
போய்வரும் இடங்களெல்லாம்
பொருள்களுக்குத் தட்டுப் பாடிருக்கும்
பாதைகளும் பல இருக்கும்
பட்டாளம் அதை மறித்துப் படுத்திருக்கும்
ஓர்வேளை உணவுண்ண ஒருவாரம் பசியிருக்கும்
உயிரோடு உடல் ஊசலாடி கொண்டிருக்கும்
ஊரில் இந் நிலமையினை உணர்ந்துள்ளவர்கள் - இவ்
உண்மையில் எத்தனை பேரிருக்கும்

திருமலையில் திருத்தலம் இருக்கும் அதுகூட இந்நேரம்
தமிழகதிகள் முகாமாய் இருக்கும்- சிவசிவா
சிவனென்ன செல்வச் சந்நிதி முருகனுமே
சேர்ந்தகதி முகாம்களில்தான் வீற்றிருக்கும்
அந்தோனி சென் பீற்றர்ஸ் தேவாலயங்கள்
அனைவருக்கும் தெரிந்திருக்கும்
இவை கூட இன்றுடைந்து வீழ்ந்திருக்கும் அவலநிலை
உங்களுக்கும் தெரிந்திருக்கும்
அதனுள்ளே தஞ்சம் புகுந்திருந்த
சின்னஞ் சிறுசுகளும் செத்து மடிந்திருக்கும் செய்தி
செந்தமிழர் உங்கள் காதுகளில் வீழ்ந்திருக்கும்- அது
பெத்ததுகள் பிதாமாதா உற்றதுகள் மண்டையிலே
பெருங்குண்டு போட்டது தப்பில்லை என்று
தங்கச்சி சொன்னதுவும் நினைவிருக்கும்
மருத்துவமனை அறியாத மண்ணுயிர்கள் எங்கிருக்கும்
மானிப்பாய் மருத்துவ மனைக்கும் குண்டடித்துத் தகர்த்திருக்கும்
கொடூரச் செய்தி இங்கும் கிடைத்திருக்கும்

உடுத்திருக்கும் உடுபுடவையுடன்
உணர் விழந்த நிலையினிலே
உள்ளங்கள் நொந்து புண்ணாய்
ஊர் மாறிச் செல்லும் உள்ளூர் அகதிகளாய்
படுத்திருக்கும் பாட்டியும் பச்சிளங் குழந்தையும்
கொதித்திருக்கும் சுடு மணலிலே
கால்புதைத்து கடும் வெய்யிலிலே தலை நனைத்து
தாகத்தின் உச்சத்தில்
தள்ளாடித் தள்ளாடி தமிழுறவினர்கள் அகதிகளாய்
தம் சொந்த மண்ணில் திண்டாடிக் கொண்டிருக்கும்- செந்
தமிழர்களாய் இருந்தால் தான் தெரிந்திருக்கும்

தரணி யெங்கும் தமிழர் நாம் அகதிகளாய்
திரைகடலோடித் தரைகளில் இறங்கி
திரவியம் சேர்த்துக் கொண்டிருக்கும்
திரு முதல் திருமதி வரைக்கும்
திருமகள் முதல் திருமகன் வரைக்கும்
ஒவ்வொருவர் மனதையும் உறுத்திக் கொண்டிருக்கும்
உதிரா நினைவு எதுவாக இருக்கும்
போராடிக் கொண்டிருக்கும் மண்மீதிருக்கும்
பற்றொன்று என்று மட்டும் புரிந்தே இருக்கும்

அகதி என்ற நினைவு எம்மை விட்டகலும் வரைக்கும்
அராஜகத்தின் அழிவுகளால் அகதிகளாகிக் கொண்டிருக்கும்
ஆருயிர் ஆத்மாக்களின் மேல் அன்பும் பெருகிக் கொண்டிருக்கும்
அவதியுறும் அகதிகளின் வாழ்வில் விடிவு தோன்ற
ஆண்டவனின் துணை என்றும் இருக்கும்
அவரவர் மனதில் துணிவிருக்கும் வரைக்கும்
எதுவும் நிகழாதிருக்கும்



உங்கள் உறவினர்க்கேதும் அன்றி
உங்கள் குடும்பத்தில் ஏதும்
எவரையும் இழந்ததாய் செய்தியோ
ஏதும் நிகழ்ந்ததாய் தகவலோ
உங்களுக்கு எட்டும் வரைக்கும்
உங்கள் உணர்வுகள்
உறங்கித்தானிருக்கும்
உங்களுக்கு வந்தால் எங்களுக் கென்ன
எங்களுக்கு வந்தால் உங்களுக் கென்ன
என்பதை மறந்து
இவ்வாறு அல்லலுறும் அவதிகளும்
அழிவுகளால் அகதிகளும் உள்ளவரை
அமைதியும் அழிந்து கொண்டு தானிருக்கும்
எள்ளளவும் உணராத உள்ள மற்ற சிலர்
எம்மினத்தில் உள்ளவரை அவதியுறும் அகதிகள்
அவனியெல்லாம் அதிகரித்துக்கொண்டு தானிருக்கும்

இதை உணரா இருதலைக் கொள்ளிகளாய்
அராஜகத்தின் விருந்தினராய்
அடிவயிற்றை நிரப்பிக் கொண்டிருக்கும் பச்சோந்திகள்
உரசிக் கொண்டிருக்கும் வரை, அகதிகள்
அவதியுற்றுக் கொண்டு தானிருக்கும்

அகதியல்ல நாங்கள் அகதிகளுக்கெல்லாம் அகதிகள்....

அன்பு இல்லத்தின் அரங்கத்திற்காக வாசிக்கப்பட்டது

# போகும் பாதை தவறானால்...

கி. செல்வகுமார்

இரவு வேலை முடிந்து களைத்த உடலோடும், கனத்த இதயத்தோடும் வீடு சேர்ந்தேன். உடம்பலுப்புத் தீர நன்றாக இளம்சுடுதண்ணீரில் குளித்து விட்டு படுக்கையில் சரிந்தேன். முதல்நாள் அப்பா கொழும்பில் நின்றபடி காசு கேட்டது மண்டையைக் குடைந்தபடி இருந்தது. அனுப்புகிறேன் எனச் சொல்லிவிட்டேன். ஒரு வாரத்தில் அனுப்பியாக வேண்டும். கணக்கின்மேல் கணக்குப் போட்டபடியே மனம் இருந்தது. அப்பாவும் என்ன செய்வார், அடுத்தநாள் சூரிய உதயத்தைக் காண்போமா என்பதே கேள்விக்குறியாக இருக்கின்றபோது. என்ன தொழிலைத்தான் அவர் இந்த தள்ளாத வயதில் செய்ய முடியும். எப்படி வாழ்ந்த மனிதர் அவர். அவர் செய்த புண்ணியந்தான் என்னை இந்த மண்ணில் இப்போது காப்பாற்றுகிறது என்பது எனது நம்பிக்கை. அப்பாவையும், நோய்வாய்ப்பட்டிருக்கும் அம்மாவையும் நினைத்தபடியே தூங்கிப்போனேன்.

மனவேதனையோடு தூங்கப் போனதால்ஆழ்ந்த உறக்கம் வரவேயில்லை. ஆனால் மறுபடியும் வேலைக்குப் போகுமுன் எப்படியும் தூங்கியாக வேண்டும். எவ்வளவு நேரம் அப்படிப் போனதெனத் தெரியாது.

தொலைபேசி மணி அடித்தது. அரைகுறைத் தூக்கத்தோடு போர்வைக்குள்ளிருந்து கையை எடுத்து தொலைபேசியைக் காதில் வைத்தேன்; செய்தி என்னைத் தூக்கிவாரிப் போட்டது.

கருணா 88இன் இறுதியில் கனடா வந்து சேர்ந்தவன். எனக்கும் அவனுக்கும் ஒரே வயது. இருவரும் பால்யத்தில் நண்பர்களாக இருந்தோம். விடுமுறைநாட்கள் என்றால் இருவரும் ஒன்றாக நீண்டதூரம் நடப்போம். மாதாகோவில் ஆலமரத்தில் ஏறியிருந்து கிளைகளைத் தொடர்ந்து ஆட்டியபடி விமானம் ஓட்டுவதாகக் கற்பனை செய்வோம். எப்போதும் எங்கள் சிந்தனைகள் உயரப் பறந்தபடியே இருந்தன. ஆம் அப்போதெல்லாம் இருவருக்கும் அறிவுநிலை வளர்ச்சியும், சுற்றாடல் சூழ்நிலைகளும், எண்ண ஓட்டங்களும் ஒரே மாதிரியாகவே இருந்தன. காலம் மாற காட்சிகளும் மாறின. கருணாவிற்கு மூத்த சகோதரர்கள் இருவர் வெளிநாடுகளில் இருந்ததால்,

ஆரம்ப நாட்களிலேயே மேல்நாட்டுமோகம், உல்லாச வாழ்க்கை போன்றவற்றில் ஆசை அதிகரித்து வந்தது. பேசும் பேச்சுக்களில்கூட இருவருக்குள்ளும் முரண்பாடுகள் அதிகரித்து வந்தன. அவனது விருப்பங்களும்,

நோக்கங்களும் மாற, அவன் சேரும் சேர்க்கையும் மாறியது. பழக்கவழக்கத்திலும் நிறைய மாற்றங்கள் ஏற்பட்டது. பின்பு கொள்கைச் சுமைகளைக் களைந்து விட்டு, உல்லாச விரும்பியாகவே ஊர் சுற்ற ஆரம்பித்தான்.அத்தோடு அவனது தொடர்புகள் அற்றுப் போயின. அவனுக்குள் அப்படி ஒரு மாற்றம்.

நானோ எனது அன்னை மண் குமுறிய குமுறலுக்குள் என்னை அர்ப்பணித்துக் கொண்டேன்.

91இன் ஆரம்பப் பகுதி, கனடாவின் எல்லையில் என் பை நிறையக் கனவுகளோடு கால்பதித்தேன். என்னை அழைத்துச் செல்லக் கருணா காரில் காத்திருந்தான். அவனைக் கண்டபோது, வெண்பனி போர்த்து ஆயிரம் மைல்களுக்கப்பால் இருந்த அற்புதமான அந்நியநாடு என்னை அரவணைத்துக் கொண்டதுபோன்ற ஒரு இதமான உணர்வு. கைகுலுக்கி அன்போடு என்னை வரவேற்றான். அகமகிழ்ந்து போனேன். கார் ரொறன்ரோவை நோக்கி ஓடிக்கொண்டிருந்தது. காரில் வரும்போது கருணா பேசிக்கொண்டே வந்தான். "நான் சொல்வதைச் செய்யுங்கள், நான் செய்ததைச் செய்யாதீர்கள்" என்ற கண்ணதாசனின் வாக்கியம்போல் அற்புதமான அறிவுரைகள். அவன் வார்த்தைகள் அனைத்தும் முத்துக்கள். கனடாவில் எனது கலங்கரை விளக்கமே அவன் அன்று கூறிய முதல்நாள் அறிவுரைகள்தான்.

கருணாவைப் பொறுத்தவரை வெள்ளி மாலை என்றால் திருவிழா, சனி பகல் முழுக்கத் தூக்கம். சனி மாலை மீண்டும் ஒரு வசந்த விழா ஞாயிறு பகல் முழுக்கத் தூக்கம். பின்பு திங்கள் வேலை. தினமும் படுக்கமுன் தீர்த்தாபிஷேகம் என்று இந்த நாட்டிலுள்ள நல்லவற்றைத் தேர்ந்தெடுத்து வாழப் பழகியிருந்தான்.




வாழ வந்த இந்த நேரத்திலும் அவன் என்னைவிட்டுத் தூரப் போயிருந்தான். ஆம் உள்ளத்தாலும் உணர்வுகளாலும் மிக மிக தொலைவில்தான் வாழ்ந்து வந்தான்.

அவ்வப்போது தொலைபேசியில் விசாரிப்புகள், அத்தி பூத்தாற்போல் வீட்டு விஜயங்கள் என்ற அளவோடு எமது உறவு இருந்தது.

ஒருநாள் இரவு வேலைத்தளத்தில்

எனக்கொரு தொலைபேசி அழைப்பு வந்தது. மறுமுனையில் கருணா அடுத்தநாள் பகல் என்னைத் தன் வீட்டிற்குக் கட்டாயம் வரும்படி அழைத்திருந்தான். என்னை எந்தப் பதிலுமே சொல்லவிடாமல் தொலைபேசியை வைத்து விட்டான். போகவேண்டும் என்ற விருப்பம் இல்லாவிட்டாலும் அவன் இப்படி ஒருநாளும் அழைத்ததில்லையே என நினைத்த பொழுது ஏதோ புதிர் ஒன்று போடப்பட்டதாக உணர்வு சொல்லியது. அழைத்த



காரணத்தாலும், புதிருக்கு விடை அறியும் ஆவலிலும் மறுநாள் பிற்பகல் இரண்டு மணிக்கு கருணா வீட்டுக் கதவைத் தட்டினேன். உடனே கதவு திறக்கப்படவில்லை. ஒரு சிறு அமைதி. மறுபக்கத்தில் பேச்சுச் சத்தம் நின்று போனது. சிறிது நேரத்தில் கருணாதான் கதவைத் திறந்தான். அவனது வீட்டிற்குள் சில ஆண்களோடு ஒரு பெண்ணும் சுவரோடு சுவராக மூலையில் நின்று கொண்டிருந்தாள். அங்கிருந்த மற்ற அனைவருமே கருணாவின் குடியுறவு நண்பர்கள். பிரச்சனையின் நெடி என் நாசியைத் துளைத்தது. வழக்கம் போலவே கருணாவையும் நம்பி ஒரு காரிகை பெற்றவர்களைத் துறக்கத் தயாராக முதல் அடி எடுத்து வைத்துள்ளாள். அவர்கள் பிரச்சனையில் தவறாமல் நான் எனது மூக்கை நுழைத்துக் கொண்டேன். முடிவு திருமணத்தில் முடிந்தது. நான் அரிசியைப் போட்ட போதும் எல்லோரும் போலவே ஆசீர்வாதங்களோடு மனமார வாழ்த்தியே போட்டேன். நாள்பட நாள்பட நான் அவர்கள் வீட்டிற்கு சென்ற போதெல்லாம் கருணாவின் மனைவி கலைச்செல்வி சோபை இழந்து காணப்பட்டதாக நினைத்து அவளிடம் கேட்டபோதெல்லாம், அவள் அவனை விட்டுக் கொடுத்ததாக எனக்கு நினைவே இல்லை. என்னதான் கனடாவில் வளர்ந்தாலும் எங்களின் பழைய மூடவாதம் ஒன்றை அவள் கடைப்பிடித்தாக நான் நினைத்தேன்.

இப்போது என்னைத் தூக்கிவாரிப்போட்ட செய்திக்கு வருகிறேன். செய்தியைச் சொன்னவன் கருணாவின் குடியுறவு நண்பர்களில் ஒருவன். கருணா பொலிஸ் வசம், கலைச்செல்வி வைத்தியசாலையில். செய்தி என்னைத் தூக்கிவாரிப் போட்டதில் ஆச்சரியம் இல்லையே. புற்றுநோய் ஒன்று புரையோடியபின் வெளிவர ஆரம்பித்திருக்கிறது. இதற்கு மருந்தைத் தேடுவேனா அல்லது அங்கத்தைத் துண்டாட நல்ல கத்தியைத் தேடுவேனா. என் மனம்

ஏனோ கருணாவையே வசை பாடியது. நான் முதலில் வைத்தியசாலைக்கே விரைந்தேன்.

வைத்தியசாலை இரண்டாவது மாடியில் கலைச்செல்வியின் அறை இருந்தது. அறை வாசலில் கலைச்செல்வியின் பெற்றோர்கள் நின்றிருந்தனர். அவர்கள் பார்வையை நேருக்குநேர் சந்திக்கும் தைரியம்



எனக்கு இருக்கவில்லை. ஒரு முறை அவர்களைப் பார்த்துத் தலையை ஆட்டிவிட்டுத் தயங்கித் தயங்கி அறைக்குள் சென்றேன். ஆயிரம் பொய்யைச் சொல்லியாவது திருமணத்தை முடி என்றார்கள் நம் முன்னோர்கள். அதை நானும் நம்பி, பல்லாயிரம் பொய்களைச் சொல்லி திருமணத்தை நடத்தி வைத்தேனே. கருணாவிற்காகக் கலைச்செல்வியின் பெற்றோரிடம் தூது போனபோது எத்தனை ஆயிரம் கேள்விகளை அந்தப் பெற்றோர் என்னிடம் கேட்டார்கள்; அத்தனைக்கும் அழகாக விளக்கம் சொன்னேனே.

திருமணம் கருணாவின் மனதை மாற்றும் என நம்பினேன். வளையல் கரத்தின் மகிமை அவன் பாதையைச் செப்பனிடும் என்று நினைத்தேன். நினைப்பதெல்லாம் நடப்பதில்லையே என்று என் மனதை நானே சமாளிக்க முடியாமலிருந்தது. தவறான ஒரு முடிச்சைப்போட நானும் ஒரு தூணாக இருந்தேனே என்பதை நினைத்து என் மனம் பல கூறாகச் சிதறிப் போனது.

படுக்கையில் கலைச்செல்வி புயலில் சிக்கி உருக்குலைந்த கலைமாடம்போல் துவண்டுபோய்ப் படுத்திருந்தாள். தலையிலே பெரிய கட்டு, கண்களைச் சுற்றிக் கருவளையம், கையில் ஒரு கட்டு. தன்னை யாரோ பார்த்துக் கொண்டிருந்ததை உணர்ந்தவள்போல் அவள் கண்ணைத் திறக்க முடியாமல் திறந்து, சிரிக்க முடியாமல் என்னைப் பார்த்துச் சிரித்தாள். எனக்குள் என்னவோ நெளிந்தது.

திருமணம் செய்த நாள்முதல் ஆடை அணிகளை வாங்கிக் கொடுக்காமல் நிறைய அடி உதை கொடுத்தானாம். ஆசைக் கனவுகளை பேசிக் களிக்கவில்லை. ஆபாசமான அருவருப்பு வார்த்தைகளை அள்ளித் தெளித்தானாம். பாலும் தேனும் அள்ளிக்கொடுத்து தேன்நிலவு காணாமல், பீரும் விஸ்கியும் எடுத்து வாயில் திணித்தானாம்.
பெற்றோர்கள் ஆசை ஆசையாகக் கற்றுவித்த ஆடல்கலையைப் போற்றாமல் நண்பர்கள் மத்தியில்

ஆபாச ஆட்டம் ஆட வைத்தானாம். மாற்றங்களே மாறுகின்ற உலகத்தில் மாறாமல் கூட வரும் ஒரு புனிதமான உறவை பொதுவில் வைத்துக் களங்கப்படுத்தி விட்டானே கருணா. ஹிட்லர் பாரிஸ் நகரத்தை அழிக்கச் சொன்னபோது, அந்த அழகிய நகரத்தின் அழகில் மயங்கிய ஹிட்லரின் தளபதி ஒருவன் தன்னைத்தானே சுட்டுக் கொண்டானாம். போர்வெறி கொண்ட இராணுவ இயந்திரமாக இருந்த அந்த வீரனிடம் இருந்த அழகுணர்ச்சிகூட இந்த கருணாவுக்கு இருக்கவில்லையே. உல்லாச விரும்பியாக அவன் வாழ்ந்ததால், அவன் அவனையும் அறியாமல் ஒரு சுயநலக் காரனாக மாறிவிட்டிருந்தான். நல்லது கெட்டதை பகுத்தறியும் மனிதக் குணத்தையும் அவன் மனம் இழந்து விட்டிருந்தது. என்னே அற்புதமான நண்பன்! அவன் முகம் காணும் எண்ணமே என் மனதிற்குள் பின்பு எழவில்லை. அவர்கள் விவாகரத்திற்கு வழி செய்யலாம் எனக் கலைச்செல்வியிடம் கேட்டேன். அதற்கு அவள் தன்னை அவன் சட்டரீதியாக மனைவி ஆக்கவில்லை என்ற உண்மையைச் சொன்னாள்.

திருமணப் பதிவு செய்து விட்டோம். திருமணம் ஊரறிய நடந்தால் சரி என்றுதானே என்னிடம் கேட்டார்கள். இப்போது யாரை நொந்து என்ன பயன்? "உன் நண்பனைப்பற்றிச் சொல்லு உன்னைப் பற்றி நான் சொல்கிறேன்" எனச் சொல்வார்களே. அது கூடப் பொய்தானோ என்ற கேள்வி எழுகிறது.

எனக்குப் பால்யத்தில் தெரிந்த கருணா எங்கே?

கருணாவை இப்படி ஒரு கதாபாத்திரமாக உருவாக்கிய காரணிகள் என்ன?

விடை தெரியாத கேள்விகள்......
விரும்பத்தகாத நிகழ்வுகள்.....
தொலைந்துபோன எனது பொன்னான தூக்க நேரம்.........
கடமைகளை நினைத்தபடி இன்னொரு நாளிற்காய் என்னைத் தயார்படுத்திக் கொண்டேன்.

●●●●●●





கருணாவின்...

# விடை தெரியாத வினாக்கள்

*"நாங்கள் வெள்ளை நிறத்தினாலான ஒரு கடலினுள் பிரவேசிக்கிறோம். திசை தொடர்பாக எதுவுமே புரியவில்லை."இதைத் தொடர்ந்து தொடர்புகள் துண்டிக்கப்பட விமானங்கள் சலனமின்றித் தொலைந்துபோயின. அந்தப் பகுதியில் மேற்குறிப்பிட்ட வகைக் கடற்கரை ஏதும் இருந்ததாக அறியப்படவில்லை!*

முக்கோணம் என்ற சொல் நமக்கு அடிக்கடி கேட்டுப் பரிச்சியமான ஒன்று. பாலச்சந்தரின் தமிழ்த்திரைப் படங்களில் முக்கோணக் காதல் கதைகளை அடிக்கடி பார்த்து முக்கோணம் என்ற சொல்லை அறிந்திருப்பீர்கள். சரி! பேர்மூடா முக்கோணம் என்பதைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறீர்களா? சிலர் இதைப்பற்றி சிறிதளவு அறிந்திருக்கலாம். உலகில் சில விடுவிக்கப்படாத புதிர்கள் இருந்து கொண்டேயிருக்கின்றன. வளர்ச்சியடைந்த விஞ்ஞான முறைக-ளைப் பாவித்தும் கூட இதுவரையில் இந்தப் புதிர்கள் விடுவிக்கப்பட வேயில்லை. அவற்றில் ஒன்றுதான் இந்த பேர்மூடா முக்கோணம்.

(முதலில் பேர்மூடா என்பது என்ன? இதையே ஒரு நண்பனிடம் கேட்டேன். நீண்ட நேரம் யோசித்து விட்டு A.R. ரகுமானின் புதிய பாடல் வெளிவந்து விட்டது! அப்படித்தானே என்றான். ......ய்...ய்......ய்...)
பேர்மூடா என்பது ஒரு நாடு. பிரித்தானியாவின் கொலனி. மத்திய அமெரிக்காவிற்கு கிழக்குப்புறமாக அத்திலாந்திக் சமுத்திரத்தில் இது அமைந்துள்ளது. இங்கிருந்து தென்மேற்குப் புறமாக பலநூறு மைல் தொலைவில் அமைந்துள்ள மயாமியையும் (புளோரிடா, அமெரிக்கா) கிழக்கில் போட்டா ரிக்கோவையும் இணைக்கும் முக்கோணமே பேர்மூடா முக்கோணம் என வழங்கப்படுகிறது. நல்லது இந்த பேர்மூடா முக்கோணத்திலுள்ள சிறப்பு என்ன?

ஏறக்குறைய இன்றிலிருந்து 400 வருடங்களாக ஆயிரக்கணக்கான மனிதர்களும் நூற்றுக்கணக்கான விமானங்களும் கப்பல்களும் இந்தப் பகுதியில் சடுதியாக மறைந்துள்ளன. (மவனே!....கதை விடாதை!.....நாய் துலைஞ்சாலே இஞ்ச பெரிய விசயம்! கப்பலாவது மறைகிறதாவது என்கிறீர்களா இதோ சில சான்றுகள்.) கிறிஸ்ரோபர் கொலம்பஸ் இந்தப் பகுதியூடாக பயணம் செய்தபோது நெருப்புப் பந்து ஒன்றைக் கண்டதாயும் அந்நேரத்தில் அவருடைய திசையறி கருவி வேறுபாடான நடத்தையைக் காட்டியதாகவும் எழுதி வைத்துள்ளார்.

*தொடர்து 1609ம் ஆண்டு ஹென்றி றிவன்ஸ் என்பவர் 7பேருடன் ஒரு கப்பலில் வேர்ஜினியா நோக்கி சென்று கொண்டிருந்தார். அவருடைய நோக்கம் வென்சுரா என்ற கப்பல் பேர்மூடா வந்துள்ளதாய் வேர்ஜினியா வாசிகளுக்கு அறிவிப்பதாகும். ஹென்றியோ அவருடைய சகாக்களோ என்றுமே வேர்ஜினியாவை அடையவில்லை.*

*1812ம் ஆண்டு பேட்ரியற் என்ற கப்பல் நியூயோர்கிலிருந்து இதே பகுதியூடாக சென்றுகொண்டிருந்தது. காலநிலை மிகவும் தெளிவாக இருந்தது, காற்று மிதமாக வீசிக்கொண்டிருந்தது. ஆனால் அந்தக் கப்பல் மீண்டும் காணப்படவேயில்லை. ஏறக்குறைய அந்தப் பகுதி முழுவதும் சல்லடை போட்டுத் தேடியும் எதுவுமே அகப்படவில்லை. கப்பல் மூழ்கியமைக்கான அடையாளமோ பயணிகளின் பொருட்கள் மிதந்தமைக்கான அறிகுறியோ எதுவுமேயில்லை.*

*1814ம் ஆண்டு அமெரிக்கக் கடற்படையின் கப்பலொன்று தளபதி ஜோண்சன் பிளக்கிளேயுடன் மறைந்தது. 1918ம் ஆண்டு ஜசகுளோப் என்ற கப்பல் பார்படோஸ் இலிருந்து சென்றுகொண்டிருந்த போதும் 1950ம் ஆண்டு மற்றொரு கப்பல் 25 பேருடன் பயணித்தபோதும் காணாமல் போயின.*
*1973ம் ஆண்டு ஜேர்மனியக் கப்பல் Anita வேர்ஜினியாவிலிருந்து தாய்நாடு நோக்கி புறப்பட்டது. மீண்டும் காணப்படவேயில்லை. இவை ஒரு சில சம்பவங்களே. இவைகளைத் தவிர ஏராளமான கப்பல்கள் இந்தப் பகுதியில் மறைந்துள்ளன. சரி இப்போது கப்பல்களை விடுத்து விமானங்களுக்கு வருவோம்.*

*1945ம் ஆண்டு புளோரிடாவிலிருந்து 24 அதீத அனுபவமிக்க விமானிகளுடன் அமெரிக்கக் கடற்படை விமானங்கள்; தினசரி பறப்பு நடவடிக்கைகாகப் புறப்பட்டன. வழமைபோல ஒரு விமானத்தில் இருவர் வீதம் ஏறிக்கொண்டனர். சிலமணி நேரத்தின் பின்னர் 10 விமானங்கள் மாத்திரமே தளம் திரும்பின. ஏனைய இரண்டு விமானங்களுக்கும் என்ன நடந்தது என்பது அறியப்படவில்லை.*
*1945ம் ஆண்டு Port Lauderdale கடற்படை தளத்திலிருந்து 300m/h வேகத்தில் பறக்கவல்ல Torpedo விமானங்கள் வழமையான ஆகாய ரோந்து நடவடிக்கைகாக புறப்பட்டன. ஒரு விமானத்தில் மூவர் வீதம் இருந்தனர். விமானிகள் அனைவரும் பல வருட அனுபவம் மிக்கவர்கள். விமானத்தின் தன்மை பற்றிய அறிவும், அந்தப்பகுதியின் புவியியல் நிலை பற்றிய பரிச்சியமும் நன்றே அவர்களிடம் இருந்தது. வானிலை மிகத் தெளிவானதாயும், காற்று மிதமானதாயும் இருந்தது. பயணத்திற்கு முன்னதாக விமானத்தின் இயந்திரங்கள் சகலதும் நன்கு சோதனை செய்யப்பட்டன. எந்த பிரச்சனையும் இருக்கவில்லை. 1000 மைல் பறப்பிற்குத் தேவையான எரிபொருள் சகல விமானங்களிலும் இருந்தது. பி.ப 2:00 மணிக்கு முதலாவது விமானம் புறப்பட்டது. ஏறக்குறைய 4:00 மணிக்கு சற்று முன்னர் Fort lauderdale தளத்திலிருந்த கட்டுப்பாட்டாளருக்கு பீதியடைந்த குரலில் விமானியின் செய்தியொன்று பின்வருமாறு கிடைத்தது. "Calling Tower.... this is an emergency.... we seem to be off course... we cannot see land.... repeat....we cannot see land..."*




## பேர்மூடா

அமெரிக்காவிற்குக் கிழக்கே அத்திலாந்திக் சமுத்திரத்தில் அமைந்துள்ள பிரித்தானியக் கொலனியாகும்.

1503ம் ஆண்டு முதல்முதலில் ஸ்பானியர்கள் இங்கு காலடி வைத்தனர்.

பேர்மூடா 5பிரதான தீவுகளைக் கொண்டது.

22 சதுரமைல் பரப்பளவை மட்டுமே உடையது.

மொத்த மக்கள்தொகை 61,000 மட்டுமே.

98% வீதமான மக்கள் எழுத்தறிவு உடையவர்கள்.

1996ம் ஆண்டு நடைபெற்ற சர்வசன வாக்கெடுப்பு ஒன்றில் இந்நாட்டின் மக்கள் தொடர்ந்து பிரித்தானிய கொலனியாக இருக்கவே விருப்பம் தெரிவித்துள்ளனர்.

பேர்மூடா அரசு அந்நாடு ஒரு கரீபியன் நாடு அல்ல எனக்கூறிவருகிறது.

செய்தியைக் கொடுத்தவர் சாள்ஸ் ரெயிலர் என்ற 6 வருட அனுபவம் மிக்க தலைமை விமானி. அவர்கள் எங்கேயிருக்கிறார்கள் என்று கேட்கப்பட்டபோது சரியாகத்தெரியவில்லை எனப்பதில் வந்தது. மேற்கு நோக்கிப் பறக்கும்படி கட்டுப்பாட்டாளர் கூறியபோது *"We cannot be sure which way is west.....every thing is wrong....strange....we cannot be sure of any direction......even the ocean dosen't look as it should...."* தளத்திலிருந்தோர் அதிசயித்தனர். சகல திசையறிகருவிகளும் தவறிழைப்பினும் அனுபவம் மிக்க ஒரு விமானிக்கு சூரியனைப் பார்த்து திசையை அறிந்துகொள்வது சிக்கலாக இருக்க முடியாது. ஏறக்குறைய 40 நிமிடங்களாய் ஒவ்வொரு விமானமும் மற்றயதுடன் பேசிக்கொள்வதைத் தளத்திலிருந்தவர்கள் கேட்டுக்கொண்டுருந்தனர். அவர்கள் பேசிக்கொண்டதிலிருந்து வேறு ஏதும்

கிரகத்திற்குள் சென்றுவிட்டார்களோ என எண்ணத்தோன்றியதாக கட்டுப்பாட்டாளர் கூறியிருக்கிறார். விமானத்திலிருந்தவர்கள் பலத்த குழப்பம் அடைந்திருக்க வேண்டும். (வானொலி உரையாடல்கள் அனைத்தும் ஒலிப்பதிவு செய்யப்பட்டுள்ளன.)

தொடர்ந்து சில நிமிட நேர அமைதிக்குப்பின் "நாங்கள் வெள்ளை நிறத்தினாலான ஒரு கடலினுள் பிரவேசிக்கிறோம். திசை தொடர்பாக எதுவுமே புரியவில்லை." இதைத் தொடர்ந்து தொடர்புகள் துண்டிக்கப்பட விமானங்கள் சலனமின்றித் தொலைந்துபோயின. அந்தப் பகுதியில் மேற்குறிப்பிட்ட வகைக் கடற்கரை ஏதும் இருந்ததாக அறியப்படவில்லை. சில நிமிடங்களில் தொலைந்த விமானங்களைத்தேடி 12 பேரைக்கொண்ட இன்னொரு விமானம் சென்றது. சில மணிநேரத்தில் குழப்பமான செய்தி ஒன்றைத் தந்துவிட்டு தேடச்சென்ற விமானமும் மறைந்து போனது. இதைத் தொடர்ந்து நீண்ட நாட்களாய் அமெரிக்கா அந்தப் பகுதி முழுவதும் பலத்த தேடுதல் வேட்டை ஒன்றை நடாத்தியது. எதுவுமே கிடைக்கவில்லை. விமானங்கள் கடலில் விழுந்தமைக்கான எந்த அடையாளமுமே இருக்கவில்லை. இப்போதும் அப்பகுதியூடாகப் பறக்கும் அமெரிக்க விமானங்களை ஏதாவது கிடைக்கிறதா எனப்பார்த்துச செல்லும்படி கேட்கப்படுகிறது.

இதைத் தொடர்ந்து 1949 இல் 34 பேருடன் ஒரு போக்குவரத்து விமானமும், 1950இல் 20 பேருடன் ஒரு விமானமும் 62இல் ஒருவிமானமுமாய் தொடர்ந்து விமானங்கள் பல இப்பகுதியில் மறைந்துபோயின. பழைய படியே எந்தத் தேடுதலும் பலன் தரவில்லை. இதைத் தொடர்ந்து பல வகையான ஊகங்கள் எழத் தொடங்கின. பலர் ஆராய்ச்சி என்ற பெயரில் புனைகதைகளை வெளியிடத் தொடங்கினர். 1964ம் ஆண்டில் வெளிவந்த Oxford English Dicrionary இல் "Bermuda Triangle" என்ற பதம் "Devil's Triangle" என்ற பொருளில் வெளியிடப்பட்டது.

சரி விமானங்களும் கப்பல்களும் எங்கு போயின. என்ன நடந்தது. பலர் பலவகையான விளக்கங்களைக் கொடுத்தனர். பேர்முடாப் பகுதியில் சக்திவாய்த ஒரு நீரோட்டம் ஒன்று உருவாகுவதாகக் கூறுகிறார்கள். இந் நீரோட்டம் மிக வலிமை உள்ளதாக இருப்பதால் கப்பல்களை மூழ்கடித்து விடுகிறது என்கிறார்கள்.

இந் நீரோட்டத்தால் உண்டாகும் நீர்த்தாரை விமானங்களையும் கடலில் மூழ்கவைத்து விடுவதாயும் கூறுகிறார்கள். எனினும் ஒரு கப்பலோ விமானமோ கடலில் மூழ்கும் பட்சத்தில் ஏதாவது ஒரு பொருளாவது கடலில் மிதக்கும். அத்துடன் கப்பல் கடலில் மூழ்க சிறிது நேரமாவது செல்லும். அதற்குள் வானொலி மூலம் மாலுமிகள் உதவி கோரியிருக்கலாம். அவ்வாறு எதுவும் நடக்கவில்லை. எனவே இந்த விவாதம் ஏற்றுக்கொள்ள முடியாதது.

UFO எனப்படும் வேற்றுக்கிரக மனிதர்கள் பறக்கும் தட்டுகளில் வந்திறங்கும் இடம் இந்தப் பகுதியெனவும் அவர்களே கப்பல்களையும் விமானங்களைளயும் தூக்கிச்செல்வதாயும் இன்னொரு சாராரின் வாதம். ஒரு சில மத்திய அமெரிக்க நாடுகளில் அடையாளம்




கணைமுடியாத சில பொருட்கள் மின்னல் வேகத்தில் பறந்து சென்றதை பலர் கண்டதாயும் விமானங்கள், கப்பல்கள் எல்லாம் இவர்களின் வேலையே எனவும் கூறுகிறரர்கள். வேற்றுக் கிரகவாசிகள் 400 வருடங்களாக ஒரே இடத்திலிருந்து கப்பல்களைத் தூக்கிச் செல்வதை நம்பமுடியவில்லை. ஒருபிரமாண்டமான கப்பலை ஆகாய மார்க்கமாகத் தூக்கிச்சென்றால் எந்த ஒரு நாட்டின் ரேடாரிலாவது அது தெரிந்திருக்கும். மறைந்து போவதற்குமுன்னர் சில விமானிகள் கொடுத்த செய்திகள் மேற்கூறிய கருத்துடன் ஒத்திருக்கவில்லை.

சிலர் அந்த இடத்தில் கருப்பு ஓட்டை ஒன்று உள்ளதாயும் கப்பல்களும், விமானங்களும் அதற்குள்ளே செல்லுவதாயும் கூறுகிறார்கள். சிலர் அந்த இடத்திற்கூடாகப் பயணிப்போர் காலமாற்றத்தை அடைந்து விடுவதாயும் கூறுகிறார்கள். (அதாவது உதாரணமாய் திடீரென 20ம் நூற்றாண்டி லிருந்து 16ம் நூற்றாண்டிற்கு சென்றுவிடுவது) இவையெல்லாம் சரியான விதத்தில் நிரூபிக்கப்பட வில்லை.

நம்புவற்கும் சற்று இடிக்கிறது. அடுத்த விளக்கத்திற்கு செல்லு முன்னர்......

*Atlantis* கண்டம் பற்றி ஒருசிலருக்கு தெரிந்திருக்கலாம். இந்தக் கண்டம் ஆயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்னர் அத்திலாந்திக் சமுத்திரம் இருக்கும் இடத்தில் அமைந்திருந்ததாகக் கூறுகிறார்கள். இந்தக் கண்டத்தில் வாழ்ந்த மனிதர்கள் தொழில்நுட்ப துறையில் மிகவும் முதிர்ச்சி அடைந்த நிலையில் இருந்தனர் எனவும் தமது தேவைகளை அணுசக்தியைப் பாவித்துப் பூர்த்தி செய்து கொண்டனர் எனவும் நம்பப்படுகிறது. (நாம் எம்முடைய பல தேவைகளுக்கு மின் சக்தியைப்பாவிப்பது போல) இயற்கையில் ஏற்பட்ட பாரிய அழிவு

ஒன்றினாலோ அல்லது விண்வெளியிலிருந்து வந்த கல்லொன்று (அமெரிக்காவின் கால் வாசி அளவுள்ள கல்) பூமியில் மோதிய போதோ அட்லான்டிஸ் கண்டமும் கடலில் மூழ்கிவிட்டது. இது மெக்ஸிக்கோ வளைகுடாவிலிருந்து மத்தியதரைக் கடல் வரை வியாபித்திருந்ததாயும் சொல்லப் படுகிறது. இந்த அட்லான்டிஸ் வாசிகள் பிரமிட் வடிவில் பல அமைப்புகளை; அறியப்படாத ஒரு கனியத்தை பாவித்து அமைத்தனர் எனவும் இந்த அமைப்பு வெளிவிடும் கதிரியக்கத்திலிருந்து சக்தியைப் பெற்றுக் கொண்டனர் எனவும் நம்பப்படுகிறது.

இந்த அட்லான்ரிஸ் மனிதர்கள் தமக்குத் தேவையான சக்தியைப் பெற அமைத்த பிரமிட் அமைப்புகள் பெர்முடா முக்கோணப் பகுதியிலே அமைந்துள்ளதென என நம்புகிறார்கள். இனி அண்மையில் நடந்த சம்பவம் ஒன்றைப்பார்ப்போம். Dr. Ray Brown என்பவர் பஹாமஸ் தீவுக்கு அண்மையில் நண்பர்களுடன் Scuba diving இல் ஈடுபட்டிருந்தார். ஒரு சந்தர்ப்பத்தில் நண்பர்களை விட்டுப் பிரிந்த அவர் கடலின் அடியில் ஏராளமான ஆழத்தில் பிரமிட் வடிவிலான ஒரு பொருளைக் கண்டதாய்க் கூறுகிறார். இந்த அமைப்பு கண்ணாடி போலத் தெளிவான பளிங்கால் ஆக்கப் பட்டிருந்ததாயும் ரேடியம் போல ஒளி வீசிக்கொண்டிருந்ததாயும் கூறுகிறார். இந்த அமைப்பை அவர் சுற்றி வந்த போது ஒரு வாசல் காணப்பட்டது. உள்ளே நுழைந்த போது 4” விட்டமுள்ள நீள்வட்ட அமைப்புடனான க்றிஸ்ரல் ஒன்றைக் கண்டதாயும் அது வைக்கப்பட்டிருந்த அமைப்பிலிருந்து அதை விடுவித்த அவர் அதைத் தன்னோடு எடுத்து வந்துவிட்டார். கடலில் வழமையாகக் காணப்படும் தானே தோன்றும் அமைப்புகளிலிருந்து இது மிகவும் வேறுபட்டுக் காணப்பட்டது. ஆக இது தானே தோன்றியிருக்க வழியில்லை. சில ஆண்டுகளுக்கு முன்அமெரிக்காவில் நடந்த பௌதீகவியல் மாநாடொன்றில் முதல் முதலாக இந்தத் தகவலை வெளியிட்டு தான் எடுத்து வந்த பொருளையும் காட்சிக்கு கொடுத்தார். அதிசயம் என்னவெனில் அது எந்த வகைக் கனியத்தால் ஆனது என யாராலும் கூறமுடியவில்லை. இதைத் தொடர்ந்து சில இடங்களில் இந்தப்பொருள் காட்சிக்கு வைக்கப் பட்டாலும் திடீரென இது தொடர்பான செய்திகள் மறைக்கப்பட்டு இனம் தெரியாத இடத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டு விட்டது.

திடீரென ஒருநாள் இந்த க்றிஸ்ரலுக்கு அண்மையிலிருந்த திசைகாட்டியின் முள் வேகமாய்ச் சுற்றியதாயும் பின்னர் சடுதியாய் எதிர்த் திசையில் சுற்றியதாயும் கூறுகிறார்கள். அந்தநேரத்தில் இந்தப் பொருளைத்தொட்டவர்கள் ஒரு வித மின்காந்தப்புலத்தின் தாக்கத்திற்கு உள்ளானதாயும் இவர்களது நரம்பு மண்டலம் பாதிப்படைந்ததாயும் கூறுகிறார்கள். க்றிஸ்ரலிலிருந்து வெளிவந்தது மின்காந்தப்புலமல்ல எனவும் வேறுவகைப்புலம் எனவும கருதப்படுகிறது. சரி இதற்கும் கப்பல், விமானங்கள் மறைந்ததற்கும் என்ன தொடர்பு?

முதலில் பேர்முடா முக்கோணப்பகுதியில் கடலின் ஆழம் மிகவும் அதிகம். 30,000 அடியிலிருந்து 35,000 அடி வரை இருக்கலாம். இந்த இடத்தில் கடலிற்கடியில் பல மலைகள் உள்ளதாயும்

நம்பப்படுகிறது. இந்த இடத்தில்தான் மேற்படி பிரமிட்டுகள் உள்ளன. இவை கண்டுபிடிக்கப்படவில்லை அல்லது கண்டுபிடிக்கப்பட்டாலும் அவை பற்றிய தகவல்கள் வெளியிடப்படவில்லை. இந்த பிரமிட்டுகள் பலமான மின்காந்தப் புலமொன்றை அல்லது அதையொத்த புலமொன்றை வெளியிடவல்லவை. ஆனால் இவை தொடர்ந்து இந்தப்புலத்தை வெளியிட்டுக் கொண்டிருப்பதில்லை. பலமான ஒரு சக்தி வெளியீட்டை செய்தபின் அமைதியடைந்து விடுகின்றன. இவ்வாறு வெளியிடப் படும் புலம் கடலின்அடியிலிருந்து கடல்மட்டத்தையும் தாண்டி பலமைல் தூரம் வியாபித்திருக்கிறது.

எந்தவகையான புலமும் கண்ணுக்கு தெரிவதில்லை. இந்தப்புலத்தின் ஆளுகைக்குள்ளால் கப்பலோ, விமானமோ செல்லும் போது அவை ஈர்க்கப்பட்டு முற்றாகக் கடலிற்கு அடியில் இழுத்துச் செல்லப் பட்டு விடுகின்றன. பல மைல் ஆழத்தில் இவை கடலிற்கு அடியில் சென்றுவிடுவதால் இவை மீளக்கண்டுபிடிக்கப்படுவதில்லை. இப்போதைக்கு இந்த வாதமே ஓரளவிற்கு ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ளது. இந்த சக்தி வெளியீடு மீண்டும் நடைபெறலாம் என நம்பப்படுவதால் அராய்ச்சியாளர்கள் ஏராளமான சென்சர்களை இப்பகுதி முழுவதும் விதைத்து வைத்துள்ளார்கள். மீளவும் இந்தப்புலம் வெளியிடப்படும் பட்சத்தில் அது எவ்வகையான புலம் எனவும் அது எந்தளவு சக்தி வாய்ந்தது எனறு கண்டு பிடிக்கலாம் எனவும் நம்புகிறார்கள். எனினும் இந்த வகை ஆராய்ச்சிகளின் முடிவுகள் சரிவர வெளியிடப்படுவதில்லை என்பதே மறுக்கமுடியாது உண்மையாகும்.

ஏராளமான கப்பல்கள், விமானங்கள், மனிதர்கள் காணாமல் போன மர்மம் மட்டும் தொடர்ந்து கொண்டேயிருக்கின்றது. இது என்ன பெரிய விடயமா நம் நாட்டிலும் தானே கப்பல்கள், விமானங்கள், மனிதர்கள்...........



# A Time To Kill

ரம்யா: ஹலோ! ஹலோ!
மோகன்: ஹேய்! ரம்ஸ் whatzup!
ரம்யா: மோகி! என்ன நேற்று காணவேயில்லை! Animal Control இந்தப் பக்கம் வரேல்லையே!
மோகன்: ஹே...ய்.......!
ரம்யா: சாரிடா கண்ணா! நான் நேற்று ஒரு படத்திற்கு போனேன்.
மோகன்: You Too புரூட்டஸி! என்ன படம்!

ரம்யா: "A Time to Kill" என்று English படம்
மோகன்: பேரே பயங்கரமாயிருக்கு! உம்மை மாதிரித்தான் படத்தையும் செலக்ட் பண்ணுவீரோ!



ரம்யா: கமான் யா.....! இது அழகான ஒரு Strory படம். இப்ப முதலிடத்தில ஓடிக்கொண்டிருக்கு!
மோகன்: சரி! சரி! எப்பிடி கதை? அதைச் சொல்லும்

ரம்யா: அமெரிக்காவிலை இருக்கிற ஒரு சின்ன நகரத்தில இரண்டு வெள்ளையர்கள் நிறை மது போதையில் வந்து ஒரு 10 வயதே நிரம்பிய கறுப்பினச் சிறுமியை கற்பழித்து விடுகிறார்கள். சிறுமியின் தகப்பன் Carl Lee Hailey (Samuel.L. Jackson) நீதிமன்றத்தில் வைத்து இருவரையும் சுட்டுக் கொன்றுவிடுகிறார்.
கைதுசெய்யப்பட்டு நீதிமன்றத்திற்கு வரும் Carl Lee க்கு வாதாட வருகிறார் Jake Brigance (Mathhew McConaughey) எனற வெள்ளை இன வக்கீல். இவருக்கு உதவியாக நீதித்துறை மாணவியான Ellen Roark (Sandra bullock). உற்சாக-மான மாணவி. இவர்களுக்கு இன்னொரு முன்னாள் வக்கீல் Donald Sutherland துணை புரிகிறார். முற்றிலும் வெள்ளையர்களைக் கொண்ட ஒரு ஜுரி தெரியப்படுகிறது. இதே வேளை இந்த வழக்கு நிறவாதிகளால் பெரிதாக்கப்பட்டு இராணுவம் காவலுக்கு அழைக்கப்படும் வரையில் செல்கிறது. வெள்ளை நிறவாதிகளான Ku Klux Klan குழுவினர் வக்கீலைக் கொலை செய்ய முயற்சிப்பதுடன் வக்கீலுடைய உதவியாளர்களுக்கும் ஏராளமான தொல்லை கொடுக்கிறார்கள். Jake இன் வீடு முற்றிலும் எரிக்கப்படுகிறது. அவருடைய மனைவியும்

பிள்ளையும் பாதுகாப்புக் கருதி வேறிடத்திற்கு அனுப்பி வைக்கப் படுகின்றனர். இறுதியில் ஏராளமான நீதிமன்ற விவாதத்திற்குப் பின் கறுப்பின மனிதனொருவன் வெள்ளை இன ஜுரிக்குமுன் நீதியான தீர்ப்பொன்றைப் பெறமுடியும் எனக் காட்டுகிறார்கள். Carl Lee குற்றமற்றவர் என விடுதலை செய்யப் படுகின்றார். இது தான் கதை.

மோகன்: இது ஏதோ O.J. Simson கேஸ் போலத் தெரிகிறது. நடிப்பு எப்படி?
ரம்யா: Calr Lee Hailey ஆக Samuel Jackson வருகிறார். ஏற்கனவே "Die Heart 3", "Pulpfiction" போன்ற படங்கள் மூலம் பிரமலமானவர். நல்ல நடிகர். ஒரு சாதாரண கறுப்பின தொழிலாளி எப்படி இருப்பான் என்பதைப் படம் பிடித்துக் காட்டுகிறார். Santra Bullock தெரியும் தானே "Speed" ஹீரோயின். தன் பங்கை அற்புதமாய்ச் செய்கிறார். Kevin Spacey அரச தரப்பு வக்கீலாய் வருகிறார் "Seven" திரைப்படத்தில் மொட்டையுடன் பயங்கரக் கொலையாளியாய் வந்தவர். Donal Sutherland பண்பட்ட நடிகர் (இவர் ஒரு கனேடியர்). இவருடைய மகன் Klan இன் முக்கிய புள்ளியாக வருகிறார். கதாநாயகன் Mathew McConaughey இக்கு இது அநேகமாக முதல் திரைப்படம்.அட்டகாசமாய்ச் செய்கிறார். இறுதி விவாதத்தின் போது கண்ணீர் மல்க கதையொன்றைக்கூறி ஜுரர்களின் மனதை மாற்றுவது அற்புதம் என்று சொல்லலாம். Donald Sutherland எப்போதும் உம்மை மாதிரியே வருவார்.

மோகன்: பெரிய நடிகர் எனும் போது தெரியாதா.... நம்ம மாதிரித்தான் இருப்பார்.
ரம்யா: எப்போதும் விஸ்கியுடன் பைத்தியக்காரன் மாதிரி வருவார் எனச் சொல்ல வந்தேன்.
மோகன்: பைத்தியக்காரர்களுடைய உலகத்தில் புத்திசாலியை பைத்தியம் என்று சொல்லுவார்களாம்.அது சரி டைரக்ஷன் எல்லாம் என்ன மாதிரி?
ரம்யா: இயக்குபவர் Joel Schumacher என்ற இயக்குனர் ஏற்கனவே "The Client" என்ற படத்தை இயக்கியிருந்தவர். திறம்பட இயக்கியிருக்கிறார் எனலாம். நீண்ட படம் என்றாலும் அலுப்பின்றி காண்பிக்கிறார்கள். மெதுமையான கமரா.



பெரும்பாலும் கிடைக்கின்ற வெளிச்சத்தைப் பயன் படுத்தியே



(அரச தரப்பு வக்கீல் உட்பட) தமக்கு சாதக-மாக்கி நிறவாதப் பிரச்சினை யாக்குகிறார்கள் என்பதையும் நிறவாதம் எவ்வாறு தோற்கடிக்கப் படுகிறது என்பதையும் காண்பிக்கிறார்கள்.

மோகன்: நம் நாட்டு இனவாதிகளுக்கு இப்படத்தைத் தாரளாமாய் போட்டுக் காண்பிக்கலாம் போலிருக்கிறது. அது சரி Santra Bullock இற்காக நான் இந்தப் படத்தை ஒரு தடவை பார்த்தேயாக வேண்டும். Chance கிடைத்தால் ஒரு Application போட்டுப் பார்க்கலாம் என்றிருக்கிறேன்.

ரம்யா: அவர் ஏற்கனவே இரண்டு நாய்களை வளர்க்கிறாராம்.... அம்மா வருகிறா. C.U...டா

மோகன்: Bye ரம்ஸ்!

பல காட்சிகள் அமைக்கப் பட்டுள்ளன. வக்கீலுடைய அறைக்குள் Blinders க்குள்ளால் வரும் ஒளியில் காட்சி அற்புதம் எனலாம்.

மோகன்: வேறு என்ன ஸ்பெஷல்

ரம்யா: Ku Klex Klanஇன் நடவடிக்கைகள் பற்றிப் பெரிதாகக் காண்பிக்கிறார்கள். இவர்கள் ஏற்கனவே White Power என்று சொல்லிக் கொண்டு திரியும் நிறவெறியர்கள். அமெரிக்கா வெள்ளையருக்கே என்று கூறுபவர்கள். எவ்வித முன்னேற்பாடும் இன்றி நடந்த கொலையை எவ்வாறு நிறவாதிகள்

• சிந்தியா



# சாதனையாளர் 'சனத்'



பௌரல் (Bowral) என்ற கிராமம் எங்கே இருக்கின்றது? என்ற வினாவிற்கான விடை கிரிக்கட் ரசிகர்கள் பலருக்குத் தெரிந்திருக்கும். காரணம் துடுப்பாட்டச் சக்கரவர்த்தி என்று வர்ணிக்கப்படும் டொனால்ட் பிராட்மன் பிறந்த இடம் சிட்னி நகரிலிருந்து 100 மைல் தொலைவிலுள்ளது. அதேபோல் மாத்தறை என்ற இடத்தை உலகிலுள்ள கிரிக்கட் ரசிகர்களுக்குக் காட்டியவர், அண்மைக் காலத்தில் பிரபல்யமான ஸ்ரீலங்கா கிரிக்கட் வீரர் சனத் ஜெயசூரியா. சர்வதேச கிரிக்கட் வல்லுனர்கள் 'சனத்'ஐ சகல துறை ஆட்டக்காரரான கீத்மில்லர், ஹரிசோபர்ஸ், இயன்போதம் ஆகியோர் வரிசையில் வைக்கத் தொடங்கியுள்ளனர்.

வறிய குடும்பத்தில் பிறந்த இவர் மாத்தறை புனித சேவற்றியஸ் கல்லூரியில் கற்கும்போதே 1987இல் அகில இலங்கை பாடசாலை மாணவருக்கான சிறந்த துடுப்பாட்ட வீரர், சகலதுறை ஆட்டக்காரர் என்ற இரு பரிசுகளையும் தனதாக்கிக் கொண்டார். விளையாட்டு அடிப்படை வசதிகளில்லாத பாடசாலையிலிருந்து தனது அபாரத் திறமையை வெளிக்காட்டிய ஜெயசூரியாவை விளையாட்டு அமைச்சு அவுஸ்திரேலியாவில் நடைபெற்ற இளைஞர் கிரிக்கட் போட்டிக்கு அனுப்பியது. அதைத் தொடர்ந்து ஸ்ரீலங்கா 'A' குழுவுடன் பாகிஸ்தான் சுற்றுப் பயணத்தை மேற்கொண்டார். பாகிஸ்தான் A குழுவுடன் நடைபெற்ற மூன்று போட்டிகளில் இருமுறை இரட்டைச் சதத்தைப் பெற்று ஸ்ரீலங்கா தேசிய அணியில் தனக்கோர் இடத்தைப் பிடித்துக் கொண்டார். 1991இல் இங்கிலாந்துக்கு எதிராக லோட்ஸ் மைதானத்தில் தனது முதலாவது சதத்தைப் பெற்றார். 1991/92 இல் பாகிஸ்தானுக்கு எதிரான டெஸ்ட் தொடரில் சராசரியாக 79.3ஐப் பெற்று தனது அந்தஸ்தை மேலும் உயர்த்திக் கொண்டார். அவுஸ்திரேலியாவில் அடிலொயிட் மைதானத்தில் தனது டெஸ்ட் வாழ்வில் மறக்கமுடியாது எனக் கருதப்படும் 112 ஓட்டங்களைப் பெற்றார்.

வாசு

'டெஸ்ட்" ஆட்டங்களைவிட வரையறுக்கப்பட்ட ஓவர்களைக் கொண்ட போட்டிகளில் இவரது சாதனைக்கு நிகர் இவரேதான். சிங்கப்பூரில் அண்மையில் நடைபெற்ற சிங்கர் கோப்பைக்கான போட்டிகளின் போது பாகிஸ்தானுக்கெதிரான முதலாவது போட்டியில் 48 பந்துகளில் 100 ஓட்டங்களைப் பெற்று புதிய உலக சாதனையை ஏற்படுத்தினார். இதில் 11 பந்துகளை எல்லைக்கோட்டுக்கு மேலால் (சிக்ஸர்) அடித்து இன்னுமொரு சாதனையை ஏற்படுத்தினார். ஐந்து தினங்களுக்குப் பின்னர் நடைபெற்ற இறுதிப் போட்டியில் 17 பந்துகளில் 50 ஓட்டங்களைப் பெற்று இன்னொரு உலக சாதனையை ஏற்படுத்தினார்.

ஒரு ஓவரில் 29 ஓட்டங்களை எடுத்ததும் ஒரு உலகசாதனையே.

இவரது ஆரம்ப துடுப்பாட்ட ஜோடியான களுவித்தாரணவுடன் சேர்ந்து 5-2 ஓட்டங்களைப் பெற்றது, இவர் மட்டையைக் கையாளும் திறமையைக் கட்டியம் கூறுகின்றது. 'களு' 11 பந்துகளில் ஒரு ஓட்டத்தையேனும் பெறாதது குறிப்பிடத்தக்கது. 'சனத்' சாதனை நிகழ்த்திய சிங்கப்பூர் 'படாருப் மைதானத்தின் பரப்பளவு மிகப் பெரிதானதல்ல என்ற கருத்து நிலவியது. சர்வதேச போட்டிகளை நடத்தக்கூடிய வேறு மைதானங்களின் பரப்பளவிற்கு சமமானதாகவே இது இருந்தது என்று சர்வதேச கிரிக்கட்சபை கூறியது. இதே போட்டியில் தென்டுல்கார், அசாருதீன், இன்சுமாமும் ஹக் அமர் சொகில் ஆகியோரும் கலந்து கொண்டனர் என்பது குறிப்பிடத்தக்கது. இறுதிப் போட்டியில் ஸ்ரீலங்கா அணி தோல்வியைத் தழுவிய போதிலும் தொடருக்கான சிறந்த வீரருக்குரிய பரிசை சனத்ஜெயசூரியா பெறத் தவறவில்லை.

1996 உலகவெற்றிக் கிண்ணத்திற்கான போட்டிகளே இவருக்கு சர்வதேச அந்தஸ்தைத் தேடிக் கொடுத்தது. 10 ஓவர்கள் லாவகமாகப் பந்து வீசுவது மட்டுமல்லாது பந்து தடுப்பதிலும் வல்லவராகத் திகழ்ந்தார். இந்த இங்கிலாந்துக்கெதிரான கால் இறுதிப் போட்டியில் 47 பந்துகளில் 82 ஓட்டங்களைப் பெற்றுபந்து வீச்சாளர்களைத் திணறடித்தார். இவ்வாட்டத்தைப் பற்றி இங்கிலாந்து அணித்தலைவர் மைக்கல் அதெற்றன் பின்வருமாறு கூறினார்,
"மற்றைய அணிகள் கடைசி 15 ஓவர்களில் ஆடுவது போல, ஸ்ரீலங்கா அணி முதல் 15 ஓவர்களை ஆடுவதே அவர்களின் வெற்றிக்குக் காரணம்".
உலகக் கிண்ணப் போட்டிகளில் மொத்தமாக 212 ஓட்டங்களை 161 பந்துகளில் எடுத்ததன் மூலம், மிகவும் பெறுமதிவாய்ந்த வீரராக தென்டுல்கார், மக்வா, லாரா, அரவிந்த டீ சில்வா என்பவர்களுக்கு மேலாக தெரிவு செய்யப்பட்டார். பாடசாலைப் போட்டிகளிலோ அல்லது நகரங்களுக்கிடையிலான போட்டிகளிலோ ஒருவர் "அடியடா மச்சான்" என்று சொல்ல; ஒரு குழுவினர் 'பவுண்டரி, சிக்ஸர்' என்று உற்சாகமூட்டுவர். அதைச் சர்வதேச போட்டிகளில் நிரூபித்து வருகின்றார் 'சனத்'. 1994ஆம் ஆண்டு நியூசிலாந்துக்கெதிரான ஒருநாள் போட்டியில் இவர் பெற்ற 140 ஓட்டங்கள், அண்மையில் டீ சில்வாவினால் முறியடிக்கப்பட்டது. இருந்தும் 1993ஆம் ஆண்டு இங்கிலாந்து அணிக்கு எதிராக 29 ஓட்டங்களைக் கொடுத்து 6 விக்கட்டுகளை வீழ்த்தியது இன்னும் ஸ்ரீலங்காவின் சாதனையாக இருந்து வருகின்றது.

இரு வருடங்களுக்கு முன் முதல்தர போட்டியொன்றில் 10 மணிநேரம் ஆடி ஒரு சதத்தைப் போட்டார். இதன் மூலம் மட்டையை எப்போதும் விசுக்குபவர் என்று சொல்பவர்களுக்கு சாட்டையடி கொடுத்தார்.

27 வயதுடைய பிரமச்சாரியான இவர் வெட்கம் நிறைந்த சுபாவமுடையவர். அடுத்த ஆண்டு திருமணம் செய்ய இருப்பதாக கூறுகின்றார். உலக சாதனைகளில் சிலவற்றை ஸ்ரீலங்கா வுக்குள் கொண்டு வந்த பெருமை சனத் ஜெயசூரியாவையே சாரும்.




உங்கள் சபேசன் கொள்வனவு விலையில் தரும்
அதிவேகத்தில் மணம் அகற்றும் அடுப்புக்கூடு

சபேசனின்

# SABESAN'S

LOW COST



அதிசக்தி வாய்ந்த, நொடிப் பொழுதில் புகைபோக்கியினூடு வெளியேற்றிவிடும் சக்தி கொண்டது.

# RANGEHOOD



சமையல் செய்யும் பகுதியில் வரும் காரம், மணம் நிறைந்த வாசனையை நொடிப்பொழுதில் வெளியேற்றும் உபகரணம்.

From **$199** +Tax

**BUILDERS OF CUSTOM HOMES & MANUFACTURERS OF KITCHEN CABINET & FURNITURE**

கொள்வனவு விலையில் முதல் 1000 உபகரணங்களை இவ்வாண்டில் வழங்குவதே எமது திட்டமாகும்.

**Tel: (416) 605 1990**

**EVERYTHING YOU NEED FOR YOUR HOME IMPROVEMENT UNDER ONE ROOF**

**SABESAN'S** LOW COST INTERIOR, 721A Progress Ave., Scarborough ON